இமயத்தின் இன்பமாம் அலகாநந்தாவும் மங்களம் செயும் பாகீரதியும் ஒன்று கலந்து மெய்ப்பொருளாமிறைவனின் திருவடிதழுவி கங்கை எனும் பெயர் கொண்டவள் [1]; நதிகளில் தலை சிறந்தவள். 7

யோகநிஷ்டையை (உள்ளுள் ஒன்றலை) நன்கு வளர்ப்பவள்; இந்த யோகினியின் இதயத்தில் இனிய நாதத்தை இசைப்பவள்/இதயநாதத்தின் இன்னிசை ஆனவள்; நன்மையை அருள்செய்து வளர்க்கும் கங்கை; யோகங்களுள் யோகமான இன்னிசை எனும் நாதயோகத்தினை அருள்பவள். 8

பனியில் பிறந்தவள்; இமயத்தின் இன்பம்; இமயத்தின் அழகே/இசையே ஆனவள்; இமயமே கோவிலானவள்; பனிக்கதிர் மதி சிரித்திடும் பால் வெள்ளமானவள்; இமயமெனும் கொண்டலில் கொடிமின்னலானவள். 9

பனிப்புல்லரிப்புச் செய்திடும் இன்னீர் கொண்டவள்; இமயத்தை விளையாட்டுத் தோட்டமாகக் கொண்டவள்; உள்ளத்திற்கு உவகையூட்டுபவள்; எனது இன்பம்; நல்லறிவு படைத்தோர்க்கு இன்பமூட்டுபவள் / நல்லறிவும் இன்பமும் அளிப்பவள்; கவலைகள் முடிவுக்குக் காரணமானவள். 10

இமயத்தின் இசைலயமான/இமயத்தின் அழகோடு ஒன்றிய கங்கை; இக்கவிதை எழிலில் நடமிடும் இன்னீர் கொண்டவள்; இமயத்தின் இன்பமே நீர்வெள்ளமாக இன்னீர் கொண்டவள் / இன்பமும் எழில்நடமிடும் கவிதை ஒளி உயிர்ப்பும் அருள்பவள்; உள்ளத்தையும் உடலையும் நன்கு தூய்மை பெறச்செய்பவள். 11

தீவினைவெள்ளத்தை அடித்துச் சென்றிடும் கங்கை; நாத வெள்ளம் பெருக்கெடுத்தோடச் செய்பவள்; அலுப்பினை அடித்துச் சென்றிடும் திவ்யவெள்ளமானவள்; இவ்வாக்குவெள்ளத்தால் நன்கு பூஜிக்கப்பட்டவள். 12

(தன்னில்) நீராடல் ஆத்மானுபவமும் ஆனந்தமுமாக அமைந்தவள்; பருகிடலில் இறைவன் திருநாமத்தின் சுவைதனை அளித்திடுபவள்; த்யானத்தில் ஒன்றலையும் ஆழமைதிதனையும் அருள்பவள்; உள்ளம் படிகம்போல் தெளிந்திருக்க நீராடல் அருள் செய்பவள். 13

இன்னிசைக் குரல் எழிலோள் / இன்னிசைக் குரலழகு அருள்பவள்; குதித்துக் கும்மாளமிடும் அலைகளின் ஒளி பொருந்தியவள்;

[1] தேவப்ரயாகையில் அலகாநந்தாவும் பாகீரதியும் கலந்து கங்கை என்று பெயர் பெறுமிடத்து அமைந்துள்ளது ஸ்ரீரகுநாதஸ்வாமியின் மிகப்பழைய கொவில்

மென்மையானவள்; வலிவு மிக்கவள்; பேராற்றலானவள்; மடியில் இம்மகவினைத் தாலாட்டுபவள். 14

விடியலில் மூடுபனியால் போர்த்தப்பட்டு வெண்மையாக விளங்குபவள்; நண்பகல் கதிரவனொளியில் வைரமென ஒளிர்பவள்; மாலை மருளில் தங்கமென மின்னுபவள்; இரவில் விண்மீன் நிலவொளியில் மின்னலாய் ஒளிவீசுபவள். 15

இன்னொலியும் மிக்க எழிலும் பொருந்தியவள்; உள்ளத்தையும் வாக்கினையும் தூய்மை பெறச்செய்பவள்; நிலைத்த இன்பப்பதவியை அடையச்செய்பவள்; என்றும் இளமை எழிலுடன் ஒளிர்பவள். 16

ராமநாமமெனும் மலரின் இன்பமானவள்/மலரில் இன்புறுபவள்; ராமனாலும் க்ருஷ்ணனாலும் போற்றப்பட்டவள்; ராகதாளத்திற்கு இருப்பிடமான கங்கை; 'ஓம்'கார ஶ்ருதியுடன் இன்னிசைப்பவள். 17

நாதப்ரம்மனுடன் ஒன்றுபட்ட கங்கை; நாதத்தின் இன்பமானவள்; லயத்தின் அடைவிடமானவள்; ஸ்ரீத்யாகராஜ குருஸ்வாமியின் ஶிஷ்யையான புஷ்பாவினால் புகழ்ந்து வணங்கப்பட்ட, மிகச்சிறந்தவள். 18

இயற்கை எழில் வியனுற அமைந்தவள்; அன்னை கங்கை; நான், எனது எனும் உணர்வுகளை அழிப்பவள்; செருக்கினைத் தகர்ப்பவள்; நல்லறிவூட்டுபவள்; அன்னை கங்கை; அழகும் மங்களமும் பொருந்தியவள். 19

எந்தன் இன்பமே! மிக மங்களமானவளே! இந்த ஸ்தோத்ரம் நிந்தனுக்கு அர்ப்பணம்! அன்னை கங்கையே, நினக்கு நமஸ்காரம்! நிந்தன் சரணை நாடி வந்திட்டேன்! 20

இந்த கங்கா ஸ்தோத்ரம் குருவின் மொழியாகும்; எல்லாத் தீவினைகட்கும் மாற்றாகும்; பக்தியுடன் படித்தலும் கேட்டலும் கங்கை நீராடற்பயன் அளித்திடும் (கங்காஸ்னானம் இம்மை மறுமைப் பயன்களை அளிக்க வல்லது).

மங்களம்

ஸ்ரீ

ஓம் ஸத்குரு ஸ்ரீத்யாகராஜஸ்வாமிக்கு மீண்டும் மீண்டும் நமஸ்காரம்.

# ஸ்ரீகங்காஸ்தோத்ரம் – 2.

த்யானம்

இடைவிடா இன்பமாய்ப் பெருகி ஓடுபவளே! தெய்வீகமானவளே! கண்ணுக்கினியவளே! மங்களம் அருளிடும் கங்கையே! எனக்கு அருள் செய்திடுவாய்! உனக்கு நமஸ்காரம்!

த்யாகராஜ குருஸ்வாமியின் மெய்யுருவே! குளிர்ச்சியானவளே! மங்கள-மானவளே! இந்த ஸ்தோத்ரத்தைப் பொழியச் செய்தவளே! தேவி! இச்சொல்மழையினுல் வழிபடப்பட்டவளே!

ஞானவெளியிலுதித்த கங்கை; நாத இன்பம் பெருக்கெடுத்தோடுபவள்; அறியாமையையும் தீவினையையும் அழிக்கும் தேவி; நல்லறிவு வழியில் நடத்துபவள். 1

த்யானத்தில் நிலைத்த இவ்வுள்ளத்துள் ஓடும் கங்கை; த்யானிக்கப்படுபவள்; இணையற்ற போக்கினள் / இணையில்லா இசையினள்; இன்பமான இன்னிசையால் நன்கு போற்றப்படுபவள்; உண்மை இசையின் ஸாரமானவள். 2

விண்ணினின்றிழிந்த சிறப்புடையவள்; பனிமலையினின்று அருவியாய்ப் பொழிபவள்; இவ்வுலகிற்கப்பாற்பட்ட அமைதியினை அருள்பவள்; கரை காணு இன்பமும் நீடமைதியும் அருள்பவள். 3

நீர்வடிவில் பராஶக்தி; கண்முன் புலப்படும் முழுமுதற்பொருளானவள்; நல்லுள்ளத்தில்/நல்லுள்ளத்தின் இன்பம் பெருக்கெடுத்தோடுபவள்; இன்பமான இவ்வாக்கின் வடிவே ஆனவள். 4

கௌரீபதியின் ஜடாமுடியில் விளையாடுபவள்; வாக்தேவியாம் ஸரஸ்வதியின் அருள்பெறச்செய்பவள்; இச்சொல்வெள்ளமாய்ப் பெருக்கெடுத்தோடும் கங்கை; இவ்வாக்கினுல் நன்கு அர்ச்சித்து வழிபடப்பட்டவள். 5

நீர்வடிவானவள்; தாமரையின் நண்பனின் (ஸூர்யனின்) ஒளி ப்ரகாசிப்பவள் / திருமகள், திருமகள் கேள்வன் இருவரின் ஒளியும் பொருந்தியவள்; தாமரையின் பகைவனும் தண்மதி ஒளிரும்

தண்ணீருடையவள்; திருமகள் கேள்வனால் புகழப்பட்ட அன்னை; தாமரையில் அமர்ந்திட்ட நான்முகனால் நன்கு போற்றப்பட்டவள். 6

உலகியற்பொறிப்புக்களை அடித்துச்செல்லும் கங்கை; ஸாரத்துள் ஸாரமான அமுதநீர் கொண்டோள்; சேற்றில் அலர்ந்த செந்தாமரை நிகர் கண்களுடை இறைவன் துழாவிடும் நீர் வெள்ளமானவள்; கம்ஸனின் பகைவனும் கண்ணன் புகழ்ந்திட்ட சிறப்புடையவள். 7

'நானே அவன் – அவனே நான்' எனும் லயமே தானான/லயத்தை உண்டுபண்ணும் கங்கை; இமயத்திலுதித்தவள்; வெண்ணிற அன்னமாம் பரம்பொருளின் தூய வடிவினள்; ஸச்சிதானந்த மங்களமே ஆனவள் (மெய், அறிவு, இன்பம் இவற்றின் நல் மங்கல வடிவினள்) / ஸச்சிதானந்த ஸௌபாக்யத்தை அருள்பவள்; அழகும் மங்களமுமே உருக்கொண்டவள். 8

இமயத்திலுதித்த கங்கை; இமயத்தின் மடியில் இன்புடன் தவழ்ந்து விளையாடுபவள்; இமயமலைக்கு ஒளியும் அழகும் ஊட்டுபவள்; அழகொளிர் சிறப்புமிகு நதியானவள். 9

ஆய்ந்தறியா ஆழமுடையவள்; மிக்க விரைவுடையோள்; உள்ளத்தைக் கொள்ளை கொள்பவள்; இன்னீருடையவள்; மிகவும் குளிர்ச்சியானவள்; தூயவள்; மெய்யறிவெனும் நற்பலனருள்பவள். 10

பனிக்குகையினின்று வெளிப்படுபவள்; காண்பதற்கு உவகைப் புல்லரிப்பூட்டுபவள்; பனியே ஆன தண்ணீர் வெள்ளமானவள்; தொட்டுணர்விற்குப் பட்டின் வழவழப்பும் மென்மையும் பொருந்தியவள். 11

பனிக்கோயிலெனும் இமயமே கோவிலான கங்கை; அலைகள் கூத்திட அழகொளிர்பவள்; பனித்தண்மைமிக்க தூய வெண்ணீருடையவள்; உலகியல் அடையாளங்களைக் கழுவிடுபவள். 12

ஆரவாரப்பெருக்கிட்டுக் குதித்தோடும் இன்பமானவள்; இமயத்தின் செல்வப்புதல்வி; பனிமலையின் குறுக்கும் நெடுக்குமாய்ப் பாய்பவள்; கரை புரண்டோடும் விரைவுப்பெருக்கானவள். 13

பனிமங்கை; பனிவெள்ளமானவள் / பனிமலையில் குதித்தோடும் பெருக்கானவள்; துளைந்திடும் இவளுக்கு மிக்க இன்பமூட்டுபவள்; தனது அமுத நீருக்குத் தணியாதாகம் உண்டுபண்ணுபவள்; விஷயதாகத்தினைத் தணித்திடும் சிறந்த நன்னீரானவள். 14

அச்சுறுத்தும், பனியே ஆன குளிர் நீருடையவள்; குறும்பானவள்; மிக்க அன்புக்குரியவள்; உடைந்த உள்ளத்திற்கு இதமானவள்; இவ்வுள்ளத்தில்/இவ்வெண்ணங்களில் களிநடம் புரிபவள். 15

நல்வழிகாட்டும் கங்கை; இன்னிசை எழிலானவள் / இங்கு நன்கு பாடப்படும் எழிலொளியானவள்; உள்ளொளியில் ஈடுபடச் செய்பவள்; இன்னிசையின் மிகுந்த இன்பமே ஆனவள்/இன்பத்தை உண்டுபண்ணுபவள்; மென்ஞெலியால் இதம் புரிபவள். 16

அகந்தையினை அழித்திடும் கங்கை; இவ்வுலகிலேயே இன்பந்தருபவள்; மங்கலமும் பேரின்பப் புல்லரிப்பும் உண்டுபண்ணுபவள்; பரம்பொருள் வடிவே ஆனவள். 17

பரம்பொருளை உணர்ந்தோரின் உள்ளத்து இன்பமானவள் / பரம்பொருளை நேரில் உணரும் இன்பமளிப்பவள்; பேரின்பத்தில் ஒன்றும் நிலையினை உண்டுபண்ணுபவள்; கங்கை அன்னை; என் இன்பம்; இரண்டற்ற இன்பநிலை கைகூடச்செய்பவள். 18

இரண்டற்ற நிலையின் உணர்வே பெருக்கானவள்; இரண்டற்ற இன்பம் எய்தச்செய்பவள்; இரண்டற்ற நீரினிமை பொருந்தியவள்; இரண்டற்ற விரைவுப் பெருக்கானவள். 19

இரண்டற்ற அமுதச்சாறெனும் நீருடையவள் / இரண்டற்ற உயர்நிலையின் ஸாரமே ஆனவள்; இரண்டற்ற நிலையெனும் மெய்யறிவு வழி நடத்துபவள்; இரண்டற்ற, ஆத்மலயமெனும் மெய்யுணர்வின் ஒன்றலில் துணை செய்பவள்; எப்பொழுதும் ஓடிக்கொண்டே இருப்பவள்; இரண்டற்ற நிலையினை எய்துதற்குத் துணையானவள். 20

மெய்யறிவும் இன்பமுமே ஆன இன்னீர் நிறைந்தவள்; முழுமை இன்பம் பெருக்கெடுத்தோடுபவள்; குறையை நிறையாக்கும் நீர் கொண்டவள்; நிறைகுறைகளை நன்கு அறிவுறுத்துபவள். 21

உள்ளத்தை நிறைக்கும் ஆற்றல் நீர் நிறைந்தவள்; முழுமைநிலையினின் தெள்ளிய வடிவானவள்; மங்களத்தை வளர்க்கும் கங்கை; மங்களமான உவகையூட்டும் கோமுகத்திலுதித்தவள். 22

வாக்குக்கப்பாற்பட்ட கங்கை; இவ்வாக்கில் ஒளிரும் எழில் மின்னுபவள்; வியப்பும் உவகையும் ஊட்டும் எழில்படைத்தோள்; வைரம், முத்தென ஒளிர்விட்டு பளபளப்பவள். 23

பொன்னுடை உடுத்திய கங்கை; அமுத வாக்காய்ப் பெருக்கெடுத்தோடும் மங்கள தேவதை; விஷ்ணுவின் திருப்பாதங்களில் அபிஷேகிக்கப்பட்ட நன்னீர் உடையவள்; கௌரீகுண்டத்தில் உவகைப் புல்லரிப்பூட்டுபவள். 24

பனித்துளிகளைத் தெளிக்கும் நீர்வீழ்ச்சியானவள்; வானவில்லின் வண்ண எழிலொளியுடையவள்; ஏழிசை ஒலிகளின் இனிமை படைத்தவள்; ‘ஓம்’காரத்தை உவகையாயொலிப்பவள். 25

சுற்றிச்சுழன்றோடும் நீர்கொண்டவள்; திகிலூட்டும் எழிலும் தூய ஒளியும் படைத்தவள்; சந்தன அருவியாகப் பொழியும் வனப்புடையவள்; சந்தனக்குழம்பாய்ப் பெருகி ஓடுபவள்; பேரின்பஸாரமே ஆன அமிழ்தாம் தண்ணீருடையவள். 26

கௌரீகுண்டத்திலுள்ள பாறைகளிலும் பிளவுகளிலும் தெய்வீக உருவங்களைச் செதுக்கிய சிற்பியானவள்; த்ரிவிக்ரமனாய் அவதரித்த பெருமாளின் பெருந்திருவடிதனையும் ஆனைமுகத்தோனின் சிரிக்கும் வடிவினையும் பாறைப்பிளவுகளில் நன்கு செதுக்கியுள்ளோள்; சிவனை அபிஷேகிக்கும் நன்னீருள்ள[1], மங்கலமானவள்; இத்திருநாம மலர்களால் அர்ச்சிக்கப்பட்ட கங்கை; இத்திருநாமங்களின் இன்பமே உருவானவள். 27-28

ஆழ்ந்து குறுகிய மலைச்சந்துகளில் ஸூர்யனாலும் பார்க்கப்படாதவள்; சமநிலத்தில் ஆழியெனப் பரந்தவள்; அலைகள் உயர்ந்து நடமிடும் வெள்ளமானவள்; அழகிய, இன்பமூட்டும் அலைகள் நிறைந்தவள். 29

தொலைவினின்று வெகு சாதுவாய்க் காணப்படுபவள்; அருகினில் மிகவும் அச்சத்தை உண்டுபண்ணுபவள்; திகிலூட்டுபவள்; பீஷ்மரை வளர்த்தவள்; இப்புதல்வியின் துதியில் மகிழ்பவள். 30

துயர்தனைப்போக்கிடுபவள்; மங்கள கங்கை; எல்லா நோய்களுக்கும் தடுப்பானவள்; உள்ள, உடல்தூய்மையில் இருப்பவள்; தூய இன்ப வடிவினள். 31

உள்ள வெம்மையைப் போக்கிடும் கங்கை; உள்ளத்தினாலும் இச்சொற்களினாலும் நன்கு பூஜிக்கப்பட்டவள்; இம்மகளின் குருதி நாளங்களில் ஓடுபவள்; அவள் உள்ளத்தில் நன்கு கலந்தவள். 32

அவளது அந்தராத்மாவில் நன்கு ஒன்றியவள்; பேரின்பம் அளிப்பவள்; எல்லையற்ற ஆத்மஶக்தியின் வெளிப்பாடானவள்; வெளிப்படா இன்பத்தின் உருவானவள். 33

[1] கௌரீகுண்டத்தில் நீர்வீழ்ச்சிக்கு அடியே ஶிவலிங்கமுள்ளதாக ஐதீகம்

உள்ளுறை பண்ணும் லயமும் ஆன கங்கை; பலவண்ணங்களில் எழிலுறுபவள் / பலவண்ண ராகங்களின் அதிதேவதையானவள்; இன்னிசை இன்பம் பெருக்கெடுத்தோடுபவள்; இன்னிசை அர்ச்சனையுடன் நன்கு துதிக்கப்படுபவள். 34

உள்ள உடல் துன்பத்தைப் போக்குபவள்; தங்க மயமானவள்; முவ்வகைத்துன்பங்களை[2] அழிப்பவள்; மழைவடிவில் புலப்படுபவள்; இச்சொல்மழையில் பெருக்கெடுத்தோடும் சிறப்புடையவள். 35

வினைப்பொறிப்புக்களைக் கழுவிடும் மழையானவள்; இன்ப அமிழ்தினை மழையாகப் பொழிபவள்; அமுதைப் பொழியும் வாக்கு வடிவானவள்; இன்பமழை பெருக்கெடுத்தோடுபவள். 36

முவ்வகைத் துன்பங்களையும் போக்கிடும் தேவி! தூயவளே! மூவுலகங்களிலும் செல்பவளே! அன்னை கங்கையே! உனக்கு நமஸ்காரம்! என்னுள்ளே பெருக்கெடுத்தோடுபவளே! நற்சேர்க்கையானவளே! பாட்டின் இன்பமானவளே! கங்கையே! நல்லறிவு புகட்டிடுபவளே! நல்மங்கலமருள்பவளே! இந்த ஸ்தோத்ரம் நின் திருப்பாதங்களைச் சுற்றியே ஓடிடும்/நின் திருப்பாதங்களின் வழிபாடாகும். 37-38

ஸ்ரீத்யாகராஜ குருஸ்வாமியின் ஸங்கீதத்தை மகிழ்வுடன் பயின்றிடும் சிஷ்யை புஷ்பாவினுல் இயற்றப்பட்ட இந்த ஸ்தோத்ரம் கங்கையின் மகிழ்வாகும்; குருவுக்குகந்ததாகும்; முப்பத்தாறு மடல்கள் கொண்ட மணமிக்க இப்புஷ்பத்தால் அர்ச்சிப்பது மங்கலமான வழிபாடாகும். இதனை இசைக்கும் மாந்தர்க்கு எல்லாத் தீவினைகளும் அகன்று மங்களம் உண்டாகும். 39-40

மங்களம்

[2] தன்வினை, சூழ்வினை, ஊழ்வினை இவற்றால் உண்டாகுபவை

ஸ்ரீ :

ஓம் ஸத்குரு ஸ்ரீத்யாகராஜஸ்வாமிக்கு மீண்டும் மீண்டும் நமஸ்காரம்.

# ஸ்ரீகங்காஸஹஸ்ரம்.

த்யானம்

ஓம்கார வடிவான தேவி! நாதத்தின் இனிய அமைதியுள்ளிருப்பவளே! கங்கையே! புனிதத்தின் மறுபெயரே! உனக்கு நமஸ்காரங்கள்! எனக்கு அருள் புரிவாய்!

இந்த உன் புதல்வியின் உள்ளத்தின் இன்பமானவளே! நாள்தோறும் நின்னை நினைகிறேன்! இப்பிறவிச்சுழலில் துன்புற்றிருக்கிறேன்! தொட்டுத்தணிவிப்பாய்!

அம்மா! உன் வடிவை நினைகிறேன்! காலையில் உன் நீரை நினைகிறேன்; மாலையில் நின் அமைதியினை நினைகூர்கிறேன்; (இந்த) என் காணிக்கையினை ஏற்றுக்கொள்வாய்!

கங்கை; மங்களத்தோடிணைந்தவள்; ‘ஓம்’கார நாதத்துடன் பாய்பவள்; மூலாதாரத்தினின்றெழும்பும் நாதவெள்ளமானவள்; ஸஹஸ்ராரத்திலிணைபவள். 1

இடா, பிங்களா எனும் நாடிகளுக்கு நடுவில் இருப்பவள்; ஸுஷும்ணா நாடியில் ஸூக்ஷ்மமாய்(நுண்மையாய்)ப் பாய்பவள்; அனாஹதத்தில் ஒலிக்கும் நாதமானவள்; மெய்நிலை அறிவினை அருள்பவள். 2

சுரிமுனை ஆற்றல் (குண்டலினீ) வடிவானவள்; மங்கல ஆற்று வடிவானவள்; உந்தியினின்று நெஞ்சு, தொண்டை வழி நாவினின்றெழும் ‘ஓம்’காரநாதமாய்ப் பெருக்கெடுத்தோடுபவள். 3

நாதமாம் இறைவனோடிணைந்தவள், வழிநடத்துபவள் / நாதமாம் இறைவனில் லயிக்கும் இவ்வுள்ளத்தை வழிநடத்துபவள்; இடைவிடாது ஓடிக்கொண்டிருப்பவள்; நாதப்ரம்மமே ஆனவள்; நல்லறிவு நல்குபவள்; ஸத்குரு ஸ்ரீத்யாகப்ரம்மத்தினிடம் பேரன்பு பூண்ட/ ஸத்குரு ஸ்ரீத்யாகப்ரம்மத்தின் பேரன்பைப் பெற்ற புஷ்பாவினால் துதிக்கப்பட்டவள்; நன்மங்களத்தை அருள்பவள். 4

குருதேவரினின்று வேறல்லா கங்கை; குருதேவருடன் ஆன்மாவின் ஒன்றுதல் அருள்பவள்; குருதேவரின் ஒப்புயர்வற்ற வித்தையே ஆனவள்; (இங்கு) குருவணக்கத்துடன் வணங்கப்பட்டவள். 5

குருவின் வாகமுதத்தில் பாய்பவள்; குருவின் இசையில் இசைந்திருப்பவள்; குருவின் அருளுடன் இங்கு பாடப்பட்டவள்; சிஷ்யை புஷ்பாவின் இத்துதியில் நிலைத்திருப்பவள். 6

குருவின் அமுதவாக்காய்ப் பொழிபவள்; குருவின் தூய குணத்திலிருப்பவள்; குருவின் அருட்பெருக்காக ஓடும் கங்கை; குருவருளினுல் நன்கு தர்ஶிக்கபட்டவள். 7

குருவின் இசையில் பளிச்சிடும் மெய்யறிவானவள்; குருவின் இசை, தாளம் இவற்றில் ஒன்றியவள்; குருவின் உவகை தரும் சொல்லாகவும் பொருளாகவும் இருப்பவள்; ஸ்ரீத்யாகராஜக்ருதிகளில் உறைபவள். 8

குருவை ஸ்மரித்துக்கொண்டே (இந்த ஶிஷ்யையால்) நீராடப்பட்டவள்; குருவருட்கிளர்ச்சியினுல் நன்கு துதிக்கப்பட்டவள்; குருபாததீர்த்தத்தின் ஆஶி வழங்குபவள்; குருதர்ஶனத்துக்குக் காரணமானவள். 9

ஸத்குரு ஸ்ரீத்யாகப்ரம்மத்தின் இசைகங்கையாய் நடம் புரிபவள்; குருவின் வாக்கெனும் அழகிய வடிவுடை கங்கை; நாதகங்கை; எனது மகிழ்வானவள்; நாதமாம் நல்மங்களத்தை நல்குபவள். 10

‘ஓம்’காரநாதமிசைக்கும் பெயருடையவள்; நாதத்தை த்யானிக்கும் இவ்வுள்ளத்திலிருப்பவள்; நாதத்தை உபாஸிக்கும் இவ்வுள்ளத்து நாதமானவள்; நாத அமுத அருவியானவள். 11

நாதபக்தையின் இவ்வாக்கின் உட்பொருளானவள் /இவ்வாக்காகவும் பொருளாகவும் இருப்பவள் / இந்த நாதபக்தைக்கு மங்கல வாக்கெனும் செல்வத்தை அருளியவள்; இவ்விசைச்சொற்களால் பூஜிக்கப்பட்டவள்; இசையை வழிபடும் இவ்வுள்ளத்தில் உள்ளவள்; இசையினிய குரலில் ஏத்தித்தொழப்பட்டவள். 12

‘ஓம்’கார நாதத்தில் ஒன்றிய கங்கை / ‘ஓம்’கார நாதத்தின் அமைதியை அருளும் கங்கை; இசைவழிபாட்டில் வழிநடத்துபவள்; நாதப்ரம்ம இன்னெலி வடிவானவள்; நாத அரசி; நதிகளிற்சிறந்தவள். 13

ப்ரணவநாதமே பெயராய் அமைந்தவள்; ‘ஓம்’கார நாதத்துள்ளிருக்கும் இசைலயம் ஆனவள்; நாத அமைதிக்குள்ளிருக்கும் அன்னே; ‘ஓம்’கார நாதமே வடிவானவள். 14

நாதத்துள்ளிருக்கும் அமைதியே ப்ரவஹிப்பவள்; அமைதியான மென்னெலி படைத்தவள்; இசை வழிபாட்டில் இன்புறுபவள்; நாத இனிமையில் உறைபவள்/ நாத இனிமைக்கு இன்மணமூட்டுபவள். 15

நாதத்தை வேண்டும் இவ்வுள்ளத்தில் உறையும் சொல்லின் அரசி; நாதத்தை நாடும் இவ்வுள்ளத்தில் ப்ரவஹிப்பவள்; லய அமைதியுடன் பெருக்கெடுத்தோடுபவள்; 'ஓம்'கார லயத்துடன் நடமிடுபவள். 16

'ஓம்'கார ஒலியுடன் நன்கு ஒன்றியவள்; 'ஓம்'காரத்தை ஒலியாகக்கொண்ட மங்களமானவள்; நாதப்ரம்மத்தின் வடிவானவள்; ஒலியில் ஒன்றிய இவ்வுள்ளத்தைக் கவர்பவள். 17

மென்னொலியின் இனிமையானவள்/இனிய மென்னொலி படைத்தவள்; முன்னொலியான ப்ரணவத்தின் வடிவானவள்; ஒலிக்கப்பாற்பட்டவள்/சொல்லுக்கப்பாற்பட்டவள்; இனிய மங்களமான ஒலி படைத்தவள்; தீய ஒலிகளாம் அரக்கர்களை ஒழிப்பவள். 18

இன்னா ஓசைகளெனும் அரக்கர்களை அழிப்பவள்; தனித்த முன்னொலியாம் 'ஓம்'கார இன்னொலியுடையவள்; இன்னொலியுடன் சிறந்து ஒளிர்பவள்; இன்னொலி இசை இன்பம் அளிப்பவள். 19

இச்சொற்களின் வடிவும் இன்னிசையுமானவள்; இன்னிசைவிரும்பியின் இச்சொற்களில் ஒளிர்பவள்; இக்கவிதையில் நடமிடு எழிலாய் ஒளிர்பவள்; இவ்வின்னிசைக் கவிதையாய் பெருக்கெடுத்தோடுபவள். 20

ஆயிரம் பெயர்களால் புகழ்ந்து பாடப்பட்டவள்; பாடப்பட்ட இன்பெயர்களில் மகிழ்பவள்/மகிழ்வூட்டுபவள்/வண்ண அழகுடன் பொலிபவள் / இனிது பாடப்பட்ட இப்பெயர்களை உடைய ராக தேவதை; கங்கையெனும் அழகிய இன் பண் பெயருடையவள்; இறைவன் திருநாமங்களைப் பாடும் நல்வழி நடத்துபவள். 21

விண்ணுலகினின்றிறங்கியவள்; விண்ணுலக அமுதினைப் பொழிபவள்; 'ஓம்'கார ஶ்ருதியின் மெய்ச்சாறானவள் / 'ஓம்'கார ஶ்ருதி செய்யும் அமுதப் பெருக்கானவள்; 'ஓம்'கார ஒலியுடன் பொங்கிப்பாய்பவள். 22

'ஓம்'காரத்தின் நீர்வடிவானவள்; 'ஓம்'காரத்தை ஒலிப்பவள்; 'ஓம்'கார அமைதியே ஆன கங்கை; 'ஓம்'கார லயத்துடன் ப்ரவஹிப்பவள். 23

'ஓம்'கார உட்கருவினுள் உள்ளவள்; 'ஓம்'கார நாதவடிவானவள்; 'ஓம்'கார ஒலியின் இனிமையே ஆனவள்; 'ஓம்'கார ஒலியினால் இதமூட்டுபவள். 24

'ஓம்'காரமே உருவும் ஒலியுமானவள்; உருவற்றதின் ஒரே உருவானவள்; விருப்புகளை ஒதுக்கிடச்செய்யும் புனித நீரானவள்; அசைவற்ற அமைதியினிடை 'ஓம்'காரத்தை ஒலிப்பவள். 25

ஸத்துவத்தின் தூய வெண்மை உருவானவள்; ஸத்துவ ஒலியினுல் இதமூட்டுபவள்; ஸத்துவ வெளியின் தூய நீல எழில் கொண்டவள்; தூய ஸத்துவத்தை விளக்குபவள். 26

ஸத்துவ உள்ளத்தில் எப்போதும் நிலைத்திருக்கும் அன்னை; ஸத்துவமான இவ்வுள்ளத்துட்புகுந்தவள்; இம்மெய்ச் சொற்களால் பூஜிக்கப்பட்ட மெய்யானவள்; மெய்வழிபாட்டுடன் வணங்கப்பட்டவள். 27

பெயரிலும் உருவிலும் தலைசிறந்த நதியானவள்; பெயரும் உருவும் அற்றவள்; அமுதினிய பெயருடையவள்; அமுத நதியானவள்; இப்பெயர்களால் பாடிப் பூஜிக்கபட்டவள். 28

அமுதநீர் படைத்தவள் / ஸாரத்துள் ஸாரமானவள்; பேருண்மையின் ஸாரமானவள்/ மாபெரும் நதியானவள்; நீர்வீழ்ச்சியானவள்; தெய்வீகமான நீர்வீழ்ச்சியானவள்; அமுதொலி படைத்தவள்; இன்னிசை அருவியானவள்; மெய்ப்பொருளே தண்ணீராய் ப்ரவஹிப்பவள். 29

அமுதப்பேர்வீழ்ச்சியானவள்; மங்களமான மெய்ப்பொருட் ஸாரமானவள்; எல்லாவற்றுக்கும் ஸாரமான மெய்யமுது படைத்தவள்; மெய்யறிவுப்பொழிவாம் இச்சொற்பேர்வீழ்ச்சியில் உள்ள அமுதச்சாருனவள். 30

கங்கை என்னும் தெய்வீக நதியான தேவி; முக்தியளிப்பவள்; கண்ணுக்கினிய தோற்றம் கொண்டவள்; இடைவிடாப்பொழிவாக ப்ரவஹிப்பவள்; ஆயிரம் திருநாமங்களில் ஒளிர்பவள். 31

இயற்கையிலேயே தூயநீருடையவள்; இவ்வுள்ளத்து அன்பு எண்ணங்களால் அர்ச்சிக்கப்பட்டவள்; பிறப்பற்ற பரம்பொருளின் வெளிப்பாடானவள்; உள்ளார்ந்த அன்புடன் போற்றப்படுபவள். 32

இவ்வுள்ளார்ந்த அன்பில் உறைபவள்; இத்துதிவடிவானவள்; மெய்யின்பம் பெருக்கிடுபவள்; உள்ளார்ந்த பக்தியில் தோன்றிய இப்படைப்பின் உட்பொருளானவள்; கற்பனைக்கெட்டாப் பெருஞ்சிறப்புடையவள். 33

பிறவிப்பெருங்கடலைக் கடக்கச் செய்யும் தோணியானவள்; உலகியற்படைப்புக்கப்பாற்பட்டவள்; கற்பனைக்கெட்டாப் பரவசநிலை அருள்பவள்; பிறப்பற்றவள்; பிறவிச்சுழலை இல்லாமல் செய்பவள்; பக்தியில் மலர்ந்த இவ்வெண்ணங்களின் தோற்றுவாயானவள். 34

ஶிவனை த்யானிக்கும்போது உள்ளத்தில் தோன்றுபவள்; ஶிவனின் சென்னியினின்று பாய்பவள்; உலகவாழ்வின் இயந்திர வேகத்தைத் தணிக்கும் விரைவு படைத்தவள்; பிறவிப்பிணிக்கு மாற்று செய்பவள். 35

பிறவித்துன்பத்தை அழிப்பவள்; பிறவியைக் கடக்கும் வழிநடத்துபவள்; இவ்வுலகில் தோன்றிய பெருந்தகையாள் / ஶிவனுக்குப்ரியமான பெருமை படைத்தவள்; தன்னிடம் பக்தி பூண்டோர்க்குப் பிறவித்துன்பம் இல்லாது செய்பவள். 36

ஶிவனுக்குகந்தவள்; இவ்வியனுலகில் ப்ரவஹிப்பவள்; இவ்வுலகக் கட்டுக்களை நீக்குபவள்; ஶிவனுக்கு ப்ரியனான ஸ்ரீராமனுக்குப் பிடித்தமான அன்னை; ஶிவனால் துதிக்கப்பட்ட ஸ்ரீராமனால் புகழப்பட்டவள். 37

பிறப்பற்றவள் / பிறப்பின்றிச்செய்பவள்; மகிழ்வுடன் இவ்வுலகில் தோன்றி இருப்பவள்; தனிச்சிறப்பு வாய்ந்த மேம்பட்ட நீருடைய பெருமை படைத்தவள்; பிறவிப் பெருங்கடலைக் கடக்கச் செய்பவள்; கடலை நோக்கிச் செல்லும் ஒப்புயர்வற்றவள். 38

உள்ளாழ்ந்த உணர்வுடன் பாடப்பட்டவள்; இப்படைப்பில் இருப்பவள் / என் எண்ணத்தில் இருப்பவள்; இவ்வெண்ணங்களால் நன்கு துதிக்கப்பட்டவள்; இப்பக்தி ஸங்கீதத்தில் பெருக்கெடுத்தோடுபவள்; இவ்வன்புத் துதியில் நிலைத்திருப்பவள். 39

உள்ளப்பனிமலையில் பிறந்தவள்; இவ்வெண்ணக் கடலினில் கலந்தவள்; இவ்வெண்ணமலர்க்கோயில்கொண்ட / உள்ளாழ் அன்புபூண்ட புஷ்பாவே கோயிலாகக் கொண்ட கங்கை; நறுமணமிக்க இவ்வெண்ணமலர்களால் அர்ச்சிக்கப்பட்டவள். 40

மஹாதேவனின் சென்னியினின்று பாய்பவள்; பெருமை படைத்த தேவி; இவ்வுள்ளத்தில் இருப்பவள்; பெரும்புகழ் படைத்த அன்னை; பெரும்புகழ் தருபவள்; நீராயுள்ளவள். 41

நற்பேறளிப்பவள்; பெருமகிழ்வளிப்பவள் / பெருமகிழ்வுடன் துய்த்திடத்தக்கவள்; மாபெரும் இமயப்பனிமலைக் கோயில்கொண்டவள்; மிகச்சிறந்தவள்; மிக்க அன்புக்குரியவள்; மிகச்சிறந்த இமயப்பனிமலையிலுதித்த பனிநீர் கொண்டவள். 42

மாபெரும் கங்கை; வெகு புனிதமானவள் / மிகுந்த நற்பயனளிப்பவள்; பரம்பொருளில் ஒன்றிடச்செய்யும் பனிமலைக் கோயில் கொண்டவள்; மஹாவாக்யமெனும் (நீயே அதுவாவாய்)

பேருண்மையின் பெருக்கானவள்; பெருங்கோயிலே ஆனவள்; சீரிய ஒருமுனைப்பாடளிப்பவள். 43

பெருமகிழ்வளிப்பவள்; என் மகிழ்வானவள்; பேரொளிபடைத்தவள்; மங்களம் செயும் நன்னீர் கொண்டவள்; பேரழகு படைத்த கங்கை; பெரியோருள்ளத்துள்ளிருப்பவள்; அமுதே ஆனவள். 44

கங்கை; இமயத்து நதியானவள்; பனிமயமானவள்; இமயமலைத் தொடர்களில் ப்ரவஹிப்பவள்; உயர்ந்த பனிமலைகளில் பாய்பவள்; ஆழ்ந்த இமயப்பள்ளத்தாக்குகளில் பாய்ந்தோடுபவள். 45

கங்கை; பாகீரதி; அன்னை; கோமுகத்தில் தோன்றுபவள்; மெய்ப்பொருளைக் காணச் செய்பவள்; பகீரதனின் கடுந்தவத்தின் நிறைவானவள்; மலையரசனான இமயத்தின் உச்சியினின்று ப்ரவஹிப்பவள் / ஶிவனின் சென்னியினின்று ப்ரவஹிப்பவள். 46

திருநாமத்தினால் புல்லரிப்புப் பரவசம் உண்டு பண்ணிடும் கங்கை; திருநாமத்தினால் புனிதமான இவ்வாக்கில் இருப்பவள்; பண்ணிலும் தாளத்திலும் இணைந்த இன்பமானவள் / இன்பத்தைக்கொடுப்பவள்; உள்ளாழ்தலாம் கோமுகத்துதித்தவள். 47

மலையரசனின் புதல்வியான கங்கை; மலையிலுதிக்கும் இன்பத்தை வளர்ப்பவள்; பாபத்தை அழிக்கும் பெருமை படைத்தவள்; மலையைத்தாங்கிய ஸ்ரீக்ருஷ்ணனின் அருள் பெறச்செய்பவள். 48

எல்லா தீர்த்தங்களிலும் மிகப்புனித தீர்த்தமானவள்; எல்லாம் அளிப்பவள்; எல்லாவற்றையும் தூய்மைசெய்பவள்; எல்லா மங்களங்களும் நிறைந்தவள்; முழுமைநிலை உண்டாக்குபவள்; காத்தருள்பவள். 49

உள்ளுயிர்ப்பளிப்பவள்; எனக்கு உவகையூட்டுபவள்; என் உயிருக்குயிரான கங்கை; என் அன்னை; கவிதையருட்கிளர்ச்சியினால் பரவசக் கண்ணீர் துளிர்க்கச்செய்பவள்; அகத்தூண்டுதலில் கிளர்ந்த இம்மலர்களால் அர்ச்சிக்கப்பட்ட மங்களமானவள். 50

உயிராற்றலளிப்பவள்; என் உயிரோடு ஒன்றியவள்; அன்னை கங்கை; அழகிய கோமுகியிலுள்ளவள்; கண்டாலே களைப்பை மறந்திடச்செய்பவள்; தன் தோற்றத்திற்கிளர்ந்து பீறிட்ட இவ்வாக்கில் ப்ரவஹிப்பவள். 51

அமைதியினின்றுதித்த நாதவெள்ளமானவள்; பனிக்கோயிலாம் இமயத்தின் இசைலயம் ஆனவள்; இப்புதல்வியால் ஏக்கத்துடன்

வேண்டப்பட்டவள்; ஆசையை அழிப்பவள்; மகிழ்வளிப்பவள்; களிப்பூட்டும் விரைவு நீரோட்டமானவள். 52

'களகள'வென்றொலியோடு பொங்கி வரும் கங்கை; இத்துதிமாலையில் உள்ளங்கவர் எழிலுடன் திகழ்பவள்; வெண்ணிறத்தில் ஒளிர்பவள்; என்னால் நினைந்தேங்கி விரும்பப்பட்டவள்; இளஞ்சிரிப்புடன் இலங்குபவள். 53

அளவற்ற வியன்தரு எழில் படைத்தவள்; உளம் கரைந்திடும் அழகுவாய்ந்தவள்; உள்ளார்ந்த ஆத்மானுபவத்தால் உணரப்படுபவள்; மறக்க இயலா வனப்புடையவள். 54

உள்ளம் உருகிடச் செய்யும் கங்கை; முயற்சியின்றி உள்ளொன்றிடச் செய்திடுபவள்; உருகிய பனி நீரோட்டமானவள்; உருகிய இவ்வுள்ளத்தில்/ உள்ளத்து எண்ணங்களால் – அர்ச்சிக்கப்படுபவள். 55

உளமுருகிப் பரவசக்கண்ணீருடன் மெய்ப்பொருள்தனில் ஆழ்ந்திடச்செய்பவள்; உள்ளாழ்ந்து ஞானபலனை அடைந்திடச்செய்பவள்; ப்ரம்மனில் ஒன்றுபட்ட உண்மையை உணர்ந்திடச்செய்பவள்; நானெனும் அகந்தையை அழிப்பவள்; உள்ளிருக்கும் ஆத்மாவுடன் ஒன்றிடச்செய்பவள். 56

இறைவனை அறிய விரும்புவோரால் அடையப்படுபவள்; இறைவனை அறிய விரும்புவோருக்கு முழுமை அருள்பவள்; இறையறிவை அளித்தருள்பவள்; இறைவனின் இயற்கையை இலங்கிடச் செய்பவள். 57

இறைவனின் வெளிப்படைத் தோற்றமானவள்; இறையறிவை நன்கு வளர்ப்பவள்; இறையின்ப ஒளியானவள் / இறையின்பத்தினை உணரச்செய்பவள்; இறையின்பச்சாற்றின் பெருக்கானவள். 58

குணங்களற்ற பரம்பொருள் தத்துவத்தை இலக்குபவள்; குணம்படைத்த இறைவடிவானவள்; நாதப்ரம்மமாகிய ஸத்குருஸ்வாமியின் வெளிப்படைத் தோற்றமானவள்; அமுதநீர் படைத்தவள். 59

வேதோபநிஷத்பெருக்கானவள்; வேதஸாரமான இன்னமுத நீர் படைத்தவள்; கீதையெனும் அமுதவெள்ளமானவள்; கீதாசார்யனான ஸ்ரீக்ருஷ்ணனால் புகழப்பட்ட, தன்னின்மிக்கதொன்றில்லாதவள். 60

கொடிய பாபத்திரள்களை ஓடிடச் செய்பவள்; ஆழ்ந்தொலிக்கும் இன்னிசையுடன் /இன்னிசையில் புன்னகைப்பவள்; தூயவள்/

வெள்ளிமயமானவள்; ஆழ்நீல முகில் போல் தோற்றமுடைத்து இன்னிசை பெருக்குபவள்/ இப்பாடலாய் இருப்பவள்; மழை முகில்களின் ஆழொலி உடையவள். 61

'ஓம்'கார இன்னொலியுடை கங்கை; நாமத்தை நினையுங்கால் புல்லரிப்புண்டாக்கிக் காணச் செய்பவள்; இவ்வாத்மானுபவ ப்ரவாஹமானவள்; இந்த பக்தையால் உணரப்பட்ட வெள்ளமானவள். 62

பேரின்ப அமுதாம் நீர் வெள்ளாமானவள்; கவிதை உள்ளுயிர்ப்புப் பளிச்சிடச் செய்பவள்; பாபவெள்ளத்தைப் போக்கிடும் புனித நீர் வெள்ளமானவள்; குற்றமற்றவள்; குற்றங்களை அழிப்பவள். 63

ஓடும் நீரியற்கை கொண்டவள்; பாபங்களை விரைந்தோட/கரைந்திடச் செய்பவள்; பனிப்பாறைகளைப் பிளந்திடுபவள்; பேச்சற்று அமைதியில் உள்ளாழ் மனதில் ஒன்றுபவள்; அன்னை கங்கை; என்னுள்ளம் நிறைந்தவள். 64

இமயப்பனித்தொகுதியினில் தோன்றிடும் கங்கை; பனித்தொகுதியினின்று பாய்ந்து வருபவள்; பனிக்கட்டிகளை மாலையாயுடையவள்/ பனிமலைக்கு மாலையானவள்; பனிமலையைப் ப்ரதிபலிப்பவள்; இமயமலை முழைஞ்சினின்றிழிந்தோடி வருபவள். 65

நீரில் பிரதிபலிக்கும் நிலவொளியில் பாலாகவே தோன்றுபவள்; நிலவொளியில் புன்னகைத்து உளம் கவர்பவள்; பற்றொழிந்த இவ்வுள்ளத்தின் ஒரே பற்றானவள்; தனித்தன்மை வாய்ந்தவள்; தனிப்பட்ட ஒளிநடம் புரிபவள். 66

மணல்முற்றம் கொண்ட கங்கை; நுண்ணிய காற்றுச் சூழல் கொண்டவள்; கூடாரத்தினுள் கேட்கப்பட்ட 'ஓம்'கார ஒலிசெய்பவள்; இமய அமைதியில் இன்னிசை ஒலிப்பவள். 67

அகன்ற அழகிய மணற்பரப்புக் கொண்டவள்; நிலவுலகோ எனும்படி வெள்ளியாய் ஒளிரும் சூழல் கொண்டவள்; பகலவனும் நிலவும் ஒளிரும் எழில் கொண்டவள்; விண்மீன்கள் சுடரிட்டு மின்னும் ஒளி கொண்டவள். 68

புன்னகைத் திருமுகமுடையவள்; ஒளிரும் அலைகள் கொண்டவள்; வெள்ளிக்கதிர் நிலவுப் புன்னகை எழில் கொண்டவள்; பனிவெள்ளமானவள்; (பனிப்)பாறைகளுடன் விளையாடுபவள். 69

கோமுகத்தில் வியன்தகு எழில் படைத்தவள்; கற்பனைக்கெட்டா வனப்புடையவள்; இன்னிசையுடன் இன்பநடை போடுபவள்; தெள்ளத் தெளிந்த நீலவான் சூழ் அமுதானவள். 70

மின்னலென ஒளிர்பவள்; அறிவோராலும் முனிவராலும் வணங்கப்பட்டவள்; சூழும்பனிமலைகள் நடுவே சுற்றிச்செல்பவள்; பனிமாலையில் ஒளிர்ந்து விளங்குபவள். 71

தொடக்கமறியாப் பெருஞ்சிறப்புடையோள்; அறிந்த, அறியாத தீவினைகளை அழிப்பவள்; முடிவற்ற, முதலற்ற ஆற்றலானவள்; இரண்டற்றதன்மையைக் கற்பிப்பவள். 72

ஒன்றே ஆன இறைவடிவானவள்; தனித்த 'ஓம்'காரமாம் இன்னொலியுடையவள்; தனி முழுமுதற்பொருளானவள்; ஒரே உண்மையானவள்; தனிப்பொருளின் சிறப்பிலங்கும் புனிதநீருடையவள். 73

இத்தனித்த உள்ளத்தினை நிறைப்பவள்; தனித்த பக்தியுடை இவ்வுள்ளத்தில் ப்ரவஹிப்பவள்; தனித்த அமைதி கொண்ட இமயப்பள்ளத்தாக்கில் உறைபவள்; இத்தனித்த அனுபவத்தின் ஸாரமானவள். 74

ஒரே மெய்ப்பொருளானவள்; ஒரே மெய்ம்மையானவள்; ஒரே மெய்ம்மையின் தனிச் சிறப்பினை உணர்த்துபவள்; தனித்தன்மையுடை நீர்வெள்ளாமானவள்; தனி இயல்புடையவள்; தனி உள்ளத்து இத்துதியில் ஒளிர்பவள். 75

தனியொன்றுனவள்; இத்தனித்த ஆன்மாவின் நல் அடைக்கலம்; தனிப்பட்ட அமைதிவழிப்படுத்துபவள்; தனித்து உள்ளாழும் வழிபெறச் செய்பவள்; தனிப்பட்ட உள்ளாழ்தலில் அடையப்படுபவள். 76

பற்றற்ற இத்தனி உள்ளத்தில் த்யானிக்கப் படுபவள்; தனித்த த்யானத்தை வளர்ப்பவள்; தனித்த த்யானத்திலாழும் இவ்வுள்ளத்தால் துதிக்கப்பட்டவள்; தனி இன்பம் நல்குபவள். 77

ஒரே ஈடுபாடுடன் வழிபடவேண்டியவள்; ஒருமுனைப்பட்ட இவ்வுள்ளத்துட்சென்றவள்; தனிப்பட்ட உணர்ச்சியுடன் பாடப்பட்டவள்; இத்தனிப்பட்டவளுக்கு வரமருள்பவள் / தனித்தவள், வரமருள்பவள். 78

ஒருமுனைப்பட்ட பக்தியுடையவர்க்குப் பேரின்பம் அருள்பவள்; ஒருமுனைப்பட்ட பக்தியை வளரச்செய்பவள்; இத்தனித்த உள்ளத்தில்

மகிழ்வுறுபவள் / தனிப்பட்ட உள்ளத்துள் மகிழத்தக்கவள்; தனித்த நல்லின்பம் நல்குபவள். 79

ஒரே பரம்பொருளில் ஆழும் இன்பம் அருள்பவள் / ஒரே பரம்பொருளில் ஆழும் உள்ளத்து இன்பமானவள்; தனி ஈடுபாடுடன் துதிக்கப்பட்டவள்; ஒருமுனைப்பட்ட உள்ளமும் பற்றற்ற நிலையும் அருள்பவள்; தனித்த இறையன்பை வளர்ப்பவள். 80

தனிமகிழ்வளிப்பவள்; மிக்க எழிலுடையோள்; இத்தனி பக்தையின் ஒரே மகிழ்வூட்டுபவள்; ஒருமுனைப்பட்ட உள்ளத்தில் ஆழ்ந்து த்யானிக்கப்பட்டவள்; ஒருமைப்பட்ட உள்ளத்துள் பூஜிக்கப்பட்டவள் / இத்தனிப்பட்ட எண்ணங்களால் பூஜிக்கப்பட்டவள். 81

புனிதத்தின் கட்புலன் வடிவானவள்; பனிமலைகள் சூழ்ந்தவள்; பரா, பஶ்யந்தீ, வைகரீ, மத்யமா இவ்வாறு வெளிப்படும் வாக்கையே வடிவாகக் கொண்டவள்; எங்கும் பரந்துள்ளவள். 82

இடையருத் தொடர் நீர்வீழ்ச்சியாய்ப் பாய்ந்தோடுபவள்; எண்ணத்தொடர் ஓட்டத்தைத் தடைசெய்யும் நீரோட்டம் கொண்டவள்; இவ்வெண்ணத்தொடருக்கு ஆதாரமான நீர்வீழ்ச்சியானவள்; எண்ணங்களைக் கடந்து காணப்படுபவள். 83

கோமுகத்தினின்று பாய்ந்துவரும் மெய்ம்மைச்சாறுனவள்; அழகின் உட்பொருளாய் இழிந்து விரிந்தோடுபவள்; உள்ளத்தில்/இவ்வெண்ணங்களில் களிநடம் புரிபவள்; நிறைவானவள்; என்றும் தூயவள் / எப்பொழுதும் தூய்மைப்படுத்துபவள். 84

பனியே ஆன நீர்வெள்ளம்; பனிமலை முற்றத்திலுள்ளவள்; மிகவும் குளிர்ச்சியானவள்; உறையச் செய்பவள்; புனித நீராடினுலும் புனித நீரைப்பருகினுலும் பிறவித் தளையினின்று விடுவிப்பவள். 85

தன்னில் நீராடல் ஈடு இணையற்ற தனித்ததோர் அனுபவமாயுள்ளவள்; தொடுகைக்குப் பனியின் தண்மை மிக்கவள்; கடுங்குளிரில் பனிக்காற்று வீசும் சூழல் உள்ளவள்; மன உறுதியைச் சோதிப்பவள். 86

(பனியே ஆன தண்மையால்) உடலை உறைந்திடச்செய்பவள்; (கழிபேருவகையாலும் பனித்தண்மையாலும்) மயிர்க்கூச்செடுத்துப் புல்லரிக்கச் செய்பவள்; கோமுகநீராடலில் தீக்ஷை அருள்பவள்; குரு உருவான மிகப்புனிதமானவள். 87

புனிதத்தோடிணைந்த பெயரும் அமுத நீரும் கொண்டவள்; பாபத்திரள்களை அடித்துச் செல்பவள்; மெய்ஞான நல்வழி காட்டுபவள்; அருளிசைக்கிளர்ச்சி நிறைபெறச் செய்பவள். 88

வேறொன்றிலும் ஈடுபடா ஒருமுனைப்பாடும் பற்றற்ற தன்மையும் அளிப்பவள்; குறைபாடுகளை நீக்குபவள்; மங்களமானவள்; கவிதை எழிலாய் இழிந்தோடுபவள்; கவி எண்ணங்களுக்கு நேர்த்தியும் சிறப்பும் அளிப்பவள். 89

உளமாம் தபோவனத்திலுள்ள அன்னை; ஶிவலிங்கம்[1] ப்ரதிபலிக்கும் அழகிய கண்ணாடியானவள்; ஶிவனை மகிழ்விப்பவள்; ஶிவனின் மகிழ்வானவள் / மங்கள மகிழ்வளிப்பவள்; ஶிவ, ராம எனும் மங்களப் பெயர்களை இசைப்பவள். 90

இவ்வுள்ளத்தில் ஒன்றிய புனித தீர்த்தமானவள்; உள்ளன்பிலுதித்த இவ்வெண்ணங்களில் காணப்படுபவள்; உள்ளத்தூய்மை பெறச் செய்பவள்; உள்ளவானிலுள்ள தூயவள். 91

இவ்வுள்ள வான்வழிச் செல்பவள்; உள்ளத்தூய்மையுடன் துதிக்கப்பட்டவள்; உள்ளத்தை அலையாதிருக்கச் செய்யும் விரைவு கொண்டவள்; இவ்வுள்ளப்பொழிவில் அழகுறச் செல்பவள். 92

உளம் களிக்கச் செய்யும் திருநாமமுடையோள்; தனிச்சிறப்புடைப் பெயரால் தூய்மைப் படுத்துபவள்; இவ்வுள்ளத்தை மகிழ்வால் நிறைப்பவள்; திருநாமத்தினாலும் மெய்மைச்சாறும் நீரினாலும் தூய்மைப்படுத்துபவள் / மெய்மைச்சாறுன திருநாமத்துடன் பாய்ந்தோடுபவள். 93

பனிமலையுதித்தவள்; பனிமலைப் பள்ளத்தாக்குகளில் வளைந்து செல்பவள்; பனியே ஆனவள்; பொன்னானவள்; எழில் கொண்டவள்; கண்ணுக்கின்பமாய் ஒளிர்பவள். 94

அமைதியே ஶ்ருதியாக இசை பாடுபவள்; நிலைத்த அமைதியின் நடுவே இன்னொலி படைப்பவள்; அமைதியினூடே குரலினிமை கூட்டுபவள்; அமைதியின்பமளிக்கும் நீர் கொண்டவள். 95

கோமுகத்தினின்று நடம் புரிந்து கொண்டு இறங்குபவள்; சுருண்டு நடம் புரியும் அலையழகுடையவள்; நடமிடும் வெண்ணிற அலைகள் கொண்ட நீரோட்டமானவள்; அழகிய மங்கள நதியானவள். 96

[1] ஶிவலிங்கமெனும் பனிச்சிகரம் – கோமுகத்துக்கு மேல் தபோவனமெனும் இடத்திலுள்ளது.

‘போஜ்வாஸா’வில் புத்துயிரூட்டும் கங்கை; ஒலியாலும் காட்சியாலும் புத்துணர்வூட்டுபவள்; ‘போஜ’ வனத்துப் பள்ளத்தாக்கிலுள்ளவள்; கலகலவெனும் இனிய ஒலியால் வரவேற்பளிப்பவள். 97

இன்னொலியால் வரவேற்கும் இன்பப் பறவையின் பாட்டினிமையை மிகுதிப் படுத்தும் பனிமலை அமைதியில் கலகலவென்றொலிப்பவள். 98

‘சீர்வாஸா’ எனுமிடத்தில் காட்டில் அழகுற நடமிட்டு ஒளிர்பவள்; மாலைப்பொலிவில் இதமாய் அமைதியுறச் செய்பவள்; பயணத்திடையே ஓரிரவு தங்கும்போது அமைதிதரும் மென்னொலியால் உள்ள உலைவின்றி ஓய்வுறச் செய்பவள். 99

கோமுகத்தினின்று பனிப்ரவாஹமாய்ப் பாய்பவள்; கங்கோத்தரியில் நன்கு பூஜிக்கப்பட்டவள்; பகீரதன் தவம் புரிந்து அருள் பெற்ற புனித நீரானவள்; பாகீரதீ; வானுலக ஆறு / இசையாறுனவள். 100

கங்கோத்தரியில் வடக்கே திரும்பும் கங்கை; மிகப்புனித தீர்த்தமானவள்; பகீரதன் தவம் புரிந்த இடத்தில் இறங்கியவள்; தினந்தோறும் பூஜித்துப் பாடப்படுபவள்; பழமையான கோயிலில் சிறப்பித்துக் கொண்டாடப்படுபவள். 101

இவ்வுள்ளமாம் தவக்குகையினின்று ப்ரவஹிக்கும் கங்கை; இவ்வுள்ளத்தைப் புனிதத் தலமாக்கியவள்; இவ்வுளமெனும் புனிதத்தலத்தில் பாயும் கங்கை; இவ்வுள்ளக் கோயிலில் பூஜிக்கப்படுபவள். 102

மாலை வழிபாட்டில் விளக்கொளியில் அழகுற ஒளிர்பவள்; மாலை மருளொளியில் வண்ணங்களின் அழகுற மின்னும் பனிமலைகள் சூழ்ந்தவள்; வனத்திலுள்ளவள்/ நீர்வளமிக்கவள்; நலந்தருபவள்; உளமகிழ்வூட்டுபவள்; இளஞ்சிவப்பு, பொன், வெள்ளியென மின்னும் பனிமலைகள் சூழ்ந்தவள். 103

வானளாவும் மலையில் உள்ளவள்; உயர்மலைகள் சுற்றிலும் காவலர் போல் அமையப் பெற்றவள்; ஆழ் அமைதியில் இன்னிசையானவள்/இனிதிசைக்கப்பட்டவள்; ஆழ் பள்ளத்தாக்கில் அடரொலி செய்பவள். 104

இமயமலைச் சரிவில் பெருக்கிடும் அன்னை கங்கை; பல பாறைகளை அடித்துத் தள்ளிக் கொண்டு வருபவள்; பகீரத ஶிலா எனும் – பகீரதன் தவம் இருந்த – பாறையை அடையாளமாகக் கொண்டவள் (கோயிலுக்கு முன்னால் உள்ள

இப்பாறையின் மேலும் முன்னுலும் பாய்பவள்); கேதார கங்கையுடன் கலப்பவள். 105

மலைப் பாறைகள் வழியே பாயும் கங்கை; பாறைகள் மீது மோதி சுற்றிச் சுழல்பவள்; கற்படிம வடிவில் அர்ச்சிக்கப்படும் அன்னை; (நீரோட்டத்தால்) வழுவழுப்பான பாறைகளின் மேல் பாய்ந்தோடுபவள். 106

எலும்பு வரை ஊடுருவிப் பரவும் பனித்தண்மை மிக்க நீருடையவள்; நீராடல் மறக்க முடியா அனுபவமாக உள்ளவள்; ஒன்பது முறை முழுகி எழப்பட்டவள் (இந்த பக்தையால்); ஒரு முழுக்கு ஒரு நொடியே ஆகும்படியான தண்மை படைத்தவள். 107

நீராடிய அக்கணமே புத்துயிரளிப்பவள்; புத்துணர்வமைதி அளிப்பவள்; சிறுமைகளால் அலுத்த இவ்வுள்ளத்திற்கு அமுதானவள்; அருட்கிளர்ச்சி உண்டு பண்ணுபவள். 108

பனிக்காற்றின் இன்னுத் துன்பத்திற்கு மாற்றுன இளஞ்சூடுள்ள பகலவன் கதிர்களில் இதமாகத் திளைத்த இப்புதல்வியால் துதித்துப் பாடப்பட்டவள்; நீராடலில் மிக்க பரவசப் புல்லரிப்பு உண்டு பண்ணும் கங்கை. 109

(இப்புதல்வியால்) மிகப் பெரிய பாறை மீதமர்ந்து உள்ளாழ்ந்து த்யானிக்கப்பட்டவள்; கணநேர மின்வெட்டான அகக் கிளர்ச்சியினுல் துதித்துப் பாடப்பட்டவள்; பேரழகினுல் உளம் கவர்பவள்; மேலே ஆழ்நீலத் தெள்ளிய வானும் சூழும் பனிமலைகளும் கொண்டவள். 110

மிகச் சிறந்த உயர்பனிமலை நதியானவள்; சிறந்த மேம்பாடும் தெய்வத்தன்மையும் அருள்பவள்; பனிமலைச் சிறப்பானவள் / பனிமலைத் தோன்றியவள்; தூய வெண்ணிற நீரும் வெள்ளியென மின்னும் அலை ஆடையும் கொண்டவள். 111

ராஜஸம்் தாமஸம் ஆகிய மாசுகளை நீக்குபவள்; தூய ஸத்துவமானவள்; எழிலொளிர் அமுதானவள்; வெள்ளிப் பனிமலையின் அழகுருக் கொண்டவள்; தூய வெள்ளியென மின்னி ஒளிர்பவள். 112

தங்கப் பனிமலை முகடுகளாம் எல்லைக்கோட்டின் ஒளியுடையவள்; எல்லையற்ற மங்கள எழிலொளி படைத்தவள்; மிக உயர்ந்த மலையிலுதித்த மிகச் சிறந்த நதியானவள்; தீவினையை அழிப்பவள்; மேலான செல்வத்தை அளிப்பவள். 113

வெள்ளிப் பனிமலையின் செல்வப் புதல்வி; வெள்ளிப் பனிமலையில் வண்ண எழில் ஒளிர்பவள்; எண்ணவேகத்தைத் தணிக்கும்

வேகமுடையவள்; இவ்வன்பு எண்ணங்களை வண்ணமயமாக்குபவள் / இவ்வன்பு உள்ளத்தை மகிழ்விப்பவள் / இவ்வன்பு உள்ளத்தில் மகிழ்பவள். 114

மிக்க ஆரவாரித்திடும் கங்கை; தொன்மைக்காலம் முதல் பூஜிக்கப்பட்டவள்; விடியற்காலையில் மிக்க அழகுடன் விளங்குபவள்; மாலை மருளில் வண்ண எழிலுடன் மிளிர்பவள். 115

நிலவைச் சென்னிமிசை கொண்டோனுக்கு (ஶிவனுக்கு) உகந்தவள்; நிலவைச் சென்னியில் கொண்டோனின் சென்னியிலிருப்பவள் / வெள்ளி முகடுடை இமயப் பனிக் கொடுமுடியில் உள்ளவள்; கதிரவனும் தண்ணிலவும் ஒளிரும் அழகுடையவள்; வெள்ளிமய நீரோட்டமாய் ஒளிர்பவள். 116

வர்ணனைக்கப்பாற்பட்ட எழில் கொண்டவள்; ஓங்கி உயர்ந்த பனிமலை அரண் கொண்டவள்; நிலவு, விண்மீன்கூட்டங்கள் இவற்றின் ஒளியில் எழிலுறத் திகழ்பவள்; இவ்வுலகிற்கப்பாற்பட்ட வியந்தரு எழிலின் கோயிலானவள். 117

இவ்வுள்ளத்துட்புகுந்திட்ட ஆழ் நீல வான் எழில் கொண்டவள்; இவ்வுள்ளத்தில் நிலைத்திட்ட அளவற்ற அழகுடையவள்; உளங்கவர் கங்கை; எழிலுடையவள்; எழில்நடை கொண்டவள். 118

உள்ளத்துள் ஒளிந்திட்ட பெரும்பொருளானவள்; வெளிப்படை வடிவாய் ப்ரவஹிப்பவள்; இயற்கை எழில் முழுமையாய் நிறைந்தவள்; புனிதநீர் கொண்டவள்; புனிதச் சூழல் உடையவள். 119

உள்ளத்தை நிறைப்பவள்; எப்போதும் நிறைந்தவள்; நீரின் முழுமைநிறைவில் விஞ்சுபவள்; தவத்தை முழுமை பெறச் செய்பவள்; அமுதினிமை நிறைந்தவள்; விரைந்து சுற்றிச் சுழன்று உளங்கவர்பவள். 120

வடதிசை திரும்பும் கங்கை; எழிலிளமங்கை; கௌரீகுண்டத்தில் நீர்வீழ்ச்சியாய்ப் பாய்பவள்; கௌரீகுண்டத்தில் களித்துப் பொங்கி ஆர்ப்பரிப்பவள்; பலவண்ண எழிலுடன் திகழ்பவள். 121

கௌரீகுண்டத்தில் பாறைகள் மீது குதித்து மேலெழும்பிக் கூத்தாடிப் பெருமகிழ்வை வளர்ப்பவள்; மிக அகன்ற நீர்வீழ்ச்சியாய்க் கொட்டுபவள்; ஜங்கார ஒலியுடன் அருவியாய்ப் பொழிபவள். 122

எண்ணங்களைத் தொலைவு செய்யும் விரைவுடையவள்; இப்புதல்வியினால் எப்போதும் நினைக்கப் பட்டவள்; இவ்வெண்ணங்களால் அர்ச்சிக்கப்பட்டவள்; உள்ளத்தை நிலைபெறச் செய்யும் விரைவுச் சுழலுடையவள்; சுழலும் உள்ளத்தை அமைதிப் படுத்துபவள். 123

எழிற்பிழிவாம் நீர்வீழ்ச்சியானவள்; இன்னிசையே ஆன இன்னொலி உடையவள்/ அழகாகப் பாடப்பட்ட மிக இனிய ஒலியுடையவள் / இனிய இசையின் இன்னொலியானவள் / மிக இனிய குரலில் இன்னிசை பாடுபவள்; எழில் நடமிடும் அழகிய அலைகள் நிரம்பப் பெற்றவள்; அழகிய இன் பண் துதியில் இருப்பவள். 124

இக்கவிதை அருவியைத் தோற்றுவித்த தொடர் அருவி-யானவள்; கவிதைப்பொழிவாம் செல்வத்தைப் பொழிபவள்; தொடர் மங்களப்பொழிவானவள்; தொடர் அமுதப்பொழிவாய்ப் பாய்ந்தோடுபவள். 125

மலையிற்பிறந்தவள்; மலை எழில் வாய்ந்தவள் / மலையின் எழிலானவள்; மலையில் நற்றண்மையுடன் ப்ரவஹிப்பவள்; மலையருவியாய்ப் பொழிபவள்; எழும்பிக் குதிக்கும் நீரோட்டமானவள்; மலையில் பேரின்ப அமுதாய்ப் பொழிபவள். 126

புத்துயிரின்பமளிக்கும் நீர் கொண்டவள்; இக்கவிதை அருட்கிளர்ச்சியில் இருப்பவள் / அருளில் கிளர்ந்த இக்கவிதைக்கு மணமூட்டுபவள்; 'ஓம்'காரத்தின் நீடமைதி நல்கும் இன்னொலி கொண்டவள்; இமய அமைதியை வளர்ப்பவள். 127

மலைச்சரிவில் கௌரீகுண்டத்தில் கண்டு வெகுவாகப் பாடப்பட்டவள்; கவிதைக்கிளர்ச்சிக்கு வித்தான கொள்ளை அழகுள்ளவள்; அகங்கிளர்ந்து மலர்ந்த இப்பாக்களால் வணங்கப்பட்டவள். 128

உளம் நிறை எழில் வடிவானவள்; செவி நிறை இன்னொலியானவள்; ஆழ்ந்த 'ஓம்'கார ஒலியானவள்; இப்பாட்டானவள்; இவ்வுள்ளத்தில் ஒன்றிய ஆழ்ந்த ஒலியுடையவள். 129

வெண்மை நிறத்தினள்; மலைமகள்; மிகவும் மதிக்கப்படுபவள்; பொன்னிற ஒளியுடன் எழிலுறுபவள்; கௌரீநாதனை ஶிவனை அபிஷேகிப்பவள்[2]; கௌரீகுண்டத்தில் ஒளிர்ந்து விளங்குபவள்/தெளிந்தொலிப்பவள். 130

[2]கௌரீகுண்டத்தில் நீர்வீழ்ச்சிக்கு அடியே ஶிவலிங்கம் இருப்பது பனி நாட்களில் நீர் கண்ணாடி போல் துலங்குகையில் தெரிய வரும்

பொன்னொளியுடையவள்; பனி நிறைந்தவள்; பனிமலையுதித்தவள்; பனியே ஆன தண்மை படைத்தவள்; பொன், இளஞ்சிவப்பு, மஞ்சள், வெள்ளி நிறங்கள் மின்னப் பாய்ந்து நீர்வீழ்ச்சியாய்ப் பொழிபவள். 131

தங்கக் கொடுமுடி இமயத்தில் அழகுற மின்னிடும் கங்கை; பொன்னுடை அணிந்தவள்; வைரமென மின்னிடும் நீரொளி படைத்தவள்; பொன் பனிக் கோயிலில் பொன்னே ஆனவள். 132

செஞ்சூரிய உதயத்தில் இளஞ்சிவப்பும் மஞ்சளும் கலந்தொளிர்பவள்; இளஞ்சிவப்பு மலையின் பிரதிபிம்பம் உடையவள்; இளஞ்சூரிய ஒளியில் அழகுறப் பொன்வண்ணத்தில் மிளிர்பவள்; இத்துதியால் அர்ச்சிக்கப்பட்ட ஒளிமயமானவள். 133

'ஓம்'காரச் சுழலருவியாய் விழும் கங்கை; 'ஓம்'காரப் பேரொலிப் பொழி- வானவள்; 'ஓம்'கார ஒலியின் சாருக விழுபவள் / 'ஓம்'கார ஒலியுடன் பாயும் மெய்ம்மைச் சாருனவள்; 'ஓம்'கார வடிவை எழுதும் நீர் கொண்டவள். 134

மங்களமானவள்; ஶிவனின் சென்னியினின்று பாய்பவள்; மங்கலம் செய்பவள்; ஶிவனுக்குகந்தவள்; ஶிவனுலும் ராமனுலும் புகழப்படும் மகிழ்வானவள்; ஶிவ, ராம இந்நாமங்களாகப் ப்ரவஹிப்பவள்/ இந்நாமங்களை இசைப்பவள். 135

காட்டின் மாலை போன்றவள்; காட்டின் இன்பமானவள்; இவ்வுள்ளமாம் இமயக்காட்டில் மகிழ்பவள்; இமயமாம் இன்பப்பூங்காவில் மகிழ்பவள்; இனியவள்; இமயத்தில் இன்புறுபவள்/இன்பூட்டுபவள். 136

புனித நீர் பெரும் வெள்ளமானவள்; மிக்க மகிழ்ச்சியை அளிப்பவள்; ஏராளமான துதிகளால் புகழப்பட்டவள்; மிக்க ஒளியும் அழகும் நிறைந்தவள். 137

ஆழ் நீல நிறமான வான் சூழ்ந்தவள்; மேலான துறவினைக் கற்பிப்பவள்; பேராற்றல் பெரும் வெள்ளமானவள்; மிக உயர்ந்தவள்; நல்லெண்ணங்களைத் தருபவள் / இந்நல்லெண்ணங்களில் இருப்பவள். 138

பெருஞ்சிறப்பு வாய்ந்த இமயமலையில் பெருக்கெடுக்கும் அன்னை கங்கை; பெருங் கடலை நோக்கிப் பயணம் செல்பவள்; இவ்வியனுலகின் பெருஞ்சிறப்பானவள்; பேரறிவை அளிப்பவள். 139

வெள்ளிப் பனிமலைச் சுவர்கள் சூழ்ந்தவள்; நீலவான் விதான எழில் சூழ்ந்தவள்; கணக்கற்ற கற்களை உருட்டிப் புரட்டித் தள்ளுபவள்; தேவதாருவனத்தில் ஸஞ்சரிப்பவள். 140

புத்தம்புதிய தெய்வீகக் காற்றுடையவள்; திவ்ய மூலிகைகள் கலந்த அமுதினிய நீருடையவள்; இப்புனிதத் தலத்தின் பெருஞ்சிறப்பானவள்; தெய்வீக நறுமணமுடைய பனிக்குளிர் காற்றுடையவள். 141

பனியிற்பிறந்தவள்; இமயத்துப் பிறந்த இன்பமே ஆனவள்; பனியிற் பிறந்த மிகவும் தண்ணிய நீருடையவள்; இமய அமைதியினில் இன்னிசையானவள்/இனிது பாடப்பட்டவள்; இமய மலையில் பெருக்கெடுத்தோடுபவள். 142

கவலையின் கொடுமையைத் தணிப்பவள்; எண்ணங்களை நிறைக்கும் தூயவள்; பலவண்ணத்தோற்றங்களில் ஸஞ்சரிப்பவள்; பலவகைப்பட்ட அழகுடைய மலையைச் சேர்ந்தவள். 143

தேவதாருக்காடுகள் நிறைந்த மலைச்சரிவுகளிலிருப்பவள்; புத்தினிய காற்றுடையவள்; கங்கோத்தரீ எனும் புனிதத்தலத்தில் எழிலுற விளங்குபவள் / கங்கோத்தரீ எனும் புனிதத்தலத்தின் எழிலானவள்; பாண்டவாங்கனம் எனும் முற்றம் கொண்டவள். 144

தவக்குகையின்[3] முன்னில் செல்பவள்; ருத்ரகங்கையைச் சந்திப்பவள்; மலையினின்றிழிந்த அமுத நீர்வீழ்ச்சியானவள்; ஜான்னவீ; மலைத்தொடர்களில் உள்ளவள். 145

நிலவொளியில் வண்ண அழகுடன் மின்னுபவள்; வெண்தாமரை அழகுடன் மிளிர்பவள்; பைரவீ ராகத்தின் எழில்நடத்திலுள்ளவள்; பைரவனுக்குகந்த எழிலோள். 146

அச்சுறுத்துபவள்; காலவேகத்தை அறிவிப்பவள்; பைரவீநாதனின் (ஶிவனின்) சென்னியினின்ருேடுபவள்; மருத்துவப் பண்பு கொண்ட தூய நன்னீர் உடையவள்; மிகவும் மதிக்கத்தக்க மங்கல நன்னீரினுல் பேரின்பமளிப்பவள். 147

கங்கை – பாகீரதீ, மலை நடுவே செல்லும் ஜான்னவியால் இணையப்பட்டவள்; இரு ஒளிக்கதிர்கள்போல் ஒன்றிணைந்து ஒருவழிப்படுத்துபவள்; இகபரங்களுக்கான ஒருவழியில் நற்றுணை செல்பவள்; வெகு அழகிய பள்ளத்தாக்கில் ப்ரவஹிப்பவள். 148

[3]பாண்டவாங்கனத்தில் குகை

அமைதி ஆழ்ந்து அடர்ந்த மலைச்சரிவிலுள்ளவள்; தேவதாரு வனத்தில் மகிழ்பவள்/மகிழ்விப்பவள்; மறக்கமுடியாச் சூழல் படைத்தவள்; நினைந்துப் பேணி மகிழும் இத்தனித்த அனுபவத்தை அளித்த அன்னை. 149

கரைகளில் நடமாடுவது களிப்பூட்டச்செய்பவள்; மூச்சுக் காற்றினாலும் தடைப்படும்படியான மிக ஆழ்ந்த அமைதி சூழ்ந்தவள்; மூச்சை உள்ளடக்கி அனுபவிக்கபட்டவள்; கண்ணுக்கும் செவிக்கும் விருந்தானவள்; மகிழ்வொலி செய்பவள். 150

அமைதியெனும் இன்னமுதைப் பருகிடச் செய்பவள்; முழுமையான கட்டவிழ்ந்த, லேசான உணர்வு பெறச் செய்பவள்; தனது இதமான ஒலியினால் மிகைப்படுத்தப்பட்ட ஆழ் அமைதியில் இசைலயம் சேர்ப்பவள். 151

பயணத்தை அழகுறத் தொடர்பவள்; இப்பயணியுடன் கூடவே செல்பவள்; நெடிதுயர் மலைகளால் சூழப்பட்ட கங்கை; தூய இயல்புடையவள்; ஹரிஸீலிலுள்ளவள். 152

பல்வேறு தோற்றங்களில் காணப்படுபவள்; பேரொளிபடைத்தவள்; பேரழகினால் உளங்கவர்பவள்; (சில இடங்களில்)குறுகியும், (சில இடங்களில்)வெகு அகன்றும் காணப்படுபவள்; பல வண்ண எழிலுடன் புன்னகை பூப்பவள். 153

வனப்பு மிக்கவள்; உளங்கவர் வடிவம் படைத்தவள்; எழில் நடமாடிச் செல்பவள்; மதிமயக்கத்தைத் தகர்த்தெறிபவன்பால் மயக்கம் கொள்ளச் செய்பவள்; மதிமயக்கத்தைப் பிளப்பவனின் கருணை பெறச்செய்பவள். 154

தன்னில் மயங்கிய இவ்வுள்ளத்தில் மகிழ்ந்தோடுபவள்; மதிமயக்கத்தைப் போக்குபவள்; மகிழ்வூட்டுபவள்; மோகமற்றவனை (ஒன்றும் பரம்பொருளை) மோகிக்கும் இவ்வுள்ளத்து மோகமானவள்; மதிமயக்கமின்மையை மிகவும் விரும்பும் இவ்வுள்ளத்தால் மிக விரும்பப்பட்டவள். 155

மதிமயக்கத்தை அடித்துச் செல்லும் பேரோட்டமானவள்; பெருக்கின் அழகால் உள்ளத்தை மயக்குபவள்; பண்ணினிமை ஒலியால் உள்ளத்தைக் கொள்ளை கொள்பவள் / உள்ளத்தைக் கொள்ளைகொள்ளும் எழிலின்பம் கொண்டவள்; பண்ணினிமையில் மயங்கும் இவ்வுள்ளத்தை மகிழ்விப்பவள். 156

மயங்கிக் கிறங்கச் செய்யும் பேரழகு நீர்வீழ்ச்சியானவள்; உள்ளத்தில் பரம்பொருளை நிலைபெறச்செய்யும் யோக ஸாதனமானவள்; (த்யான) யோகத்திற்கு ஆதாரமான அமுதப்பேர்வீழ்ச்சியானவள்; மிக்கதூய நீர்வீழ்ச்சியானவள். 157

பசுங்காட்டின் நடுவே வெண்மையானவள்; பச்சை நிறமும் கொண்டவள் (பசுநிற ப்ரதிபலிப்பில்); ஹரிக்கு மிகப்ரியமானவள்; மலைத்தொடரில் பாறைகள் மீது நீர்வீழ்ச்சியாய் விழுபவள்; பாறைகளை அழகிய சிற்பங்களாகச் செய்யும் நீர் கொண்டவள். 158

அடர்ந்த தேவதாருக் காட்டிலிருப்பவள்; பனிமலைகளால் சூழப்பட்டவள்; பற்பல பாறைகளில் நடமிடுபவள்; வியன்தரு எழிலுருக் கொண்டவள். 159

பல்வேறு வடிவங்களில் பாய்ந்திடும் கங்கை; அகன்ற பள்ளத்தாக்கில் ப்ரவஹிப்பவள்; பல வண்ண எழில் நடம் புரிபவள்; பேரழகொளிரும் ஒளி வடிவானவள். 160

பல்வேறு வகைப்பட்ட கற்கள் கொண்ட படுகையுடையவள்; பாறைகளால் அணி செய்யப்பட்டவள்; அழகிய கற்கள் ஏராளமாக நிறைந்தவள்; வண்ணத்திலும் வடிவழகிலும் தனிச்சிறப்புடன் விளங்குபவள். 161

தேவதாருக்காட்டின் நறுமணம் நிரம்பப் பெற்றவள் / தேவதாருக் காட்டின் இன்பமானவள்; இத்தேவபூமியிலுள்ள தெள்ளத் தெளிந்த அமுதானவள்; பாறைவடிவிலுள்ள ஹரியையும் கேதாரலிங்கத்தையும் அபிஷேகிக்கும் தூயவள் [4]. 162

மாலைமருளின் நீடமைதி கொண்டவள்/நீடமைதியே ஆனவள்; பறவைகளின் மெல்லினிய இசையுடன் இனிதிசைப்பவள் / அழகுறச் செல்பவள்; உள்ளாழ்ந்திடச் செய்யும் எழிற்சூழல் கொண்டவள்; லக்ஷ்மீநாராயணனை அர்ச்சனை செய்பவள் [5]. 163

காட்டுப்பள்ளத்தாக்கின் நடுவிலிருப்பவள்; பறவைகளின் இன்னொலியுடன் இனிதொலிப்பவள்; அழகிய பறவைகள் விளையாடுமிடமானவள்; இனிய வளமிக்க இதமான ஒலிபடைத்தவள். 164

மலையில் புன்னகைக்கும் மங்கல எழிலானவள்; இளமங்கை; நலமருள்பவள்; உயரிய தெய்வமானவள்;

[4]கேதாரநாதரின் லிங்க வடிவையும் ஹரியின் படிம வடிவையும் ஒக்கும் இரு அழகிய பெரும் பாறைகள் மீது கங்கை ஹரிலீலில் பொங்கிப் பாயும் காட்சி

[5]கரையிலுள்ள லக்ஷ்மீநாராயணனின் பழைய கோயில்

இனியபேச்சுடையவள்/இன்சொல் வளமருள்பவள்; மங்களமானவள்; என்றும் மங்களமருள்பவள். 165

(அமைதியைக் கெடுத்து உள்ளம் உலைவுறச்செய்யும்) இன்னு ஒலிகளால் துன்புறும் இவளின் ஒரே அடைக்கலமானவள்; மெல்லினிய ஒலியால் அமைதிபெறச் செய்பவள்; இதந்தரும் ஓய்வமைதியின் ஆணிவேரானவள்; (இவ்வுள்ளக்கோயிலின்) கருவறையுள் தெய்வமானவள். 166

ஏழு ஏரிகளின் மலைச்சரிவினின்று காட்சியருளி மகிழ்விப்பவள்; மணலிலும் பலவகைக் கற்களிலும் பற்பலவடிவங்களில் வளைந்து செல்பவள். 167

அழகிய உத்தரகாஶியெனும் தபோபூமியின் எழிலின்பத்தை அதிகரிப்பவள்; இனியவள்; நல்லுள்ளத்தில் வழிபடத்தக்கவள்; உள்ளாழ்ந்து திருநாமங்களைப் பாடி வணங்கப்பட்டவள். 168

உத்தரகாஶியின் அழகிய ஒளியானவள்; மலைகட்கு நடுவே ஒளிர்பவள்; விஶ்வேஶ்வரருக்கு அபிஷேகமானவள்; எங்குமுள்ளவள்; உலகை மகிழ்விப்பவள். 169

இமயத்தில் சுற்றிச் செல்லும் கங்கை; மலையின் மாலையாகவும் அழகிய அணிகலனுகவும் விளங்குபவள்; இத்தவம்கொண்டோளுக்கு வரமருள்பவள்; காடுகளில் தவம் புரிவோர்கொண்ட மலைச்சரிவிலுள்ளவள். 170

முழுநிலவுக்குப் பின் ஐந்தாம் நாள்[6] (புனிதக்கரைகளில்) பாடப்பட்ட குரு கீர்த்தனைகளில் ஒளிநடம் புரிபவள்; ஸத்குருவின் திவ்யநாமகீர்த்தனைகளில் நிலைத்திருக்கும் அன்னை; திவ்யானுபவத்தை நிறைவாக்குபவள். 171

ஐந்துமுகத்தோனுன ஶிவனுக்கு ப்ரியமான கங்கை; ஐந்துமுகத்தோனின் ஜடாமுடியிலிருந்து பாய்ந்தோடுபவள்; ஐந்துமுகத்தோனின் திருவாயினின்றுதித்த ஸப்தஸ்வர அமுதாய்ப் பொழிபவள். 172

மெய்யறிவு வடிவான தேவி; உள்ளத்தை ஈர்ப்பவள்; மங்களம் தருபவள்; விஶ்வேஶ்வரனுக்குகந்தவள்; அன்னை; உலகுக்கெல்லாம் ஈஶ்வரி; விடுதலையளிப்பவள். 173

[6] பகுள பஞ்சமீ – ஸத்குரு ஸ்ரீத்யாகராஜஸ்வாமிகளின் நினைவு நாள்

இறைவனருளாக இவ்வுலகில் பாய்பவள்; இறைவனருள் பெறச்செய்பவள்; தொட்டுணர்வு இறைவன் ஆசியே ஆனவள்; இறைவி; இறைவனுக்குகந்தவள். 174

இறைவனுக்குகந்த இன்னிசையானவள்; இறை இன்பமே புன்னகையாய் மலர்ந்தவள்; இறைவனின் பேரொளியைப் ப்ரதிபலிப்பவள்; இறைவன் நற்காப்பினைப் பெற்றிடச் செய்பவள். 175

பிலங்கனுவால் இணையப்பட்டவள்; மலைத்தொடர்களில் வளைந்து செல்பவள்; அலகநந்தாவைத் அணைத்துக் கொள்பவள்; ஸகோதரியுடன் களிப்போடு இணைபவள். 176

மறக்கப்படாதவள்; மிகவும் தண்ணியவள்; தங்குதடையற்றவள்; தடைகளை உடைத்தெறிபவள்; மிகவும் நினைக்கப் படும், மிகவும் வணங்கப்படும், அன்னை; மங்களமான தேவப்ரயாகையின் இன்னிசையானவள். 177

எல்லையில்லாத ஆத்மானுபவம் உண்டாக்குபவள்; நிறை நல்மங்களம் அருள்பவள்; முதலும் முடிவும் இல்லாதவள்; இத்துறவுள்ளத்தை அழைப்பவள்; வற்றுதவள்; வறட்சியைப் போக்குபவள்; விரைந்து செல்பவள். 178

பகலவன் வெப்பத் துன்பத்தைத் தணிக்கும் தண்ணீர் கொண்டவள்; விஷ்ணுகங்கை; வானுலக நதியானவள்; ஶிவகங்கை; மங்களமானவள்; வெண்மையானவள்; பாறைகள் மீது தங்குதடையின்றி துள்ளிக் குதித்தோடுபவள். 179

ரகுநாதனின் திருவடி அடையாளமாயுள்ளவள்; ரகுநாயகனை இனிதிசைக்கும் இன்ப நீர் கொண்டவள்; புனிதத்தலமாம் தேவப்ரயாகையின் தெய்வீக ஒளியானவள்; இப்புனித ஸங்கமத்தலத்தின் எழிலானவள். 180

பாகீரதியும் அலகாநந்தாவும் நன்கிணைந்த இன்பகங்கை; தேவப்ரயாகையில் புனிதநீர்வெள்ளம்; எல்லா மங்களங்களையும் அருள்பவள். 181

கங்கோத்தரீ பனித்தொகுதியினின்று தோன்றியவள்; அழகிய கோமுகத்தினின்றிழியும் பாகீரதீ; அலகாபுரியை மகிழ்விக்கும் அலகாநந்தா; ஸதோபாந்த பனித்தொகுதியினின்று வெளிப்படுபவள். 182

வானேறும் வழி காட்டுபவள்; அலகாபுரி எனும் பனித்தொகுதியிலுள்ளவள்: வானினின்றிறங்கிய பேரழகானவள்; மங்களமே அடையாளமானவள்; மங்களத்திற்கு இலக்கணமானவள். 183

வெள்ளிப் பனிநிலவின் ஒளியில் வெள்ளியென மின்னுபவள்; மங்கள வடிவானவள்; மங்களச் சுரங்கமானவள்; தங்கமயமான ஸுமேரு மலையினின்றிறங்குபவள்; தங்கமாய் மின்னும் அமுதநீரானவள். 184

குபேரபட்டணத்தின் இன்பமானவள்; நடமிடும் எழிலொளி நீர்ப்பொழிவானவள்; குபேரபட்டணத்தில் பேரொலி செய்பவள்; வானுலக நதியானவள்; தெய்வலோகத்தைச் சேர்ந்தவள்; அழகொளி படைத்தவள். 185

நிலத்தைத் தாங்கும் மலையின் செல்வப்புதல்வியான கங்கை; கலகலவென அலைகள் ஒலிப்பவள்; அலகாபுரியின் இன்னிசையானவள்/ அலகாபுரியில் இன்னிசைப்பவள்; மெல்லினிதிசைத்து எழில்நடம் புரிபவள். 186

இன்பப்பரவஸமூட்டும் அலகாநந்தா; பொற்பனித்தொகுதியினின்று ப்ரவஹிப்பவள்; இன்பச்சாறு நிரம்பியவள்; இவ்வுலகிற்கப்பாற்பட்ட வியன்தரு எழிலொளி படைத்தவள். 187

தெய்வீக இன்பம் அருள்பவள்/இன்பமானவள்; இவ்வாக்கில் மகிழ்பவள் / நல்வாக்கின்பத்தை அருள்பவள் / நல்வாக்கெனும் இன்பமே ஆனவள்; சொல்லும் பொருளுமிணைந்தாடும் நடனத்தில் ஒளிர்பவள்; மிகுந்த அழகுடைய அலகாநந்தா; கடந்த, நிகழ், எதிர் காலங்களில் என்றுமுள்ள எழிலொளியானவள். 188

நிறைவளமிக்க நீர்வீழ்ச்சியானவள்; மிகப்பெரிய நீர்வீழ்ச்சியானவள்; வஸுதாரா எனும் நீர்வீழ்ச்சியாகப் பொழிபவள் / செல்வத்தைப் பொழிபவள்; இந்நற்சொற்களின் ஸாரமானவள் / இந்நல்வாக்கில் வெள்ளியென மின்னுபவள்; வானளாவும் மலையினின்று பொழிபவள்; இனிய புன்சிரிப்புடையவள்; நிலவொளியில் எழிலுற ஒளிர்பவள். 189

செல்வத்தைப் பொழிபவள்; இனிய வாக்பொழிவருள்பவள் / இவ்வினிய வாக்காய்ப் பொழிபவள்; விரைந்து வாக்கினைப் பொழியச் செய்யும் விரைவு நீரோட்டமானவள்/ வாக்கின் விரைவில் விரைவாகப் பொழிபவள்; விவரிக்க இயலாத வியன்தரு நீர்ப் பொழிவானவள்; இவ்வாக்கின் வண்ணத்தில்/எழுத்துக்களில் வண்ண ஒளி வீசி மிளிர்பவள். 190

இக்கவிதை அருட்கிளர்ச்சியினை அருளிய, ஒளிமிக்கவள் / இக்கவிதை அருட்கிளர்ச்சியில் ஒளிர்பவள்; இச்செய்யுட்களில் இசையுடன் ஒலிப்பவள்; வெகு அழகான அலகாநந்தா; இயம்ப இயலா இன்பம் செய்பவள். 191

தெய்வீகமான கங்கை; அமுத ஆறானவள்; தெய்வீக இன்பம் பொழியும் அருவியானவள் / தெய்வீக நீர் அருவியானவள்; தேவபூமியான இமயத்தில் இன்பப்பெருக்கானவள்; திவ்யச்சூழலுடை பள்ளத்தாக்கில் ப்ரவஹிப்பவள். 192

தவத்தில் ஒன்றிடச்செய்யும் அழகிய திவ்யச் சூழல் படைத்தவள்; உள்ளம் உள்ளில் ஒன்றி அமைதியுறச் செய்பவள் / உள்ளில் ஒன்றி அமைதியுறு உள்ளத்திலுள்ளவள்; இப்பைத்தியக்கார உலகினின்று வெகு தொலைவிலிருப்பவள்; என் உள்ளத்தின் பக்திக்கும் ஏக்கத்துக்கும் இலக்கானவள். 193

தவத்திலாழ்ந்த இவளுடன் ஒன்றியவள்; தவத்தை வளர்க்கும் சுற்றுச்சூழல் கொண்டவள்; தவத்திலுள்ள இவள் நாடும் அமைதிகொண்டவள்; ஸாதுக்களும் யோகிகளும் தவமிருக்கும் இடமானவள். 194

என்றுமுள்ள மாறா அமைதியானவள்/அமைதியளிப்பவள்; தவத்தில் ஒன்றுபடுவோர்க்கு அடைக்கலமானவள்; என்றுமுள்ள அமைதியின் நடுவே அழகுறப் பாய்பவள்; என்றுமுள்ள 'ஓம்'கார நாதத்தை ஒலிப்பவள். 195

ஆழ் அமைதியில் ஆறுதல் அளிப்பவள்; ஓசையற்ற அமைதியில் ப்ரணவத்தை ஆழ்ந்தொலிப்பவள்; பனியின் உறைவிடமான இமயத்தின் இன்னொலியானவள் / இமயத்தில் இனிதொலிப்பவள்; அமைதியினின்றெழுந்த இசை ஓசையானவள். 196

பனிநடுவே ஒளிர் நீர் உடையவள்; வெள்ளிப் பனிமலையினின்றிறங்குபவள்; வெள்ளி, பொன் ஒளிரும் எழில்படைத்தவள்; வெள்ளிப் பனிமலைக்கு எழிலொளி சேர்ப்பவள் / வெள்ளிப் பனிமலையில் பெரெழில் கொண்டவள். 197

விரைந்து செல்லும் மங்கள நீருடையவள்; அசையா மலையில் அசைந்தாடிக் கிளர்ந்து சுழலும் நீருடையவள்; இம்மங்களமான, விரைந்துதித்த பாடல்களால் இனிது பாடப்பெற்றவள்; மங்களமானவள்; வெண்மையானவள்; மங்களவரமளிப்பவள். 198

தங்கமயமான மலைகள் சூழ்ந்தவள்; பலவண்ணச் சாயலுடை எழில் தோற்றம் கொண்டவள்; அழகிய அலைகள் கொண்ட, இன்ப நன்னீர் கொண்ட அலகாநந்தா, மகிழ்வுடன் உடனிணைந்த ஸரஸ்வதி. 199

ஸரஸ்வதி; நல்வாக்களிப்பவள்; இடையருப் பெரும் வெள்ளத்தினால் அச்சுறுத்துபவள்; பீஷ்மரின் அன்னை; எனக்கும் தாயானவள்; கேஶவப்ரயாகையில் துதிக்கப்பட்டவள். 200

வேதவ்யாஸரின் குகையினின்று கட்புலனானவள்; கணேஶரின் குகையினின்று காணப்பட்டவள்; வ்யாஸாசார்யரால் த்யானிக்கப் பட்டவள்; மஹாபாரதத்திற்கு ஸாக்ஷியானவள். 201

ஸ்ரீக்ருஷ்ணரால் புகழப்பட்ட அலகாநந்தா; ஶிஷ்யனான உத்தவனின் தவத்தலமானவள்; பதரீகாஶ்ரமத்தில் பாய்ந்தோடுபவள்; பதரீவனத்தில் மயக்கும் எழிலுடையவள். 202

நரநாராயண மலைகளின் சரிவினில் இருப்பவள்; நரநாராயணர்களான அர்ஜுனனாலும் ஸ்ரீக்ருஷ்ணராலும் துதிக்கப்பட்டவள்; பதரீ எனும் புனிதத்தலத்தில் பெருக்கெடுத்தோடும் புனிதநீர் வெள்ளமானவள்; பதரீநாதருக்கு அபிஷேகமானவள். 203

பதரீகாஶ்ரமத்தில் துள்ளிக் களிநடம் புரிபவள்; பதரீகாஶ்ரமமே கோயிலாகக் கொண்டவள்; இத்தபோபூமியின் புதல்வியான கங்கை; நிலமகள் நேயனின் கோயிலருகிலுள்ளவள் / நிலமகள் நேயன் தன்னில் ஒன்றியவள். 204

மிகுந்த அழகுடன் பொலியும் அலகாநந்தா; மிகுந்த விரைவுடையவள்; மிகவும் தண்ணிய, பனியேயான நீர்கொண்டவள்; உள்ளத்தில் மிகவும் உணர்ந்தனுபவிக்கப் பட்டவள்; (இப்புதல்வியால்) தணியாத ஆத்ம தாகம் கொள்ளப்பட்டவள். 205

அச்சுறுத்தும் மிக்க விரைவு கொண்டவள்; மிகவும் ஆபத்தானவள்; ஆழம் காண முடியாதவள் (வெகு ஆழமானவள்); மிகவும் அச்சம் விளைப்பவள்; பனிநீர் கொண்ட அலகாநந்தா; நீரைத் தொட்டாலே உறைந்திடச்செய்பவள். 206

வெகுவெகு விரைவாக அமிழ்ந்தெழப்பட வேண்டியவள்; வெகுவெகு விரைவாக ஓடுபவள்/தூய்மைப்படுத்துபவள்; நீரின் கரையில் நன்கு உள்ளாழ்ந்து த்யானிக்கப்பட்டவள்; உள்ளாழ் மனதில் பூஜிக்கப்பட்டவள். 207

ஒவ்வொரு யாத்திரையிலும் அமிழ்ந்து நீராடப்பட்டவள்; மிக்க குளிர்ந்த நீரில் மாலேயில் இப்புதல்வியால் அமிழ்நீராடப்பட்டவள்; மிகவும் புனிதமானவள்; மிகுந்த நன்மையைத் தருபவள்; தனித்தன்மை வாய்ந்த நல்லியல்பு கொண்டவள். 208

அமைதிகொண்ட பதரீ எனும் புனிதத் தலத்துள்ளவள்; நர நாராயணர்களின் ஆஶ்ரமங்களேக் கொண்ட புனிதத்தலத்துள்ளவள்; உள்ளாழ்ந்து ஒன்றிடச்செய்யும் (தவத்தில் ஒன்றிடச்செய்யும்) நீரோட்டம் கொண்டவள்; உள்ளாழ்ந்த உள்ளத்தால் துதிக்கப்பட்டவள். 209

லக்ஷ்மணனின் அண்ணனுல் பூஜிக்கப்பட்டவள்; அழகிற்கு இலக்கணமான கங்கை; லக்ஷ்மணகங்கை, அலகாநந்தா ஒருங்கிணேயும் உவகைக் காட்சியானவள். 210

மலர்ப்பள்ளத்தாக்கில் பாய்பவள்; தங்கநீர்நிலேபோல் ஒளிர்பவள்; உயர்ந்த பனிச்சிகரங்களின் ப்ரதிபலிப்புடையவள்; பனிமலேயின் அழகிய ப்ரதிபலிப்பொளி கொண்டவள். 211

விஷ்ணுவின் திருவடியினின்றிழிந்த புனிதநீர் கங்கை; விஷ்ணுவுக்குகந்தவள்; தனித்த எழிலுடையவள்; வெண்ணிறத்தாள்; தௌளீகங்கா எனப்படுபவள்; விஷ்ணுவின் திருவடிகளே அபிஷேகிப்பவள். 212

விஷ்ணுப்ரயாகையில் ஸங்கமிக்கும் தௌளீகங்கா, அலகாநந்தா; மலேகட்கு நடுவே மிக்க எழிலுடன் திகழ்பவள்; விஷ்ணுவின் திருநாமத்தை எதிரொலிப்பவள். 213

மாலேயின் மங்கல் வெளிச்சத்தில் நன்கு த்யானிக்கப்பட்டவள்; ஸங்கமத்தில் மிக்க அழகுடன் ஒளிர்பவள்; அச்சுறுத்தும் முரட்டுப் ப்ரவாஹத்தில் மூழ்கி நீராடப்பட்டவள்; இத்தனித்த மறக்க இயலா அனுபவத்திஞல் மகிழ்வூட்டுபவள். 214

ஒளிமயமானவள்; தவத்தினே முழுமை செய்பவள்; நிலவொளியில் எழிலொளியுடன் மிளிர்பவள்; ஆழ்ந்த பள்ளத்தாக்கில் ஓடுபவள்; ஜோதிர்மடத்தில் விளங்குபவள். 215

லக்ஷ்மீ நரஸிம்ஹருக்குகந்தவள்; (இப்புதல்வியின்) அன்பிஞல் இளகிய, அமுதச்சாறு கொண்டவள்; அன்பிஞல் கனிந்த, வெகு இனிய பேச்சுடையவள்; தெய்வீகமாகப் பாடுபவள். 216

நந்தனை மகிழ்விப்பவனை [7] மகிழ்விப்பவள்; நந்தாகினியால் அழகுற இணையப்பட்டவள்; நந்தப்ரயாகையின் அழகிய சூழல் கொண்டவள்; மலைத்தொடர்கட்கிடையில் அழகிய பள்ளத்தாக்கில் செல்பவள் / மலைத்தொடர்களிடையே அழகிய நதியானவள். 217

அமைதியான, அழகிய நந்தாகினி; அலகாநந்தா, அச்சுறுத்தும் அழகி; நளினி; தாமரைக் கண்ணினுள்; தாமரைக்கண்ணனுகிய ஸ்ரீவிஷ்ணுவின் மங்கல நாமங்களைப் பாடுபவள். 218

நீராடப்பட்ட ஸங்கமத்தில் இன்பூட்டுபவள்; பரவியுள்ள பாறைகள், கற்கள் நிரம்பப் பெற்றவள்; அகன்ற பள்ளத்தாக்கின் எழிலானவள்; பசுமையான மலைகள் சூழப்பட்டவள். 219

கர்ணப்ரயாகையில் இசை பாடும் கங்கை; எழிலுடைப் பிண்டர் கங்கா உடனிணையப்பெற்றவள்; கர்ணப்ரயாகையில் ஸங்கமிக்கும் பிண்டர்கங்கா, அலகாநந்தா. 220

தொடுவதற்கு மங்களமான, மிகவும் குளிர்ந்த நீருடையவள்; தயக்கத்துடனேயே நீரில் இறங்கப்பட்டவள்; நீராடலில் புல்லரிக்கச் செய்திடும் கங்கை; தயக்கமின்றி அமிழ்ந்து நீராடப்பட்டவள். 221

குளிர்ந்த சுகமளிக்கும் கங்கை; பயணத்தின் வெப்பத்தைத் தணிப்பவள்; உள்ள, உடல் சோர்வினைப் போக்குபவள்; உள்ளத்தையும் உடலையும் புத்துயிர் பெறச்செய்பவள். 222

ஹரிபக்தர்களை விடுவிப்பவள்; ஹரியைப் பாடுதலை விரும்புபவள்; மலையுள் மறைந்திருப்பவள்; மிகவும் ஆழமானவள்; மலைகளில் உயர்ந்த, மிகச் சிறந்த இமயத்திலுள்ள தவப்புனிதத்தலமானவள்.

அல்லது

ஸ்வாமி ஹரிதாஸ்கிரிக்கு வீட்டுப் பேறளித்தவள்; ஸ்வாமி ஹரிதாஸரின் திவ்யநாம ஸங்கீர்த்தனத்தை விரும்புபவள்; ஸ்வாமி ஹரிதாஸ்கிரி மறைந்த இடத்தில் வெகு ஆழமானவள்; இச்சிறந்த துறவியின் தவத்தலமானவள். 223

மலைச்சரிவுதனில் எழிலார்ந்தவள்; மலை நடுவே உள்ளவள்; மலையில் முழக்கம் செய்பவள்; மலைமுழைஞ்சினின்று அழகாகக் காணப்படுபவள்; மலை நதியானவள் (மலைத்தொடர்களிடை ஓடும் நதியானவள்); மலையிலுள்ள இனியவள். 224

[7] ஸ்ரீக்ருஷ்ணன்

ருத்ராணி; ருத்ரனுக்குகந்தவள்; ருத்ரப்ரயாகையில் ஒளிர்பவள்; மந்தாகினீ; அலகாநந்தா; கூடிக் களித்து விளையாடுபவள். 225

மந்தாகினீ; கேதார அழகி; புன்னகைக்கும் மென்னொளி படைத்தவள்; அலகாபுரியில் பிறந்த அலகநந்தா; வெண்ணொளி படைத்தவள்; அச்சுறுத்தும் அழகி. 226

மந்தாகினீ, பலவண்ண வடிவெழில் கொண்டவள்; எழிலுறச் செல்பவள்; நுரை பொங்கும் அழகிய அலகாநந்தா; பாறைகளில் மோதி உறுமுபவள். 227

வெள்ளியென மின்னும் அலகாநந்தா; அடர் பச்சை நிறத்தில் ஒளிரும் மந்தாகினீ; விஷ்ணுகங்கை, தேவலோகத்தினின்று எழிற்கூத்தாடி வருபவள்; சிவகங்கையின் [8] எழிற்கூடல் கொள்பவள். 228

இணையில்லாத அனுபவம் அளிப்பவள்; ஸங்கமத்தில் மூழ்கி நீராடல் புல்லரிக்கச்செய்பவள்; மிகுந்த ஆற்றலுடன் வேகமாகப் பிடித்து இழுப்பவள்; ஆழ்ந்து நீராடல் வெகு அபாயகரமாய் அமைந்தவள். 229

ஏராளமான புனித நீர்ப் பெருவெள்ளமானவள்; விரைவுச் சுழல்களினால் அச்சுறுத்துபவள்; பனி நீர் கொண்டவள்; வெகு விரைவாக ஓடுபவள்; வெகு வெகு விரைவாக அமிழ்ந்தெழப்பட்டவள். 230

நூற்றெட்டு முழுக்குகள் போடப்பட்டவள்; நூற்றெட்டு ஶ்லோகங்களினால் அர்ச்சிக்கப்பட்டவள்; பரம்பொருளை வேண்டும் இவ்வுள்ளத்தில் பரந்திருப்பவள்; இப்புதல்வியால் விரும்பப்பட்டவள்; விருப்பம் நிறைவு பெறச் செய்பவள்; மிக மேன்மையானவள். 231

நாரதப் பாறை [9] எனும் பெரும் பாறையின் பக்கலில் பாய்பவள்; கங்கா ஸ்தோத்ரத்தால் நன்கு பூஜிக்கப்பட்டவள்; ஸ்ரீத்யாகராஜகுருஸ்வாமியின் நற்கீர்த்தனங்கள் பாடித் துதிக்கப்பட்டவள். 232

ஸ்ரீநாரதகுருஸ்வாமியின் வீணை இசையில் இசைந்திருப்பவள்; நாரதரால் இன்புற்றுப் பாடப்பட்டவள்; பண்ணிசைத் தாளத்துடன் இசைந்தேத்தப்பட்டவள். 233

---

[8] கேதாரத்தலத்தினின்று வரும் மந்தாகினீ

[9] ஸங்கமத்தின் அருகில் ஸ்ரீநாரதர் அமர்ந்து வீணைகானம் செய்ததாகக் கூறப்படும் பெரிய பாறை

புத்திளமை எழில் ததும்புபவள்; நீர் முழுமையாய் நிறைந்தவள்; ஶரத்கால முழுநிலவில் எழிலொளி மிளிர்பவள்; (இரவின் தலைவனுன) தண்மதி சிரிக்கும் அலைகள் படைத்தவள்; பாற்கடலை நிகர்த்தவள். 234

மிகச்சிறந்த இன்பமான இன்னிசை இன்பமானவள்; நீறைச்சொரிந்து இன்பப்புல்லரிப்பு உண்டாக்குபவள்; குரு கீர்த்தனங்கள் பாடப்பட்டவள்; இக்கவியுள்ளத்தால் நன்கு துதிக்கபட்டவள். 235

ஶங்கரனின் கோயிலில் பாடப்பட்டவள்; மங்கலமான ஶிவனுக்கு அபிஷேகமாயுள்ளவள்; 'ஓம்'கார ஶ்ருதியை ஒலிப்பவள்; 'ஓம்'கார நாதத்தில் ஒன்றிய இவ்வுள்ளத்தில் கோயில் கொண்டவள். 236

ஸங்கமத்தில் மிக்க அழகு கொண்டவள்; பகலவனும் வெள்ளிநிலவும் ஒளிரும் அழகுள்ளவள்; தெளிவாக இருநிறங்களில் இணைபவள்; வண்ணக்கூத்திடும் மெய்யொளியானவள். 237

மந்தாகினீ; விண்ணுலக கங்கை; மகாதேவனின் கருணை பெறச்செய்பவள்; பிண்டாரி, நந்தாகினி, தெளளி கலந்திட்ட, அழகி அலகாநந்தா. 238

மங்களமானவள்; விஷ்ணுவின் திருவடியினின்றுதித்தவள்; மங்களம் செய்பவள்; அச்சமுண்டாக்குபவள்; இன்னொலி படைத்தவள்; இன்னொலி இன்பமானவள்; இன்னொலி இன்பம் பயப்பவள். 239

விஷ்ணுகங்கா; ஶிவனின் இன்பமானவள்; ருத்ரப்ரயாகையில் ஸங்கமிப்பவள்; ஸத்யகாமனுகிய விஷ்ணுவின் அருள் பெறச்செய்பவள் / மெய்யினையே விரும்பும் அருள் பாலிப்பவள்; ஸதாஶிவனின் வரமருள்பவள் / எப்போதும் மங்களமாம் வரமருள்பவள். 240

ஸகோதரி பாகீரதியின் புனிதநீருடன் கலந்திட்ட அழகி அலகாநந்தா; தேவப்ரயாகையின் புனித நீர்வெள்ளமானவள்; கங்கை எனும் திருப்பெயருடைய மிகச்சிறந்த நதியானவள். 241

உயர்ந்த பனிமலைச் சிகரத்திலுதித்தவள்; ஆழ்ந்த பள்ளத்தாக்கில் ஸங்கமம் உள்ளவள்; உலகின் நன்மை வழியானவள்; மாந்தரை உய்விக்க ஓடுபவள். 242

ரகுநாதனின் திருவடித்தலத்தில் ஓடுபவள்; ரகுநாதனின் அருள் பெறச்செய்பவள்; தொன்மையானவள்; முழுமையானவள் – நிறைவானவள்; கங்கை; மிகவும் பாடப்பட்ட புனிதத்தலமானவள். 243

விசைவேகமிக்க, அச்சுறுத்தும் அலகாநந்தா; பயங்கரமான பாகீரதி; இருநீர்களும் கலந்தோடுபவள்; கங்கை எனும் பெயருடைய பேரழகி. 244

பள்ளத்தாக்கில் நீர் முழுநிறைந்தோடுபவள்; கண் நிறையும் காட்சியானவள்; தனிப்பட்ட அழகுடைய நீர் கொண்டவள்; மங்களத்தின் தனிப்பட்ட இலக்கணமாக இலங்குபவள். 245

உயர்ந்த அலைக்கரங்களுடையவள்; (அலைக்கரங்களால்) ஆசீர்வதிப்பவள்; தன்பால் ஈர்ப்பவள்; வெகு விரைவாகச் செல்லும் நீரோட்டமுடையவள்; இவ்வுலகவாழ்வுச்செலவில் உண்மை வழியில் நன்கு நடத்திச் செல்பவள். 246

அச்சந்தருபவள்; அருஞ்ஞேயத்தில் அழகுற ஒளிர்பவள்; தொடரும் வினைக்கடன் கட்டுக்களைத் தகர்த்தெரிபவள்; கருணைப் பொழிவாம் நீர்கொண்டவள்; நீர்வடிவிலுள்ளவள்; மேலான பரம்பொருளானவள். 247

பரிவு கொண்டவள்; வலிமை வாய்ந்தவள்; அன்னை; வலிவின்மையைப் போக்குபவள்; மூப்பற்றவள்; மூப்பு முதலிய துன்பங்களைப் போக்குபவள்; உள்ள, உடல் துன்பங்களை அழிப்பவள். 248

அதிகம் நீராடி மகிழப்பட்டவள்; பற்பல நேரங்களில் அமிழப்பட்டவள்; உதயம், காலை, நடுப்பகல், மாலைப் பொழுதுகளில் நீராடி உள்ளாழ்ந்து உணரப்பட்டவள். 249

உயிரைக் காத்துக்கொள்வதற்காகவே விடாது உறுதியாகப் பற்றிக் கொள்ள வேண்டிய இரும்புச் சங்கிலிகளைப் பறித்து வலிய இழுக்கும், மிகவேகமுடைய, பயங்கரவெள்ளத்தையுடைய தேவப்ரயாகை நதியானவள். 250

மறக்கமுடியா இவ்வனுபவத்தை உண்டாக்குபவள்; பிற நிகழ்வுகளை மறக்கப்படவேண்டியவையாகச் செய்பவள்; வெள்ளி நிலவொளியில் பால்கங்கையாகத் திகழ்பவள்; பகலவன் ஒளியில் வைரமாக ஒளிர்பவள். 251

நிலைபேறருள்பவள்; நிலைத்த மங்களம் அருள்பவள் / என்றும் மங்களாமானவள்; தொடர்ந்த உள்தூண்டல் பெறச் செய்பவள்; மின்னலொளி படைத்தவள்; நல்மங்களமருளும் நீர் கொண்டவள் ; நல்லின்பம் பயப்பவள். 252

வாழ்க்கையின் பிற்பகல் வெம்மையில் மனக்குகையினின்று காணப்பட்டவள்; கரையில் இத்துதிகள் பண்ணுடன் பாடப்பட்டவள்; இப்பண்ணிசைத் துதிகளால் அர்ச்சிக்கப்பட்டவள். 253

தடைகளை உடைத்தெறியும் வேகம் கொண்டவள்; எண்ணச்சுழல்களைத் தடை செய்பவள்; விண்ணிலும் மண்ணிலும் பாயும் தெய்வத்தன்மையுடையவள்; அன்றாடச் செய்கைகளில் எப்போதும் நினைந்து வணங்கப்படுபவள். 254

ஸதோபாந்த பனித்தொகுதியினின்று வரும் அலகாநந்தா; பாகீரதி, அழகிய கோமுகத்தினின்றிழிபவள்; உயர்ந்தெழும் அலைகள் அழகுக்கூத்தாடுபவள்; (ஆடும் அலைகள்) வரவேற்கும், இன்பப் பரவசமூட்டும் ஸங்கமத்தினள். 255

அமைதியாக ஓடும் அலகாநந்தா; கொந்தளித்து ஆரவரம் செய்து ஆர்ப்பரிக்கும் பாகீரதி; அலைக் கரங்களால் இப்புதல்வியை அணைத்துக் கொள்பவள்; கலப்பற்ற தூய இன்பம் அருள்பவள். 256

ஆசிர்வதிக்கும் அலைகள்கொண்ட பெருக்கானவள்; அமுத வெள்ளத்தில் முழுக்கி நீராட்டுபவள்; ஸத்துவம் நிறைந்த நன்னீரைப் பொழிபவள்; ஸத்துவம் நிறை ஸ்ரீராமனை அபிஷேகிப்பவள். 257

மிக்க குளிர்ச்சியான நீர்கொண்டவள்; நல்மங்கலம் நல்கும் கங்கை; ஆசியளிக்கும் அலைக் கரங்களால் மகிழ்விப்பவள்; குளிர்ந்த நீரைத் தொட்டாலே மகிழ்விப்பவள்; ஆனந்தத்திற்கு வேரான இறைவி. 258

முடிவற்ற எண்ண வெள்ளத்தைத் தடை செய்பவள்; தங்குதடையற்ற கவிதைவெள்ளமாய்ப் பொழிபவள்; தங்கு தடையற்ற நீரோட்டவேகம் கொண்டவள்; இடைவிடாது ‘ஓம்’காரத்தை ஒலிப்பவள். 259

கருணை நீர் வெள்ளமாய் ஓடும் கங்கை; பத்துதலை ராவணனின் எதிரியால் ( ஸ்ரீராமனால்) துதிக்கப்பட்டவள்; இரவும் பகலும் நினைக்கப்பட்ட அன்னை; தெய்வீகமான அழகுடன் ஒளிர்பவள். 260

தெய்வீகமானவள்; அடர் பச்சை நிறத்தினள்; புனிதமான தேவப்ரயாகையில் காட்சியளிப்பவள்; திவ்யானுபவத்தினால் பாடப்பட்டவள்; திவ்யப்பெயருடையவள்; மங்களமான கங்கை. 261

இந்நற்றுதிகளைப் பாடும் மகிழ்வளிப்பவள் / இவ்விசை நற்றுதிகளின் மகிழ்வே ஆனவள் / பாடப்பட்ட இந்நற்றுதிகளில் மகிழ்பவள்;

உளநிறைவளிக்கும் அன்னை; உளநிறைவெனும் பாடத்தைக் கற்பிப்பவள்; பணிவுடன் துதிக்கப்பட்ட, மங்களமானவள். 262

கம்பீரமாகச்செல்லும் கங்கை; பாட்டினிமை கொண்ட இவ்வாக்கில் இருப்பவள்; மங்கள இன்பத்திற்கு வழியானவள்; வற்றுதவள்; வறண்ட இவ்வுள்ளத்திற்கு அடைக்கலமானவள். 263

வற்றுத கவிப்பொழிவை உண்டு பண்ணுபவள்; மிகையற்ற இத்துதியில் மிளிர்பவள்; ஓயாத இக்கவிமழையாக உள்ளவள் / ஓயாத இக்கவிமழை பொழியச் செய்பவள்; ஓய்வமைதிக் கவிதை இன்பம் தருபவள் / இவ்வோய்வமைதி கொண்ட கவிதையின் இன்பமானவள் / இவ்வோய்வமைதி கொண்ட கவிதையை அருள் செய்த மங்களமானவள். 264

மிகவும் போற்றப்பட்ட தேவி; பலவண்ணங்கள் மிளிர் தூயவள்; பலவகை நடமிடும் அலைகள் கொண்டவள்; மிக்க மதிப்பிற்குரியவள்; பல கிளை நதிகள் கொண்டவள். 265

நிலவொளியில் வெள்ளிமயமானவள்; பொன் வெள்ளிமயமான எழில் மின்னுபவள்; கதிரவன் ஒளியில் பளபளப்பவள்; இரக்கமுள்ளவள்; மங்கள ஒளி வீசுபவள். 266

இரவில் வெள்ளிக் கீற்றுனவள்; பகலில் வெள்ளித் தகடானவள்; பயணக் களைப்பினைப் போக்கிடும் கங்கை; தெய்வீகமான, புத்தம்புதிய நன்னீருடையவள்/ புத்துயிரூட்டுபவள். 267

நன்கு பற்றிக்கொள்ளப்பட்ட திருநாமமுடையவள்; இம்மங்களச் சொற்கோவையில் ஓடுபவள்; தூய ஸத்துவ அன்பு கொண்ட இவ்வுள்ளத்தால் துதிக்கப்பட்ட கங்கை; ஸத்துவ உள்ளுயிர்ப்பு அருள்பவள். 268

என்றுமுள்ள அழகும் இளமையும் கொண்ட கங்கை; என்றும் இருக்கும் இளமையைக் கொடுப்பவள்; மெய்யானவள்; நல்மங்களத்துடன் கூடியவள்; மலையினின்று கடலை நோக்கிச் செல்பவள் / கடலை நோக்கிச் செல்லும் மலையின் இசையானவள். 269

மிக அழகியவள்; மிக்க ஆற்றலும் களிப்புமுள்ளவள்; அழகிய இமயமலையிலுள்ளவள்; மிக வேகமுடையவள்; நல் மருந்தானவள்; நீராடலில் நன்மை பயப்பவள்; இன்னொலியுடையவள்/இன்குரலளிப்பவள்; இச்சொற்களை ஒலிக்கச்

செய்தவள் / சொற்களுக்குரியவள்; அழகான நீரோட்டமுடையவள்; நல்லின்பம் நல்குபவள். 270

இச்செய்யுட்களில் ப்ரதிபலிக்கும் ஒளியானவள்; ஒளிரும் மிகச்சிறந்த நதியானவள்; அமைதியாகச் செல்லும் கங்கை; அமைதி அளிப்பவள்; காட்டில் செல்பவள். 271

அழியாப் பெரும்புகழ் படைத்தவள்/படைப்பவள்; அழிவற்றவள்; காட்டில் ஸஞ்சரிப்பவள்; அழிவனவற்றில் பற்றைப் போக்கிடுபவள்; உளத்துன்பம், தீவினை ஆகியவை இல்லாமல் போகும் சூழல் உடையவள். 272

மிகவும் மேன்மையான நீருடையவள்; இனிய கானம் இசைக்கும்/இசைக்கச் செய்யும் கங்கை; மேன்மையான அழகுடன் ஒளிர்பவள்; நாதத்தில் மகிழ்பவள் / நாதத்தால் மகிழ்விப்பவள்; மிகச்சிறந்த நதியானவள்; மங்கலப் பெருக்கான கங்கை; இன்னிசை ஒலியால் மகிழ்விப்பவள் / இன்னிசை மகிழ்வளிப்பவள். 273

தாள ஒழுங்குடன் நடமாடிச் செல்லும் எழில் கம்பீரமுள்ளவள்; மிக மென்மையான இனிய ஒலியுள்ளவள்; மென்மையே அடையாளமாகக் கொண்டவள் (மென்மையான நீர் கொண்டவள்); மென்மையான மொழியுடையவள்; தேனினிய கங்கை; அறிவாற்றல் அருள்பவள். 274

வியந்தரு பேரழகு கொண்ட கங்கை; மிக்க எழில் நயத்துடன் செல்பவள்; மிக்க இனிய நீர் கொண்ட கங்கை; பேரினிய பயன் தருபவள். 275

வளைந்து வளைந்து செல்பவள்; இவ்வுலக இன்பங்களுக்கான தாகத்தை அழிப்பவள்; உண்மை இன்பத்துய்ப்பளிப்பவள்; துய்த்து இன்புற வேண்டிய அமுதானவள்; இந்த பக்தையின் வாழ்வின் உயிர்நாடியானவள்; இந்த பக்தையை வாழ்விக்கும் புனித நீர் கொண்டவள். 276

அடர்க்காட்டில் பாயும் கங்கை; காடுகள் கொண்ட மலைச்சரிவின் மிக்க எழிலானவள்; வெண்மையான மணற்கரையுடையவள்; அடர்பச்சை நிற நீரழகுடன் ஒளிர்பவள். 277

மாலையின் மங்கலொளியில் நன்கு அமிழ்ந்து நீராடப்பட்டவள்; பட்டுப்போன்ற மென்னீரால் மகிழ்விப்பவள்; நீராடற்கு முன்னும் பின்னும் த்யானிக்கப்பட்டவள்; (இப்புதல்வியின்) ஒவ்வொரு நீராட்டிலும் பருகும் நீரிலும் முழுமையாக உள்ளவள். 278

பட்டினும் வழவழப்பான மேல்தலமுடைய கம்பீரமானவள்; கௌஸல்யாவின் புதல்வனுல் புகழப்பட்டவள்; பட்டுப்போல் பாடல்கள் பொழிந்த ஸ்ரீத்யாகராஜஸ்வாமிகளின் பாட்டில் இருப்பவள்; ஸ்ரீத்யாகராஜ குருதேவரின் இம்மகளைக் காப்பவள். 279

தூய ஸ்படிகம் போன்ற தெளிந்த நீரோட்டமுடையவள்; கண்ணுடித் தெளிவுடன் பொன்னென மின்னும் நீர்கொண்ட, மிகச்சிறந்தவள்; பட்டுப்போல் வழவழவென்று தொடுவதற்கின்பம் தருபவள்; நீராடலில் வியன்தரு தண்மை செய்பவள். 280

பசுமையான காட்டினைப் பிரதிபலிக்கும் நீர் கொண்டவள்; தூய நீல நிறத்தில் தெள்ளென ஒளிர்பவள் (நீல வானின் பிரதிபலிப்பு); மஞ்சளும் பழுப்பும் செம்மையும் கலந்த அழகுடன் திகழ்பவள் (காட்டின் நிறம்); அமைதியான நீரோட்டத்துடன் எழிலுறச் செல்பவள். 281

தங்கப் பனிமலையினின்று செல்லும் கங்கை; பொன்னெளிர் அழகி; கண்ணுடியென ஒளிரும் (மலைக்காட்சிகளைக் காட்டும்) நீரோட்டம் கொண்டவள்; இவ்வுள்ளக்கண்ணுடியில் பளிச்சிடுபவள். 282

தெள்ளத்தெளிந்த தூய நீருடையவள்; அடியிலுள்ள கற்கள், பாறைகளின் இயல்பு மேற்பரப்பினின்று புலப்படும்படியானவள்; இயற்கை அழகுடன் ஒளிர்பவள்; தனித்த சிறப்புடையவள். 283

அடித்தலம் குணங்களற்ற/குணங்கட்கப்பாற்பட்ட ப்ரம்மனைக் குறிப்பவள்; தூய மெய்யறிவின் மங்களஒளிர்வானவள் (ஶுத்த சைதன்யத்தின் தூய ஒளியானவள்); மேற்பரப்பில் ப்ரம்மன் குணமுள்ளதாகக் காட்டுபவள்; ஸகுணப்ரம்மத்தின் மெய்யொளி வீசுபவள். 284

அடித்தலத்தில் ப்ரம்மனின் இயல்பைக் குறிப்பவள் (இயல்பற்ற தன்மை); ப்ரம்மனைப்பற்றிய உண்மையை விளங்கச்செய்பவள்; மேற்றலத்தில் இயற்கையை ப்ரதிபலிப்பவள்; மெய்ப்பேரின்பத்தை வெளிச்சமிட்டுக் காட்டுபவள். 285

அறிவின்மையாகிய அழுக்கை நீக்குபவள்; மெய்யறிவை நன்கு வளர்ப்பவள்; அறிவின்மையில் திளைத்திருக்கும் மாந்தர் அடையவேண்டியவள்; மெய்யறிவுப் பகலவனின் வெளிச்சத்தைக் காட்டி மெய்யின்பமளிப்பவள் / மெய்யறிவுப் பகலவனின் ஒளிவீசும் நீருடையவள். 286

மணற்கரையில் நன்கு த்யானிக்கப்பட்டவள்; மாலை மருளில் பேரழகினால் உள்ளத்தை நிறைவமைதி பெறச்செய்பவள்; ஆழ்பேரின்பம் அளிப்பவள்; உள்ள ஆழத்தினின்று அமைதி செய்பவள். 287

பறவைகளின் இன்னிசையுடன் இனிது ஒலிப்பவள்; நாதத்தின் மூலமான நீடமைதி செய்யும் நீருடையவள்; அமைதியாகச் செல்லும் நீரோட்டம் கொண்டவள்; மெய்ப்பொருளை விளக்கும், இசைநீர் கொண்டவள்/ஆறானவள். 288

இனிய, எழிலுறு கங்கை; உளத்துன்பத்தை அடித்துச் செல்பவள்; இன்பம் தருபவள்; அசையா மலைகட்கிடையே அமைதியாகச் செல்பவள்; அமைதிக்கிடையே இதமான மென்குரல் ஒலிப்பவள். 289

மாலைமருளில் மிக்க எழிலுடன் திகழ்பவள்; மாலை அமைதியில் உறைபவள்; மாலை அமைதியில் ஒன்றியவள்/ஒன்றச்செய்பவள்; ப்ரணவத்துக்குள் ஆழ்ந்துள்ள அமைதியானவள்; ப்ரணவ நீடமைதியின் உறைவிடமானவள். 290

நாதத்தொடக்கமான ப்ரணவத்தின் வடிவானவள்; ப்ரணவத்தின் வித்தான ஆழ் அமைதியானவள்; ஆழ் அமைதியினின்றெழும் நாதமானவள்; ப்ரணவத்தின் உருவாம் இன்னிசையானவள். 291

ஆழ்ந்த இசையினால் இருளில் மகிழ்வூட்டுபவள்; அடர் அமைதியில் இன்னொலி இசைப்பவள்; அமைதியானவள்; ஆழ்நீருடையவள்; அமைதியில் ஒலிக்கும் மென்மையான இசையானவள். 292

அடர் பச்சை நிறத்தில் ஒளிர்பவள்; மணலில் ஓசையின்றிச் செல்பவள்; கற்களிலும் பாறைகளிலும் நடம்புரிபவள்; அடர் இருளில் மின்னலென ஒளிர்பவள். 293

உதிக்கும் ஆதவனின் புன்னகையை நீரில் கொண்டவள்; பொன்னென மிளிரும் நீருடையவள்; தனது நன்னீரில் புன்னகைப்பவள்; இத்துதியே ஆனவள்; இத்துதிபாடுபவளும் தானே ஆனவள்; கரைபுரண்டு பெருக்கெடுத்தோடும் நீர் கொண்டவள். 294

பருவங்களின் சுழற்சியில் பலவகையாகத் தோன்றுபவள்; இயற்கையின் ஒழுங்கு நன்கு காணப்படுபவள்; மாறா இயல்பினளாகிய கங்கை; இயற்கை இயல்புக்குக் கண்ணாடியானவள். 295

கோடையில் முழுநிறைந்தோடும் நீர்ப்பெருக்குடையவள்; பனிக்காலத்தில் அமைதியாகச் செல்பவள்; தெளிந்த அமைதியுடன் ஸ்படிகம் போல் ஒளிர்பவள்; மழைக்காலத்தில் மண்ணிற நீர் கொண்டவள். 296

பனிக்காலத்தில் பசிய நீலநிற எழிலொளி படைத்தவள்; ஶரத்சந்திரனும் வானும் ப்ரதிபலிக்கும் நீருடையவள்; நீர் ஸ்படிகம்போன்ற தெள்ளொளி படைத்தவள்; இயற்கையின் பிம்பம் காணும் கண்ணுடியானவள். 297

நிலவின் எழில்பிம்பம் காணும் நீருடையவள்; நிலவைச் சென்னிமிசைக் கொண்டோனின் சென்னியிலிருப்பவள்; நிலவொளிப் பிரதிபலிப்பில் பால் வெள்ளமாயுள்ளவள்; மின்வெட்டுப்போல் மிளிர்பவள் / மின்னொளியில் பளபளப்பவள். 298

வெள்நுரையுடன் பசுமையாகவும் வெள்ளியாகவும் ஒளிர்பவள்; பாம்பணைப்பள்ளிகொண்டோனின் திருவடிநீரானவள்; நீல அடர்முகில் வண்ண உருக்கொண்டவள்; நீலத்தெளிந்த நீரெழில் கொண்டவள். 299

மிகக்குளுமையானவள்; இவ்வெழுத்துக்களின் வண்ணமானவள்/எழில் நிறம் படைத்தவள்/தங்கநிறமானவள்; துன்புற்று வெம்மையுற்ற உள்ளத்தைக் குளிர்விப்பவள்; தண்ணிய நீரினுல் இன்பமளிப்பவள்; தவத்தில் ஒன்றிய இவ்வுள்ளத்துக்கு அமைதி அளிப்பவள். 300

மலைகளில் துள்ளிக்குதித்து ஆர்ப்பரித்துச் செல்லும் கங்கை; பாறைகளூடே பேரிரைச்சலுடன் பாய்பவள்; மணல்மேல் அமைதியான நீரோட்டமானவள்; சமவெளியில் அமைதியுடன் செல்பவள். 301

மலைகட்கு நடுவில் ஓடும் கங்கை; மலைத்தொடர்களில் சுற்றிவளைந்து செல்பவள்; ரிஷிகேஶத்தை அடைபவள்; நடமிடும் அலைகள் நிறைந்தவள். 302

ரிஷிகேஶத்தில் புன்னகைக்கும் கங்கை; ரிஷிகேஶ புனிதத்தலத்தில் துதிக்கப்பட்டவள்; ரிஷிகேஶனின் திருவடி அடையாளமானவள்; ரிஷிகேஶனும் விஷ்ணுவின் திருவடியினின்று அவதரித்தவள். 303

ரிஷிகேஶத்தில் மிக அகன்றவள்; மலைவடிவிலுள்ள ரிஷிகேஶனுக்கு மாலையானவள்; ரிஷிகேஶத்திலுதித்த இக்கவிதை அருட்கிளர்ச்சிக்குக் காரணமானவள்; ரிஷிகேஶத்தில் மலர்ந்த இத்துதியை உடையவள்/துதிக்குத் தூண்டலானவள்/துதியே ஆனவள். 304

அறிவாற்றலைத் தூண்டிடும் கங்கை; அறிவிற்சிறந்தவள்; மங்களச்செல்வம் நிறைந்தவள்; மிகச்சிறந்த பண்புகள் நிறைந்தவள்; உள்ளொளி ஆற்றலைத்

தட்டி எழுப்புபவள்; நினைத்த இவ்வெண்ணங்களால் அப்படியே அர்ச்சிக்கப்பட்ட மங்கள தேவதை. 305

பற்றற்ற உள்ளத்தினையும் மெய்யறிவையும் அருள்பவள்; மெய்யறிவின்பப்பலன் அருள்பவள்; யோகத்தில் ஆழ்ந்திருக்கும் தன்மையை வளர்ப்பவள்; தவத்திற்கேற்ற புனிதத்தலமானவள். 306

நன்மையளித்து உள்ளமைதியும் நல்கும் அன்னை; தண்ணிய தொடுகையால் கொஞ்சுபவள்; சினத்தையும் துன்பத்தையும் அழித்திடும் கங்கை; பாபத்தை அழிக்கும் தூயநற்காட்சியானவள். 307

கம்பீரத்தின் மறுபெயரான கங்கை; கரைபுரண்டோடுபவள்; அழகியவள்; உள்ளத்தை மகிழ்விப்பவள்/உள்நினைந்து மகிழப்படவேண்டியவள்; காமனை எரித்த ஶிவனுக்கு மகிழ்வூட்டும் குளிர்ச்சியுடையவள். 308

மலையிற்பிறந்தவள்; மலையில் பாய்பவள்; குற்றமற்றவள்; மலையின் ஒளி-யானவள்; மலையிற்பிறந்த இம்மகிழ்வுப்பாட்டில் இருப்பவள் ; மலையில் அலைகள் கூத்தாட இசைத்துச் செல்பவள். 309

குங்கும எழிலொளியுடன் திகழும் கங்கை; மலர்களால் அர்ச்சிக்கப்பட்டு அழகுடன் ஒளிர்பவள்; மங்களமே அடையாளமாகக்கொண்டவள்; ரூபத்தில் உயர்ந்தவள்; மிக்க இனிய இன்னிசையொலி படைத்தவள்/இன்னிசைக் குரல் அருள்பவள். 310

கவிதை உள்தூண்டல் செய்திடும் கங்கை; அகங்கிளர்ந்தெழும் கவிதை லயத்திலுள்ளவள்; உட்கிளர்ச்சியிலுதித்த கவிதையில் புன்னகைக்கும் மங்கள வாக்தேவதையானவள்; கவிதை உட்கிளர்ச்சியின் மூலமான என் அன்னை. 311

இக்கவிதை ஒளியில் ஒளிர்பவள்; எழிலொளிர் மங்கள கங்கை; பகலவன் ஒளியில் பளபளப்பவள்; பனிக்கதிர் நிலவொளியில் மயக்கும் எழில் கொண்டவள். 312

கட்புலனுகும் கவிதை இன்பமானவள்; இக்கவிதையில் இன்பஒலி எழுப்புபவள்; கவி உள்ளத்தை இன்பூட்டுபவள்; காவ்ய நறுமணத்தில் மிக இன்புறுபவள் / காவ்ய நறுமணமாம் மிக்க இன்பத்தை ஊட்டுபவள். 313

பயணத்திற்குப்பின் களிப்பூட்டும் காட்சியானவள்; அமிழ்ந்து நீராடலில் அலுப்பை அடித்துச்செல்பவள்; இரவில் இதமுடன் தூங்கச்செய்பவள்; காலையில் காட்சிதந்து அருள்பவள். 314

அருணோதயத்தில் மங்கள நீராடப்பட்டவள்; மாலை நீராடலில் அமைதி அளிப்பவள்; விடியற்காலை அமைதியோடொன்றியவள்; அந்தியில் அமைதியான எழிலொளி கொண்டவள். 315

விடியற்காலைக்குமுன் நீராடலில் மிக்க இன்பூட்டுபவள்; தீபாவளியன்று மங்களமாகப் பூஜிக்கப்பட்டவள் / விளக்குவரிசையால் நன்கு பூஜிக்கப்பட்டவள்; விளக்கொளியில் மின்னும் கங்கை; பட்டாடையில் எழிலுற மிளிர்பவள். 316

விடியற்காலையில் வண்ண எழிலொளியால் மகிழ்வூட்டுபவள்; பொன், வெள்ளியாக ஒளிர்பவள்; விடியற்காலையில் சொற்களுக்கெட்டாத எழிற்சூழலுடன் விளங்குபவள்; என்றும் மங்களமான இன்னொலி படைத்தவள். 317

புனிதநீராடி, புனிதநீர் பருகியபின் பாடப்பட்டவள்; த்யானத்திலாழ்ந்த இப்புதல்வியால் துதிக்கப்பட்டவள்; நீர்ப்பெருக்கினிடையே பாறையிலமர்ந்த இவ்வுண்மை பக்தையால் துதிக்கப்பட்டவள். 318

விடியற்காலைப் பாட்டின் ஶ்ருதியான கங்கை; பறவைகள் கூடவே இசைக்கும் மெல்லிய ஒலிகளில் மகிழ்பவள்; விடியற்காலை பாட்டினால் பூஜிக்கப்பட்ட கங்கை; மெய்யறிவுக் கதிரவனின் உதயத்தை ஒலிப்பவள். 319

விடியற்காலைப் பாட்டின் பண்ணானவள்; அருணோதயத்தின் புன்னகையுடன் கூடியவள்; உதயகாலத்தில் அமைதியாகத் தெளிந்திருப்பவள்/ அமைதித் தெளிவூட்டுபவள்; கானாஞ்ஜலி வரமருள்பவள் / கானாஞ்ஜலியில் மகிழ்பவள். 320

ஸ்ரீத்யாகப்ரம்மத்தால் இனிது பாடப்பட்ட நற்கீர்த்தனை வெள்ளத்தில் ப்ரவஹிப்பவள்; சிஷ்யை புஷ்பாவின் மூலம் அவற்றைக் கேட்பவள்; குருவின் பாடல்களில் மகிழ்பவள். 321

தீக்ஷிதரால் மிகவும் புகழ்ந்து பாடப்பட்ட மீனாக்ஷி, அன்னபூரணி; தீபாவளிதினத்தில் முக்தி அடைந்த ஸித்தரான தீக்ஷிதரால் நன்கு துதிக்கப்பட்டவள். 322

ஸ்ரீதீக்ஷிதரின் க்ருதிகளைக் கேட்பவள் (இப்புதல்வியால் பாடப்பட்டு); ஸ்ரீசக்ரத்தின் நடுவிலுள்ள தேவியானவள்; ஸித்திப்ரஸாதமான வீணையை அளித்தவள்; காஶியாம் புனிதத்தலத்தில் இவ்வரிய நிகழ்ச்சியை அருளியவள். 323

தீக்ஷிதர் அஞ்சலி செய்து இருகரங்களிலும் எடுத்த நீரானவள்; தீக்ஷிதருக்கு ஸித்தியின் முழுமை அருளியவள்; கைநீரில் வீணை அருளியவள்; வீணையின் நாதத்தில் மகிழ்பவள். 324

மலையரசனுன இமயக் கொடுமுடியிலுள்ள ஶிவனின் சென்னிமிசையுள்ள கங்கை; கம்பீரமான இசையுடன் செல்பவள்; தீர்த்த மூலமானவள்; பரிவு நிறைந்தவள்; கம்பீர நடை கொண்டவள்; ஜஹ்னு மகரிஷியின் புதல்வியானவள். 325

(இப்புதல்வியின்) த்யானத்திலுள்ளவள்; பருகும் நீரிலுள்ளவள்; பாடும் பாட்டிலுள்ளவள்; இத்துதிப்பாட்டுக்கள் கொண்டவள்; மெய்யறிவு விளக்கைத் தூண்டுபவள்; இத்துதி விளக்கு வரிசையில் ஒளிர்பவள். 326

அருணோதயத்தில் இளஞ்சிவப்புப் பொன் வண்ண ஒளியுடையவள்; பகலவன் கதிர்கள் ஒளிரும் எழிலுடையவள்; வெள்ளியும் பொன்னுமாக ஒளி வீசுபவள்; ஒளியின் நடனத்தில் பளிச்சென்று மின்னுபவள். 327

விடிவதற்கு முன் மயிர்க்கூச்சுண்டுபண்ணும் தண்ணிய நன்னீர் கொண்டவள்; மாலையில் விளக்குகள் வரிசையில் புன்னகை பூப்பவள்; மிகக் குளிர்ச்சியானவள்; வைரத்தின் ஒளி படைத்தவள்; பொன்னென விளக்கொளி மின்னும் நீர் படைத்தவள். 328

வானவில்லின் வண்ண எழில் கொண்ட முகில் வண்ணத்தவள்; இப்பாட்டுகளாம் விளக்குகள் வரிசையில் மங்கல எழிலொளிர்பவள்; பண்விளக்கொளியில் வண்ண ஒளி கொண்டவள்; அறிவு விளக்கைச் சுடர்விட்டொளிரச் செய்யும் ஒளியானவள். 329

பாடப்பட்ட அன்னை / இப்பாட்டின் அன்னை; நதி உருவிலுள்ள அன்னை / நதிகட்கெல்லாம் அன்னை; உலகங்கட்கெல்லாம் அன்னை; அழகிய வடிவம் கொண்டவள்; மங்கள அன்னை; மிக்க அன்புடைய, நல்லறிவளிக்கும் அன்னை; வணங்கப்பட்ட அன்னை கங்கை. 330

பூர்ண ஸூர்யக்ரஹணத்தின்போது புனித நீராடப்பட்டவள்; நூருண்டுகட்கொருமுறையே நிகழும் இவ்வரிய நிகழ்வில் [10] மும்முறை புனித நீராடப்பட்ட தூயவள். 331

மறக்க இயலாப் பெரும் நீராடல் கொண்டவள்; எல்லாப் பாபங்களினின்றும் விடுவிப்பவள்; பல பிறவிகளில் செய்யப்பட்ட பாப வெள்ளத்தினின்று முழுதும் விடுவிப்பவள். 332

[10] 1995 ஐப்பசி மாதம் நிகழ்ந்த பூர்ண ஸூர்யக்ரஹணம்

எதிர்காலத்திலும் மேலெழுப்பி விடுபவள்; அசையா நம்பிக்கைக்குக் கொள்கலமானவள் / அசையா நம்பிக்கை கொண்ட இப்புதல்விக்குப் புகலிடமானவள்; இத்தனி பக்தையின் ஒரே அடைக்கலமானவள்; என் அன்னே; என்னேக் கரையேற்றுபவள். 333

அறிவின்மையாகிய இருளேப் போக்குபவள்; தூய நல்லறிவை ஒளிரச் செய்யும் தெய்வீக விளக்கானவள்; மெய்யறிவு வழியில் நன்கழைத்துச் செல்பவள்; மறுபிறவியைத் தடுப்பவள். 334

உலக வாழ்வுச் சேற்றின் அருகிலேயே இருப்பவள்; இவ்வுலகிற்கப்பாற்பட்ட தனித்த இன்பம் தருபவள்; பிறவித்துன்பத்தை அடித்துச் செல்பவள்; இவ்வுலக வாழ்வின் பேரிரைச்சலின் துன்பத்தைத் தணிப்பவள். 335

தபோதனருள் இருப்பவள்; தவ ஒளியினுள் உள்ளவள்; இவ்வுள்ளத்துள் /இவ்வெண்ணங்களுள் நன்கிருப்பவள்; மெய்ப்பொருள் வேண்டச் செய்பவள், மங்களம் அடையச் செய்பவள் / மெய்ப்பொருள் வேண்டுவோர் மங்களம் அடையச் செய்பவள்; ஸத்துவத்திற்கும் அப்பாற்பட்ட பேரமைதியை அளிப்பவள். 336

என்றும் புத்திளமையுடன் விளங்குபவள்; நோயற்றதன்மையும் இளமையும் நல்குபவள்; மூளேச்சூட்டைத் தணிப்பவள்; உருக்கிய பொன்னே நிகர்த்தவள்; மிக்க மேம்பட்டவள். 337

தன்னில் தினசரி நீராடலே விரும்பும் இவ்வுள்ளத்தில் ஓடுபவள் / தினசரி நீராடும் இப்புதல்வியின் உள்ளத்தை அடித்துச்செல்பவள்; இப்புதல்வியின் தினசரி அனுபவத்தால் துதிக்கப்பட்டவள்; தினசரி உள்ளாழ்ந்து பாடப்பட்டவள்; நிலேத்த பேரின்பப் பெருக்கானவள். 338

மிக்க வளமுடைய கங்கை; வைரமென மின்னுபவள்; ஏராள- மான நீர்கொண்டவள்; என்றுமிருப்பவள்; எப்பொழுதும் சென்று கொண்டே இருப்பவள்; மிகப்பெரிய புண்ணியச் செலவானவள்; மங்களப் போக்கானவள்; நிலேத்திருப்பவள். 339

புலரிப் பொழுதில் இன்பந்தரும் மங்கள நீராடப்பட்டவள்; பகலில் இத்துதிகள் செய்யப்பட்டவள்; புலரி அமைதியில் உள்ளாழ்ந்து த்யானிக்கப்பட்டவள்; மாலே நீராடற்குப்பிறகு துதித்துப் பாடப்பட்டவள். 340

புலரியில் மிகப் பொலிவுடன் திகழ்பவள்; பகலில் ஆதவன் ஒளியில் பளபளப்பவள்; பொழுது புலர்கையில் 'ஓம்'கார நாதமிசைப்பவள்; பொழுது சாய்கையில் வண்ண எழிலால் உள்ளம் ஒன்றச் செய்பவள். 341

புலரியில் குயில்களின் இன்னிசை கொண்டவள் / குயிலிசையென இனிது பாடப்பட்டவள்; பாட்டின்பம் அருள்பவள்; புலரிப்பொழுதில் ஆழ்நீல நிற நீரில் ஒளிக்கதிர்களின் எழில் மின்னுபவள்; மாலேயில் தங்க ஒளியில் எழில் சேர்ப்பவள். 342

புலரியில் அமைதிமயமான கங்கை; மாலேயில் வண்ணங்கள் ஒளிரும் எழிலுடையவள்; அழகின் தேவதையான கங்கை; கண்ணுக்கு விருந்தான எழில் ஒளிர்பவள். 343

மாறிமாறி ஒளியும் நிழலுமாய்ப் பளபளப்பவள்; நாளின் ஐந்தாம் பொழுதான மாலேயில் அழகுடன் ஒளிர்பவள்; இன்னொலிக் குயில் கூவும் சூழல் உடையவள்; பறவைக்கூட்டங்களின் இன்னொலிகள் நிறைந்தவள். 344

மாலே ஒளிக்கதிர்களில் மிக்க வனப்புடன் திகழ்பவள்; மாலே அமைதியில் இன்னொலிகள் நிரம்பப் பெற்றவள்; அறிவு வானின் எல்லேயற்ற நீலநிறம் நிறைந்தவள்; நீல வானும் முகில் வெண்மையும் ஒளிரும் நீர் நிரம்பியவள். 345

நூற்றெட்டுமுறை முழுகி நீராடப்பட்டவள்; நூற்றுக்கணக்கான முறை ஜபிக்கப்பட்ட திருநாமங்களில் ஒளிர்பவள்; திருநாமங்களேப் பாடித்துதிக்கப்பட்டவள்; திருநாமங்களேப் பாடும் லயத்திலிருப்பவள். 346

இன்னொலி நாத எழில் நடமிடுபவள்; நாதத்துள் அமைதியால் இதம் தருபவள்; நாதத்தை நாடும் இவ்வுள்ளத்தில் ஒலிக்கும் நாதமானவள்; நாதத்துடன் இரண்டறக் கலந்திடச் செய்பவள். 347

இறைவன் திருநாமங்களின் சிறப்பை இனிதொலிப்பவள் / இறைவன் திருநாமச்சிறப்பினே இசைக்கும் இசையிலுள்ளவள்; நாத இன்பத்தை இனிதொலிப்பவள்; துதிகளில் திருநாமங்களின் மொத்தத்தில் இருப்பவள்; திருநாம மலர்களின் தேனுய் ஓடுபவள். 348

மிருதங்கத்தின் மிருதுவான ஒலிதனேப் பாறைகளின் மீது ஒலிப்பவள்; ஏழு இன்னிசை ஒலிகளாம் பறவைகள் பறக்கும் வானினில் ஆகாஶ கங்கை ஆனவள். 349

கண்ணுடி போன்ற மேற்பரப்புடன் காணப் படுபவள்; இக்கண்ணுடியினில் இறைவனைக் காட்டுபவள்; அமைதியில் ஆழ்ந்து இனிதொலிப்பவள் / ஓசையற்றும் செல்பவள், ஆழ்ந்தொலித்தும் செல்பவள்; மாலை அமைதியில் இனிமை கூட்டுபவள். 350

மாலையில் தங்கமயமான கங்கை; ஆதவன் கதிர்கள் பட்டுப் பளபளக்கும் நீருடையவள்; மாலையில் நீராடித் துதித்துப் பாடப்பட்டவள்; மாலையில் விளக்கேற்றிப் பூஜிக்கப்பட்டவள். 351

பலவண்ணங்களில் மின்னும் நீருடையவள்; மாலையில் பல வண்ண எழிலுடன் மிளிர்பவள்; சுருண்டு நடமிடும் அலைகள் கொண்டவள்; வண்ண எழிலுடன் பொன்னுய் மின்னுபவள். 352

நீலமும் பொன்னுமாய் ஒளிரும் எழிலுடையவள்; மின்னல் கொடிபோல் மிளிர்பவள்; மாலை எழிலில் களிப்பூட்டுபவள்; மாலையில் உளங்கவர் தோற்றம் கொண்டவள். 353

நினைக்கப்பட்ட, காணப்பட்ட கங்கை; நீராடப்பட்டவள்; நீர் பருகப் பட்டவள்; நன்கு பாடப்பட்டவள்; எப்போதும் த்யானிக்கப்பட்டவள்; என் இன்பமானவள்; மனமாகிய மலையுச்சியிலுள்ளவள்; இன்பம் செய்பவள். 354

இத்துன்புற்ற ஆத்மாவுக்கு அடைக்கலமான கங்கை; தவத்திலீடுபட்ட உள்ளத்திற்கு உயிரூட்டுபவள்; தனது நன்னீரினுல் களிப்பூட்டுபவள், இன்பத்துடன் கூடியவள்; தனது நன்னீரிலுதித்த இவ்வருட்கிளர்ச்சிக்குக் காரணமானவள். 355

உலகப்பற்றெனும் கிணற்றிலிருந்து வெகுதூரத்திலுள்ள ஆத்ம இன்பத்தை அருள்பவள்; துன்பப்பாறைகட்கப்பால் இருப்பவள் / துன்பங்களெனும் பாறைகளைத்தாண்டி அடையப்பட்டவள்; ஆத்மாவுடன் எல்லையற்று ஒன்றிடல் செய்து காப்பவள். 356

இவ்வுலகவாழ்வின் பேரிரைச்சலுக்கு நடுவே ஞானக்குயிலின் இன்னெலி கூட்டுபவள்; ஸாரமற்ற இவ்வுலக நடவடிக்கைகட்கு மாற்றுன, ஸாரத்துட்ஸாரமான நன்னீர் கொண்டவள். 357

உயிராற்றல் ஒளிரும் நன்னீர் கொண்டவள்; பகலவன் ஒளிரும் நீர் கொண்டவள்; வாழ்வுத்துடிப்புநிறை கரைகொண்டவள்; உள்ளருட்கிளர்ச்சியைத் தூண்டும் நன்னீர் கொண்டவள். 358

வாழ்வுக்கடிப்படையான நன்னீர்ப் பொழிவானவள்; காப்பவள்; வணங்கியவர் வாழ்வை உய்விப்பவள்; வாழ்வின் அடிப்படை நாடியானவள்; உயிராற்றல் பொழியும் நன்னீரானவள். 359

(தன்)நன்னீராடி உள்ளாழ்ந்து த்யானத்திஞல் உண்டாகும் அமைதிக்கு ஆதாரமானவள்; (தன்)நன்னீர் பருகலில் திருநாமத்திஞலுண்டாகும் அமைதியை அருள்பவள்; த்யானித்தலால் ஞானப்பலனருள்பவள்; தன்னைப் பாடுதலே மேலாகக் கொண்டவருக்கு நற்பலனருள்பவள். 360

விடியற்காலைக்கு முன் மிகத்தெளிந்த நீர் கொண்டவள்; எப்பொழுதும் தூய வெண்மையானவள்; இமயத்தின் அமுதப்பெருக்கானவள்; இரவில் பனியென/நிலவென ஒளிர்பவள். 361

மழைக்காலத்தில் மண்ணிற நீர்வெள்ளமானவள்; கரைபுரண்டோடுபவள்; மழை பொழியும்போது வெண்மைப்படலம் சூழப்பட்டவள்; கணக்கற்ற ஸ்படிகப் பனிக்கற்கள் பொழியப்பட்டவள். 362

அடர் மழையில் அதிவேகம் கொண்டவள்; மிகுந்த அழகுடன் அச்சுறுத்துபவள்; மிக வேகத்துடன் அடிக்கும் காற்றில் சுற்றிச் சுழல்பவள்; உடல் முழுதும் கீழே படும்படி விழுந்து வணங்கப்பட்ட கங்கை. 363

பலவகை எழிலுடன் பொலிபவள்; மேலெழும்பிப்பறக்கும் நீர்த்துளிகளைச் ‘சில்’லென்று வீசுபவள்; வெண்மைக் கொத்தாம் நீர்ப் பொழிவானவள்; காற்றின் வேகத்தில் அழகுக்கூத்தாடும் நீர் கொண்டவள். 364

காற்றின் வேகம் கொண்டவள்; மஞேவேகம் கொண்டவள் / இவ்வெண்ணங்களின் வேகத்திற்குக் காரணுமானவள்; இக்கவிவேகத்தில் பெருக்கெடுத்து ஓடுபவள்; இவ்வெண்ணங்களின் வேகத்திலிருக்கும் கங்கை; இவ்வுள்ளத்தின் ஏக்கத்திஞல் பூஜிக்கப்பட்டவள். 365

ஒவ்வொருநாளும் புதுவித எழிலுடை நீரோட்டம் கொண்டவள்; என்றும் இளமையான, தண்ணியவள்; அன்றுடம் புதுப்புது சொல்லாடையிஞல் அணிசெய்யப்படுபவள்; என்றும் புதிய இவ்வாக்கு மயமானவள். 366

என்றுமிருப்பவள், மகிழ்வானவள் / என்றும் அழகுடையவள்; மிகவும் மங்களமானவள்; நலமருள்பவள்; இம்மங்களவாக்கே ஆனவள்; கவி இன்பமானவள், மிக அழகிய பொன்னிறம் படைத்தவள் / காவ்ய இன்பந்தரும் இவ்வழகிய எழுத்துக்களாக உள்ளவள்; கவிஶ்ரேஷ்டரால் புகழ்ந்து பாடப்பட்டவள். 367

புகழ்ந்து பாடப்படவேண்டியவள்; இச்சொற்களின் எழுத்துக்களானவள் / இந்நல்வாக்கின் நிறமானவள்; இச்சொற்களின் எழுத்துக்களை நிறைவாக்கும் ஒலியானவள்; தன்புகழ்பாடும் இச்சொல்மழையின் வண்ணமானவள்; இச்சொல்மழையில் மிகவும் மகிழ்பவள். 368

வர்ணனைக்கப்பாற்பட்ட வண்ண எழில் கொண்டவள்; இவ்வண்ணச் சொல்மழைக்கு வண்ணம் தீட்டுபவள்; இவ்வெழுத்துக்களின் வடிவான வண்ணநீர் கொண்டவள்; இவ்வெழுத்துக்கள், சொற்களின் நடனத்தில் மின்னி ஒளிர்பவள். 369

பல வண்ணங்களில் ஒளிரும் எழில் படைத்தவள்; பலவகை எழில் வண்ண அலைகள் கொண்டவள்; பல வண்ணப் பருவங்களை நடமிடும் அரங்கமாகக்கொண்டவள்; பலவகைக்கூத்தாடும் வண்ணங்களில் எழிலுறுபவள். 370

இளவேனில், வேனில், மழை, இலையுதிர், குளிர், பனிக்காலங்களின் சுழற்சியில் பலவண்ண எழில்நிறை அலைகள் கொண்டவள். 371

கோடையில் பனி உருகி வரும் நீர்வீழ்ச்சியானவள்; மழைப்பொழிவில் மலையிலுள்ள செம்மண்ணை அடித்துவரும் பெரும் வெள்ளமானவள்; குளிர்நாட்களில் தெள்ளத்தெளிந்த நீருடையவள்; இலையுதிர்காலத்தில் நிலவொளியில் பளபளப்பவள். 372

இளவேனிலில் இன்பமாகக் கூவும் குயில்களின் இன்னொலிகள் நிறைந்தவள்; வண்ணங்கள் எழிற்கூத்திடும் கங்கை; நிலவும், தாராகணங்களும் ஒளிரும் எழில் கொண்டவள். 373

கோடையில் வெண்ணிறத்தில் பளபளத்துப் பெருக்கெடுத்தோடுபவள்; மழையில் மண்ணிறமானவள்; குளிர்காலத்தில் தெளிர் நீல எழிலொளிர்பவள்; வெள்ளியும் தங்கமுமாக ஓடுபவள். 374

பொழுதுபுலர்கையில் சாம்பல் நிறத்தில் வெள்ளியாய் ஒளிர்பவள்; பகலவன் கதிர்களில் மஞ்சளும் இளஞ்சிவப்புமாய்ப் பொன்னாய் மிளிர்பவள்; மாலை மங்கலில் இளநீல வண்ணமுடையவள்; நீலமுகிலை நிகர்த்தவள். 375

இளநீல வண்ணத்தவள்; அடர் பச்சை நிறத்தவள்; அடர்நீல வண்ண எழிலுடன் திகழ்பவள்; தங்கப்புள்ளிகளுடன் எழில் வண்ணங்கள் ஒளிர்பவள்; மாலை அமைதியில் சுடரொளி பரப்புபவள். 376

மாலை நீல அமைதியுடையவள்; தூய நீல வண்ணத்தவள்; முகில் வண்ணத்தவள்; தங்கப் பட்டாடையில் பளபளப்பவள்; வெண்மையானவள்; அடர்நீல வண்ணத்தவள்; பொன்னெழில் ஒளிபடைத்தவள். 377

பல வண்ண அலைகள் கொண்டவள்; நடமிடும் அலைகள் கொண்ட கங்கை; நீரோட்ட நடுவில் பாறையிலமர்ந்த (இப்)பறவையின் இசையால் துதிக்கப்பட்டவள். 378

சந்த்ரோதயத்தில் மிக்க எழிலுடன் திகழ்பவள்; பொன்னென மின்னும், மங்களமானவள்; பாற்கடலென வெள்ளி ஒளி மின்னுபவள்; விண்மீன்கள் சிந்தும் சிரிப்பொளிர்பவள். 379

அழகிய (பொன்)நிறத்தவள்; இவ்வெழுத்துக்களிலும் சொற்களிலும் நடம்புரிபவள்; இப்பொன்னெழுத்துக்களில் மிளிர்பவள்; இன்பூட்டுபவள்; அடர்நிறத்தவள்; அழகிய சாம்பல் வர்ணத்தவள்; முகில்களின் ஆழொலி படைத்தவள். 380

தன் வண்ண எழிலால் பூரித்துக் கிளர்ந்து மலர்ந்த இப்பாட்டின் வண்ணமானவள்; கவிவர்ணனையிலுள்ள எழுத்துக்களின் எழிலானவள் / இக்கவியால் வர்ணிக்கப்பட்ட வண்ண ஒளியுடையவள் / கவிவர்ணனையைத் தூண்டும் வண்ண எழிலுடையவள்; தன் வண்ணத்தை வர்ணிக்கும் இவ்வெழுத்துக்களே தானானவள்; வண்ணங்கள் ஒளிர்ந்தும் வண்ணமின்றியும் மிளிரும் பொன்னீருள்ளவள். 381

உளம் கவர்பவள்; வைரம்போல் மிக்க ஒளியுடையவள்; இனிது இசைப்பவள் / இவ்வினிய பாட்டினில் இருப்பவள்; எழில்நடை செல்பவள்; வியன்தகு இனிமையான நன்னீர் கொண்டவள்; புன்னகை மலரும் அலைகள் நிறைந்தவள். 382

இவ்வெழுத்துக்களால் பூஜிக்கப்பட்ட அன்னை; இவ்வெழுத்துக்களே ஆனவள்; கடன்பட்ட தன்மை இன்றிச் செய்பவள்; மிகச்சிறந்தவள்; தனக்கு மேம்பட்டதொன்றுமில்லாதவள்; வண்ண ஜாலத்தினால் இவ்விதயத்தைக் கொள்ளை கொள்பவள் / இந்நல்லிதயத்தினின்று பொழிந்த இச்சொற்கோவைகளை உடையவள்; இவ்வெழுத்துக்களில் பொன்னொளியினைச் செய்பவள். 383

வெள்ளிமயமானவள்; வெண்முத்தொளி படைத்தவள்; தூய வெண்முகில்கள் ஒளிர் எழில் படைத்தவள்; மஞ்சள், இளஞ்சிவப்பு

வண்ணங்களில் மிளிர்பவள்; பொன்னொளிபடைத்த மின்னல் கொடியானவள். 384

ஆழ்பச்சை, நீலத்தில் பொலிபவள்; தெள்ளத்தெளிந்த படிகம்போன்ற நீரினல் உளம் கவர்பவள்; பசுமை, இளஞ்சிவப்பு அழகுடையவள்; உருக்கிய பொன் போன்றவள்; இன்பம் தருபவள்; விரைவுகொண்ட நீரோட்டமானவள். 385

வானவில்லின் வண்ண எழிலுடைய நீரோட்டம் கொண்டவள்; சந்திரபிம்பம் ஒளிரும் எழிலுடையவள்; வணங்கியவரை ஶாபத்தினின்று விடுவிப்பவள்; இவ்வணங்கும் நெஞ்சமாம் (இவ்வெண்ணங்களாம்) அல்லியை மலர்விக்கும் நிலவானவள். 386

வெண்ணிறமானவள்; வெள்ளிப் பனிமலேயின் இன்பமானவள்; வெண்முகில்களாம் முத்துக்களால் அணி செய்யப்பட்டவள்; வெள்ளிமயமான ஆடை அணிந்தவள்; பனிப் படலமான வெண்ணிறச்சூழல் கொண்டவள்; தூய ஸத்துவத்தின் வெண்மை ஒளி கொண்டவள். 387

தங்கநிறத்தில் பளபளக்கும் நீருடையவள்; வெள்ளியாகவும் தூய தங்கமாகவும் எழிலுறுபவள்; ஆழ்நீல நிறத்தவள்; பசுமை நிற ப்ரதிபலிப்புக் கொண்டவள்; கண்ணுடிபோல் தெளிந்த அமுத நீர் கொண்டவள். 388

உலகவாழ்வுத் துன்பங்களே அடித்துச்செல்பவள்; உருக்கிய தங்கம் போன்றவள்; பேரொலி எழுப்பிச் செல்பவள்; மிகச்சிறந்த வண்ண வடிவழகுடையவள்; வண்ணப்பெருக்காக/இச்சொற்பெருக்காக ஓடுபவள். 389

இரவரசனுகிய சந்திரன் ஒளிரும் நீருடையவள்; புலரியில் தூய்மையின் காட்சியானவள்; தூயகாட்சி தந்து ஒளி வீசுபவள்; பற்றற்று வழிபடும் இந்த பக்தையை விடுவிப்பவள். 390

பட்டாடை உடுத்த தேவி; பட்டுப்போல் (இப்புதல்வியைத்) தொட்டுக் கொஞ்சுபவள்; பட்டொளியும் பட்டின் மென்மை வழ-வழப்பும் பொருந்தியவள்; பட்டின் வண்ணங்கள் பளபளப்பவள் / இப்பட்டெழுத்துக்களில் பளபளப்பவள். 391

வெண்ணிற ஒளியுடை அன்னே; ரஜோகுணத்தைப் போக்குபவள்; சூழும் தமோகுணத் திரையைக் கிழித்தெறிபவள்; ரஜஸ்,

தமோகுணங்களினாலாகும் பாபங்களை அடித்துச் செல்பவள்; வெள்ளி மலையில் ஒளிரும் எழிலுடையவள். 392

தூய ஸத்துவ ஒளியானவள்; ஸத்துவ இன்பம் ஒளிரும் நீருடையவள்; பொன்னும் பட்டுமாய் ஒளி வீசுபவள் (பொன்னின் பளபளப்பும் பட்டின் மென்னொளியும்); தங்கப் பனிமலையைச் சேர்ந்தவள்; பனித்தன்மையுடைய நன்னீர் கொண்டவள். 393

கருநீல மேகத்தின் அடர் எழில் ஒளிர்பவள் / நீல மேகத்தின் உருநிழற்படிவில் அடர் எழிலொளிர்பவள்; வெண்ணிறமானவள்; பசுமை நிற எழில் படைத்தவள்; பசுமையும் மஞ்சள், செவ்வண்ணங்கள் கலந்தும் எழில் கூட்டுபவள்; இளஞ்சிவப்பு, பொன்னிறம் கலந்து ஒளிர்பவள், என்றும் இளமை கொண்டவள். 394

மரகதத்தின் ஒளி எழில் பொருந்தியவள்; நீலவானிற்குக் கண்ணாடியானவள்; வானின் வண்ணம் கொண்ட நன்னீருடையவள்; நீலவண்ணமான, பசுமையான, இனியவள் / நீல வண்ண ஹரிக்குகந்தவள். 395

வண்ண வேறுபாடுகளால் எழிலூட்டுபவள்; விடிவதற்கு முன் மென்மையான வண்ணத்தில் ஒளிர்பவள்; ஆதவன் வருகையில் ஒளியும் நிழலும் விளையாடுபவள்; நாளின் இறுதியில் பலவண்ணக்கோலம் கொண்டவள். 396

பகலில் வைரமாய் ஒளிர்பவள்; இரவில் நிலவொளி எழில் சேர்ந்தவள்; நிகரற்ற பேரொளி எழில் படைத்தவள்; இக்கவி உள்ளமே உறைவிடமானவள் / இக்கவி எண்ணங்கட்கு நறுமணமூட்டுபவள். 397

பகலவன் சுட்டெரிக்கும்போது குளிர்ச்சியாய் உள்ளவள்/குளிர்விப்பவள்; துன்புற்ற உள்ளத்தைத் தண்மை செய்பவள்; இத்தவமிருப்பவளால் அர்ச்சிக்கப்பட்ட சொல்லின் இறைவி; தவத்தின் உட்கிளர்சியான இப்பாக்களை நிவேதனமாக கொண்டவள். 398

கங்கை; வானுலக நதியான தேவி; எப்போதும் நினைக்கப்பட்ட, சிறந்த அழகிய தோற்றம் கொண்டவள்; பல வண்ண எழில் கொண்டவள்; மங்கலப் பெயருடையவள்; கடைத்தேற்றும் நாமத்தினால் தூய்மைப் படுத்துபவள் / ஶ்ரீராமதாரகநாமமாகவே தூய்மைப் படுத்துபவள். 399

மெய்யறிவு வடிவானவள்; இன்ப உருவினள்; தூய நீருடையவள்; தூய்மை உருவானவள்; இவ்விதயத்துள்ளிருப்பவள்; என்னைக் காப்பவள்; ஏத்தித் துதிக்கப்படவேண்டியவள்; நற்குணவெள்ளமாய் ஓடுபவள். 400

உருக்கிய தங்கமாம் நீர் கொண்டவள்; பொன் நீரினால் போற்றிக் காப்பவள்; கட்டுப்பாட்டுடன் தவவாழ்க்கை நடத்துபவரை நன்கு காக்கும் கங்கை; மெய்யறிவு ஒளியைத் தூண்டுபவள். 401

மேல்பரப்பு கண்ணாடியாய் ஒளிவீசுபவள்; இளஞ்சூரியக் கதிர்களில் எழிலொளிர்பவள்; கலகலவென இன்னொலி படைத்தவள்; இன்பண்ணொலியின் ஒளியானவள்; இன்பண்ணொலியால் அர்ச்சிக்கப்பட்டவள்; நல்மூச்சளிப்பவள். 402

அலைமாலைகொண்ட நீரழகுடையவள்; எண்ண அலைகளற்ற உள்ள அமைதி அளிப்பவள்; அலைகள் கூத்தாடும் வண்ண ஒளியுடையவள்; அரங்கத்தில் பள்ளிகொண்டோனின் மங்கல எழிலை இசைப்பவள் [11]. 403

மங்கலப்பண்/மங்கல எழில் நடமாடும் நீருடையவள்; நற்பண்புகள் புன்னகைக்கும் நீருடையவள்; தன் நன்னீரிலுதித்த இக்களிமொழிப் பொழிவே ஆனவள்; தன் நன்னீரிலுதித்த மகிழ்வைத் தானே பாடிக்கொண்டவள். 404

களைப்பைப் போக்கும் ஆழ்ந்த இசை பாடுபவள்; அலுத்த உள்ளத்தை அமைதியுறச் செய்பவள்; தன்னை அடைந்த இவ்வுள்ளத்தின் ஒரே மகிழ்வானவள்; (எப்பொழுதும்) கேட்கப்பட்ட 'ஓம்'காரத்தை இனிதொலிப்பவள். 405

வாழ்விற்குயிரூட்டுபவள்; வாழ்வு முழுதும் நாடிச்செல்லவேண்டியவள்; உயிர்கட்கு உயிரூட்டும் உயிராற்றல் நிறைந்தவள்; வாழ்வின் இன்ப உயிர் மூச்சானவள்; தன் நன்னீரில் அமிழ்பவர்க்கு இன்பூட்டுபவள். 406

தனது நன்னீரில் பெரும்பற்றுள்ள இவ்வுயிருக்கு உயிரானவள்/உயிராற்றலளிப்பவள்; உயிருள்ளவரை மதித்துப் போற்றப்படவேண்டிய அன்னை; உயிருள்ளவரை உயிராற்றல் நிறை தனது நன்னீரில் நீராடும் ஏக்கத்தை நிறைவேற்றும், மங்கல நீர் கொண்டவள். 407

அழகிய/ இன்பம் நல்கும் நீர் கொண்டவள்; அழகின் மறுபெயரானவள்; அழகிய புன்சிரிப்புடன் பளிச்சிடுபவள்; பலவகை எழிலுடையவள்; அழகிய இமய மலையின் நல்வழிமரபானவள். 408

இவ்வாயிரக்கணக்கான அர்ச்சனைத் திருநாமங்களின் ஒளியானவள்; அமுதினிய திருநாமமும் அமுதேயான நீரும் கொண்டவள் /

[11] அரங்கத்தில் பள்ளிகொண்டோனின் அழகிய வடிவை எழிலுறு அலைகள் வண்ணம் தீட்டும் காட்சி

இறைவன் திருநாமத்தின் ஸாரமான அமுதினிய நீர்கொண்டவள்; இவ்வாயிரக்கணக்கான ஶ்லோகங்களில் வாக்காகப் பொழிபவள்; இவ்வாயிரக்கணக்கான சொற்களாக இருப்பவள் / சொற்களைத் தூண்டியவள். 409

சூரிய ஒளியால் பளபளக்கும் கங்கை; ஆயிரமாயிரம் கதிர்கள் அழகுடன் ஒளிரப்பெற்றவள்; ஆயிரக்கணக்கான குற்றங்களை அழிப்பவள்; இவ்வாயிரக்கணக்கான ஶ்லோகங்களில் ஒளிர்பவள். 410

ஆயிரக்கணக்கான ஹரிநாம ஒளி படைத்தவள் (ஹரிநாமத்துடன் நீராடல்); ஹரிபக்தியெனும் நல்வழி நடத்துபவள்; ஹரியின் திருவடித்தீர்த்தமான கங்கை; ஹரித்வாரத்தில் விளங்குபவள். 411

ஹரித்வாரத்தில் மிக்க களிப்புடன் கொண்டாடப்படுபவள்; ஹரியின் திருநாமங்களுடன் மங்கலமாய் இலங்குபவள்; ஹரிபக்தியை உண்டுபண்ணும் கங்கை; ஹரியுடன் ஒன்றிடச் செய்பவள்; காத்திடுபவள். 412

ஹரிநாமத்துடன் நீராடப்பட்டவள்; மஞ்சள், குங்குமத்தால் அர்ச்சிக்கப்பட்டவள்; ஹரியின் கருணை வெள்ளமாம் வேகப்பெருக்கானவள்; ஹரிபூஜையுடன் பூஜிக்கப்பட்டவள். 413

ஹரிநாம மலர்களில் மகிழ்வடைபவள்; ஹரி, மாதவ என்று திருநாமங்களை இசைப்பவள்/திருநாமங்களுடன் இசைந்து செல்பவள்; ஹரி, கேஶவ, கோவிந்த என்று திருநாமங்களை இசைத்தலில் இசைந்தோடுபவள்/இசைக்கச்செய்பவள். 414

கண்நிறையும் நிறை வெள்ளமானவள்; கண்ணுக்கின்பமான மங்கல வடிவினள்; உள்ளத்தை நிறைவு பெறச்செய்யும் முழுமை வெள்ளமானவள்; இவ்வுள்ளத்தில்/இவ்வெண்ணங்களில் நிலைத்துவிட்டவள். 415

புலரிப்பொழுதில் நன்னீராடிப் பாடப்பட்டவள்; மாலையில் விளக்குகள் ஏற்றி மலர்களால் பூஜிக்கப்பட்டவள்; விளக்கொளியில் பொன்னாய்ப் பளபளப்பவள்; பொழுது சாய்கையில் தீப ஆரதியுடன் கொண்டாடப்பட்டவள். 416

மாலை ஒளியில் ஆராதிக்கப்பட்ட கங்கை; மாலை விளக்குகளில் ஒளி மின்னும், மிகச் சிறந்தவள்; மாலையில் இன்பண்ணுடன்/நல்லன்புடன் பாடப்பட்டவள்; மாலைப்பண்ணின்/வண்ண எழிலின் அதிதேவதையானவள். 417

பக்தியுடன் ஏற்றப்படும் விளக்கொளியில் பொன்ஞய் மின்னுபவள்; மாலே வண்ணங்களில் மிக்க எழிலுடன் களிப்பூட்டுபவள்; ஹரித்வாரில் விஶால-மான அழகுடையவள்; விரைந்தோடுபவள், மிக்க இன்பமளிப்பவள் / மிக விரைவில் மிக்க இன்பமளிப்பவள். 418

அசைந்து செல்லும் விளக்குகள் வரிசையில் ஒளிவீசுபவள்; தினந்தோறும் தீபாவளியான இவ்விளக்குவரிசையில் பளிச்சிடுபவள்; நீரில் விளக்குவரிசைகளின் வண்ண எழில் கொண்டவள்; அன்பின்/பண்ணெனும் தீபாலயத்தில் துதிக்கப்பட்டவள். 419

விளக்கொளியில் எழிலுறும் கங்கை; ஞான வெளியில் வெளிச்சம் பரப்புபவள்; பல வண்ணங்கள் பளிச்சிடும் எழிலொளி கொண்டவள்; கண்டவுடன் களிப்புப் புல்லரிப்பூட்டுபவள். 420

ஹரிநாம மலர்கள் நிறை நீருடையவள்; நாமமலர்களால் நன்கு பூஜிக்கப் பட்டவள்; பாய்ந்து அமிழ்ந்து நீராடத்தக்க அமுத வெள்ளமானவள்; தமோகுண அழுக்கை அகற்றித் தூய்மைப்படுத்துபவள். 421

நிலவொளியில் களிப்புடன் குளிக்கப்பட்டவள்; மிகுந்த வேகத்தால் களிப்பூட்டுபவள்; மறக்கமுடியாக் கழிபேருவகையாம் இவ்வனுபவத்தை அளிப்பவள்; இரவில் நீராடலில் மிகவும் மகிழ்விப்பவள். 422

ஒளிரும் நிலவில் வெள்ளிவெள்ளமானவள்; வெண்ணிற ஒளியில் எழிலுற மின்னுபவள்; மன்னர்மன்னர்களால் பூஜிக்கப்பட்டவள்; நிலமகளின் மகளான ஸீதையால் பூஜிக்கப்பட்ட, நல்லொளி படைத்தவள். 423

ஹரியின் திருநாமங்களே ஸ்மரித்துக்கொண்டே நீராடப்பட்டவள்; ஹரியின் அருளால் மலர்ந்த இவ்வாக்காய்/இவ்வாக்கில் ஓடுபவள்; ஹரியைப் பாடுதலில் பெருக்கெடுத்து ஓடுபவள்; ஹரிதாஸர்களின் துதிகளில் ஒளிர்பவள். 424

ஹரியின் திருநாமங்களுடன் இன்னிசைக்குரலில் பாடப்பட்டவள்; ஹரிநாமத்தின் நல்லினிமை ஆனவள்; ஹரியைத் தன் இன்னிசையால் வென்ற ஸத்குரு ஶ்ரீத்யாகப்ரம்மத்திற்கு உகந்தவள்; ஶ்ரீத்யாகப்ரம்மத்தின் இனிய வாக்கில் ப்ரவஹிப்பவள். 425

நாத இன்ப அமுதப்பெருக்கானவள்; நாத அமைதியை நல்குபவள்; நாதத்திஞல் வெல்லப்படும் ஹரியை அடையும் வழியானவள்; நாதத்தின் விரிவாய்ப் பரந்தோடுபவள். 426

என்றுமுள்ளவள்; அளவற்ற புகழ்படைத்தவள்; நிலைத்த, எல்லையற்ற தனிப்பெருஞ்சிறப்புடையவள்; மகிழ்வளித்து முக்தியும் அளித்திடும் கங்கை; பக்தியைக் கொடுப்பவள்; பக்தியுடன் ஸேவிக்கப்பட்டவள். 427

பயணச்சூட்டில் களைப்புற்ற இப்புதல்வியை அழைப்பவள்; மேற்படிந்த புழுதிப்படலத்தைக் கழுவித் தூய்மை செய்பவள்; உடன் தொடரும் வினைப்பிணைப்பையும் கழுவி விடுபவள்; வீட்டுப்பேறடையும் வழி காட்டுபவள். 428

இவ்வுலகியல் மாசுகள் கழுவப்பட்டுத் தூய்மை பெற்றிடச் செய்பவள்; உள்ளச்சோர்வை நீக்கித் தூய்மை செய்பவள்; அன்னை கங்கை; என் அடைக்கலம்; தெள்ளத்தெளிந்த தூய்மையுடன் பெருகி ஓடுபவள். 429

இச்சொற்கோவைகளாம் மலர்மாலைகளில் நல்லெழில் சேர்ப்பவள் / மாலைகளின் நல்லெழிலானவள்; இச்சொல்மலர்களால் அர்ச்சிக்கப்பட்டவள்; வெள்ளிமயமானவள்; இச்சொற்களின் பொருளானவள்; இதுவரை மலராச் சொல்மலர்களாகவும் இருப்பவள்; இச்சொல்வெள்ளமானவள்; பூஜிக்கப்பட்டவள். 430

விடிவதற்குமுன் தீபாவளியன்று நன்னீராடப்பட்டவள் / (தினந்தோறும்) தீபவரிசைகளுடன் விடிவதற்கு முன் நீராடப்பட்டவள்; பொழுது சாயும் வேளையில் தீபவரிசைகளுடன் ஒளிர்பவள்; நாள்தோறும் நீராடலும் விழாக்களுமாகக் கொண்டாடப்படும் கங்கை; ஒவ்வொரு நாளும் மாலையில் அழகிய விளக்குகளின் ஒளியுடன் திகழ்பவள். 431

மகர ஸங்க்ராந்தியன்று விடிவதற்கு முன் நீராடிக் கொண்டாடப்பட்டவள்; சூர்ய, சந்த்ர க்ரஹணங்களின்போது நீராடப்பட்டவள்; எக்காலத்திலும் நீராடப்பட்டவள். 432

பன்னிரண்டு ஆண்டுகட்கு ஒருமுறை கும்பமேளாவெனும் திருவிழா கொண்டாடப்படுபவள்; ஆயிரக்கணக்கான துறவிகளால் அடையப்பட்ட புனிதத்தலமானவள். 433

யாத்திரை பொருளுள்ளதாகும் பொருட்டு பல்லாயிரக்கணக்கானவர்களால் நீராடப்பட்டவள்; இப்பெரும் விழாக்காணும் புனித நதியானவள்; பண்பாட்டின் உயிர்நாடியானவள்; வெகுவாகப் போற்றிப் பூஜிக்கப்பட்ட, வானுலக நதியானவள். 434

எப்போதும் மக்களால் நீராடப்படுபவள்; எப்போதும் நீர் நிறைந்திருப்பவள்; எப்போதும் மாறுதலற்றவள்; எப்போதும் எழிலுடன் ஒளிர்பவள். 435

பதற்றத்தைத் தடுக்கும் வேகம் கொண்டவள்; மனோவேகத்தைத் தடுத்து நிறுத்தும் நன்னீர் கொண்டவள் / மனோவேகத்தைத் தடுத்து நிறுத்தி மகிழ்வளிப்பவள்; உள்ள உலைவெனும் மாசினை அடித்துச்செல்பவள்; தொடுவதற்கு மிகவும் குளிர்ச்சியான கங்கை. 436

எண்ண அலைகளற்ற உள்ளத்தில் நடம்புரிபவள்; அலைகளின் அழகால் உளம் கவர்பவள்; புல்லரிப்புச் செய்திடும், புனிதமான கங்கை; அனைத்துலகிற்கும் இன்பம் பயப்பவள். 437

மிக்க வலிவுடையவள்; வலிவின்மையைப் போக்குபவள்; துன்பத்தை அழிப்பவள்; உள்ள வலிவை அளிப்பவள்; பொறுமையானவள்; நோயற்ற தன்மையை வளர்ப்பவள். 438

இவ்வுலக நாடகத்தைப் பார்த்துக்கொண்டு இருப்பவள்; இவ்வுலகிற்கப்பாற்பட்ட ஒன்றனுக்கு ஸாக்ஷியானவள்; இவ்வுலகிற்கப்பாற்பட்ட வியன்தகு இன்பமானவள்/இன்பம் நல்குபவள்; இவ்வுலகச் சேற்றினைக் கழுவித் தூய்மைப் படுத்துபவள். 439

குறையா அமுதநீர் கொண்டவள்; என்றும் புதிதான, நிலைத்திருக்கும்/நிலைத்த தன்மை அருளும் அமுத நீரானவள்; இப்புதல்வியால் உணர்ந்து அறியப்பட்ட மிக்க தூய்மை கொண்டவள்; இப்புவியில் ஓடும், என்றும் நிலைத்திருப்பவள். 440

என்றும் புதிய நன்னீரோட்டமானவள்; இப்புத்தம் புதிய கவிதைகளின் இன்னிசையானவள்/ கவிதைகளை இசைப்பவள்/ கவிதைகளின் நடையானவள்/ கவிதைகளூட் சென்றவள்; இந்நற்பாக்களைத் தன்னியல்பாகப் பொழியச்செய்பவள்; இக்கவிதை எண்ணங்களின் நேர்த்தியானவள். 441

வற்றாத கவிதை வெள்ளம் பெருக்கிடச் செய்பவள்; வறண்ட உள்ளத்தை மகிழ்விப்பவள்; இக்கவிதையின் நடனத்தில் நடம் புரிபவள்; நிறைவும் மகிழ்வும் அளித்துக் காத்திடுபவள். 442

நாள்தோறும் துதிசெய்து பாடப்பட்டவள்; நிலைத்த அன்புடன் துதிக்கப்பட்டவள்; என்றும் புதிய இக்கவிதைகளின் எழில் மங்கலமானவள்; என்றும் புத்தம்புதிய தன்மையுடையவள்; தடைகளை அழிப்பவள். 443

என்றும் ஆரவாரமுள்ள கங்கை; நிலைத்தன்மையின் வெளிப்படை வடிவானவள்; என்றும் காணும் பேறருள்பவள்; நிலைத்த தன்மை, நிலையாமையை அறியச்செய்பவள். 444

என்றுமிருப்பவள்; நோயற்ற தன்மை அருளும் இறைவி; மெய்யறிவின்பமான ஆத்மாவை உணர வழிகாட்டுபவள்; பொய்க்கிடையே ஒரே மெய்யானவள்; இவ்வுண்மை வாக்கினுல் துதிக்கப்பட்ட அன்னே. 445

ஸத்துவத்தை நாடும் இவ்வுள்ளத்தில் நிலேத்திருக்கும் கங்கை; மெய்யறிவின் உட்கிளர்ச்சியளிப்பவள்; மெய்த்துணேயானவள்; மலேச்சரிவுகளிலுள்ளவள்; பற்றுக்களே விட்ட இப்புதல்வியின் ஒரே பற்றுனவள். 446

மலேயில் பிறந்தவள்; மலே எழிலானவள்; மலேயினின்றிறங்கிய அழகி; அனேத்துலகிற்கும் கருணேப் பெருக்கானவள்; சமவெளியில் பாய்பவள். 447

மங்கல நன்னீர் கொண்ட கங்கை; மிகச்சிறந்த நதியானவள்; உலகை உய்விக்க அவதரித்தவள்; உலகிற்கு மகிழ்வளிப்பவள்; தூயவள்; பாபங்களே அடித்துச் செல்பவள். 448

இனிமையின் மறுபெயரான நன்னீர் வெள்ளமானவள்; இனிய நாத வெள்ளமாகப் பாய்பவள்; பேரின்பமருளும் அன்னே கங்கை; தன்னுல் ஏற்றுக்கொள்ளப்பட்ட இவ்வினிய பாக்களின் இன்னிசையானவள். 449

இம்மங்கல வாக்கின் மழையில் அபிஷேகிக்கப்பட்டவள்; நனேந்து நீராடிய இப்புதல்விக்கு இன்பூட்டும் இன்னமுதாம் நன்னீர் கொண்டவள்; இவ்வெண்ணங்களால்/இவ்வுள்ளத்தில் செய்யப்படும் பூஜையில் மகிழ்வுறுபவள்; இசையும் பக்தியும் கலந்த இவ்வாக்கில் நிலேத்திருப்பவள். 450

உள்ளத்தை நிறைக்கும் அமுத நீர் நிறைந்தவள்; எண்ண ஓட்டத்தில் ப்ரவஹிப்பவள்; எண்ண ஓட்டத்தை அடித்துச்செல்பவள்; எண்ணங்களின் தொல்லேயைத் தணிப்பவள். 451

இவ்வுள்ள முழைஞ்சில் ஒளிரும் விளக்கானவள்; அறிவாற்றலேத் தூண்டி ஒளிவிடச் செய்பவள்; மங்களமானவள்; எண்ணமாம் தீபத்தில் ஒளிரும் நீரானவள்; பேரின்பமானவள்; என்றும் இருப்பவள். 452

பொன்னெளிர்ப் பேரெழில் கொண்டவள்; துன்பத்தை விரட்டி அடிக்கும் குளிர்ந்த நீர் படைத்தவள்; தவமிருக்கும் இவ்வுள்ளத்தில் ஸஞ்சரிப்பவள்; தவ ஒளியை வளர்ப்பவள். 453

மீண்டும் மீண்டும் துதிக்கப்பட்டவள், நீராடப்பட்டவள்; இன்பந்தரும் நன்னீரோடுபவள்; இவ்வாக்கினிலே தனது நன்னீர் கொண்ட, இப்புதல்வியிடம் மிகுந்த அன்புகொண்ட, கங்கை; மெய்யின்பப் பிழிவொளிரும் நன்னீர் கொண்டவள். 454

சென்றுகொண்டே இருக்கும் கங்கை; மலையைச் சேர்ந்தவள்; என்றும் மாறாதிருப்பவள்; அலையும் உள்ளத்தை நிலைப்படுத்துபவள்; நீர் வடிவானவள்; நீரோட்டமானவள்; தனது நன்னீரினால் உண்டாகும் இன்பத்திற்குக் காரணமானவள். 455

யமுனையால் சந்திக்கப்பட்ட கங்கை; நிலத்துக்குக்கீழ் இணைந்த ஸரஸ்வதி; திரிவேணி ஸங்கமத்தின் சிறப்பானவள்; புனிதத் தீர்த்தங்களில் தலைசிறந்த ப்ரயாகையின் எழிலொளியானவள். 456

யமுனை ஆழ்நீல வண்ணத்தினள்; மண்ணிறம் கொண்ட கங்கை; சமவெளியில் நன்கு பரந்தோடுபவள்; ப்ரயாகைக்கு ஒப்பானது கடலே எனும்படி பரந்திருப்பவள். 457

இயற்கையாகவே நல்ல குளிர்ச்சியான கங்கை; அச்சுறுத்தும் அதிவேகம் கொண்டவள்; யமுனை வெதுவெதுப்பாகவும் அமைதியாகவும் உள்ளவள் – கங்கையே ஆகிவிட்ட, ஹரிக்குகந்தவள். 458

த்ரிவேணிக்கூடலில் கங்கை; மூவுலகங்கட்கும் இன்பமளிப்பவள்; ஸத்துவம், ரஜஸ், தமஸ் ஆகிய முக்குணங்கட்கும் அப்பாற்பட்ட மெய்யானவள்; முவ்வகைத் தாபங்களின் துன்பத்தைத் தணிப்பவள்[12]
. 459

காண்பதற்கின்பம் பயக்கும் தூயவள்; தெய்வீகக் காட்சியாம் இன்பம் நல்குபவள்; எங்குமுள்ள இறைவியானவள்; கண்டாலே முக்தியருளும் கங்கை. 460

தனது நன்னீர் பருகலும் புனித நீராடலும் மிகுந்த புண்யத்தைத் தரும் தூயவள்; இப்புனிதத்தலத்தில் மிகப்பலரால் நீராடப்பட்டவள்; கரையிலிருந்து வெகு தூரத்தில் ஸங்கமமுடையவள்; படகில் சென்று நீராடும்படியானவள். 461

ஆதவன் மறையும்போது வண்ணமயமாய் மின்னுபவள்; உருக்கிய தங்க நிறத்தினள்; இளஞ்சிவப்பு மஞ்சள் இன்னும் பல வண்ணங்களில் ஒளிரும் நீருடையவள். 462

[12] தன்வினை, சூழ்வினை, ஊழ்வினை

மாலையில் மிக்க அமைதியுடையவள்/அமைதி தருபவள்; எழிலுடன் நடமிடும் அலைகள் கொண்டவள்; மாலையில் நீராட அருள்செய்தோடுபவள்; மாலையில் உள்ளாழ்ந்து ஒன்றிடச்செய்பவள். 463

மிக்க நம்பிக்கையுடன் நீராடப்பட்டவள்; மிக்க அன்புடன் துதிக்கப்பட்டவள்; மிகவும் அன்புக்குரிய, வரமளிப்பவள்; மிகுந்த மங்களம் செய்பவள். 464

புத்தம்புதிய கவியருட்கிளர்ச்சி உண்டாக்குபவள், புத்தம்புது அழகுடன் மிளிர்பவள் / இப்புத்தம்புதிய, கவியருட்கிளர்ச்சியில் புத்தம்புது அழகுடன் மிளிர்பவள்; புத்தம்புதிய நன்னீருள்ளவள்; நவராத்ரியில் நன்கு பூஜிக்கப்பட்டவள். 465

வறண்ட உள்ளத்தை நிறைவு செய்பவள்; முழுநிறை நிலவென ஒளிர்பவள் / நிறைமதி உதயத்தில் ஒளிர்பவள்; வருத்தத்தை விரட்டி ஓடச்செய்யும் கங்கை; தெய்வநதியானவள்; வராஹமாய் அவதரித்த விஷ்ணுவால் புகழப்பட்டவள். 466

ஸங்க்ராந்தி, கும்பமேளா ஆகிய பெரும் திருவிழாக்களில் மிகவும் கொண்டாடப்படுபவள்; துறவிகளாலும், பெரும் ஜனக்கூட்டங்களாலும் நீராடல் ஆரவாரத்துடன் துதிக்கப்படுபவள். 467

பௌர்ணமி, அமாவாசை ஆகிய தினங்களில் முழுகி நீராடப்படுபவள்; ஸூர்ய சந்த்ர க்ரஹணங்களிலும் நன்னீராடப்படுபவள்; எப்போதும் பயணிகளால் கூட்டங்கூட்டமாக நீராடப்படுபவள்; விசேஷ தினங்களில் இன்னும் கொண்டாடப்படுபவள். 468

அழகிய போக்குடைய கங்கை; அலுப்பை அகற்றும் நீரோட்டமானவள்; எப்பொழுதும் உள்ளத்தைக் களிப்பூட்டும் வனப்புடையவள்; இப்பிறவித்துன்பத்தினின்று கரையேற்றும்படியான நன்னீருடன் இவ்வுலகில் செல்பவள். 469

ப்ரயாகையில் வெகு அகன்றவள்; நெடுந்தொலைவு பயணம் செய்பவள்; காஸீபுரியில் தொன்மையானவள்; பலரை உய்விக்கும் தூயவள். 470

புனித காஸியெனும் சிறந்த தலத்திலுள்ளவள்; தெற்கிலிருந்து வடக்காகப் பாய்பவள்; வருணா, அஸி இவ்விரண்டு நதிகட்கும் இடையே அழகுற விளங்குபவள்; மிகவும் சிறந்த இங்கு நீராடலால் உய்விப்பவள். 471

பத்து அஶ்வமேத யாகங்களின் மொத்தப் பலனை அளிப்பவள்; விஶ்வநாதருக்கு அபிஷேகமாகும் திவ்யநீர் கொண்டவள்; காஶிக்ஷேத்ரத்திலுள்ள, புகழ்படைத்தவள். 472

உலகங்கட்கெல்லாம் இறைவனுக்கு (விஶ்வேஶ்வரனுக்கு) உகந்த கங்கை; விஶ்வேஶ்வரனின் துதியை உகப்பவள்; இயற்கை வடிவானவள்; விஶாலாக்ஷி; உலகங்களை நன்கு காப்பவள். 473

அன்னபூரணி; உலகங்கட்கெல்லாம் அன்னை; கண்முன்னே இருக்கும், பழமையானவள்; காஶீபுரத்திலுள்ள, மிகப்புனிதமானவள்; உயிர்களை உய்விக்கும், முழுநிறைவானவள். 474

காஶியெனும் புனிதத் தலத்தின் மங்கலமும் இன்பமும் ஆனவள் / காஶியெனும் புனிதத் தலத்திலுள்ள, ஶிவனின் மகிழ்வானவள்; ஶிவ, ராம இத்திருநாமங்களை / மங்களமான ஶ்ரீராமநாமத்தை இசைப்பவள்/இசைக்கும் இசையில் இருப்பவள்; வீட்டுப்பேரும் பேரின்பமருள்பவள்; மிகவும் புனிதமான கங்கை. 475

ஶிவனின் மகிழ்வானவள் / மங்களமும் மகிழ்வுமருள்பவள்; மகிழ்வளிக்கும் மங்கல நீர் கொண்டவள்; ஶிவனில் மகிழும் உள்ளத்திலிருப்பவள்; உமாவின் மகிழ்வான ஶிவனின் சென்னியே விளையாட்டுத் தோட்டமாகக் கொண்டவள்; ரமாவின் மகிழ்வான விஷ்ணு மகிழும் நீர் வெள்ளம் கொண்டவள். 476

லக்ஷ்மீ நாயகனும் உமாபதியும் மகிழும் நீர் கொண்டவள்; அன்னை; மிகச் சிறந்தவள்; இவ்வெண்ணங்களால்/இவ்வுள்ளத்தில் அர்ச்சிக்கப்பட்டவள்; இத்துதிகளில் மகிழ்பவள்/ இத்துதிகளின் மகிழ்வானவள்; துதிக்கப்பட்ட, மகிழ்வுப் பூங்காவானவள்; ராமநாம மலர்களால் அர்ச்சிக்கப்பட்டவள். 477

ராமநாமமெனும் அமுத வெள்ளமானவள்; ஶ்ரீராமதாரகநாமத்தினால்[13] பிறவிப் பெருங்கடலைத் தாண்டச்செய்பவள்; ஶ்ரீராமநாமத்தில் நன்கு கலந்துள்ளவள்; ஶ்ரீமந்நாராயணனின் கருணை பெறச் செய்பவள். 478

கேதாரநாதனின் (ஶிவனின்) முன்னிலையில் இருப்பவள்; கௌரீகுண்டத்திலுள்ள மிகப் புனிதமானவள்[14]; ஶிவனுக்கு அபிஷேகமாகும் புனித நீர் கொண்டவள்; மூன்று வேளைகளிலும் நீராடுவோரை விடுவிப்பவள். 479

[13]காஶியில் கங்கைக்கரையில் உயிர்துறப்போருக்குப் பரமஶிவனே ஶ்ரீராமதாரகநாமத்தை செவியில் உபதேஶிப்பதாக நம்பிக்கை

[14]காஶியில் கேதாரேஶ்வரர் ஆலயத்துக்கு எதிரில் கங்கையில் கௌரீகுண்டமெனச் சொல்லப்படும் ஓரிடம்

மன்மதனின் பகைவஞன ஶிவனின் லிங்கரூபத்தை அபிஷேகிப்பவள்; மங்களமானவள்; இவ்வுள்ளத்திலுதித்த இப்பாக்களால் பூஜிக்கப்பட்ட அன்னே; இத்துதிகளால் செய்யப்படும் பூஜையில் மகிழ்வுறுபவள். 480

இவ்வெண்ணங்களாக ஓடுபவள்; மன்மதனேப் புதல்வஞகக்கொண்ட மஹாவிஷ்ணுவின் திருவடியின் புனித நீரானவள்; இவ்வெண்ணப்பூமாலேகள் கொண்டவள்; மகிழ்வான இவ்வெண்ணங்களால் (மணமிக்க இவ்வெண்ணமலர்களால்) அணிசெய்யப் பட்டவள். 481

இவ்வெண்ணங்களிலிருக்கும் அன்னே; எண்ணங்களின் துன்பத்தைத் தணிப்பவள்; இவ்வெண்ணவேகத்தின் வேகமானவள்; எண்ணங்களின் வேதனேக்கு மருந்தானவள். 482

உள்ளச்சோர்வினே அடித்துச் செல்பவள்; மேனியில் பட்ட மாத்திரத்தில் களேப்பை நீக்குபவள்; உள்ள அமைதியை உண்டாக்கும் நீரோட்டமானவள்; மனமெனும் புஷ்பத்தால் அர்ச்சித்துத் துதிக்கப்பட்டவள். 483

இவ்வுள்ளத்தின் துன்பத்தால் அர்ச்சிக்கப்பட்ட கங்கை; துன்புறும், தனிமைப்பட்ட இவ்வுள்ளத்திலிருப்பவள்; இவ்வுள்ளத்துட்சென்றவள்; கவலேயினின்று விடுவிப்பவள்; இவ்வுள்ளக் கவலேயாலேயே பூஜிக்கப் பட்டவள். 484

வெறுமையான உள்ளத்தை நிறைசெய்பவள்; பற்றற்ற இவ்வுள்ளத்தால் மிகவும் விரும்பப்பட்டவள்; நம்பிக்கை இழப்பை நீக்கிடும் கங்கை; கவலேயற்ற தன்மையளித்து நற்பலனளிப்பவள். 485

இறைவியானவள்; விண்ணவர்க்குகந்தவள்; தெய்வத்தன்மை அருள்பவள்; வேதவாக்யங்களின் மெய்ப்பிழிவானவள்; வேதத்திஞல் அறியப்படும் பரம்பொருளே விளக்குபவள். 486

எப்போதும் தூயவளான கங்கை; உள்ளத்தூய்மையில் ஒன்றியவள்; மூவுலகிற்கும் அப்பாற்பட்ட மங்கல எழிலுடையவள்; (ஸத்துவம், ரஜஸ், தமஸ் ஆகிய) முக்குணங்கட்கும் அப்பாற்பட்ட இன்பமளிப்பவள். 487

கலியின் குற்றங்களே அழிப்பவள்; கலியின் துன்பங்களேத் தணிப்பவள்; கலியில் புண்யத்தை அளிக்கும் கங்கை; கலியின் வருத்தங்களே வராது தடுத்திடுபவள். 488

கலியில் மாந்தருக்கு அடைக்கலமானவள்; கருணை வெள்ளமாக ஓடுபவள்; கலியின் தோஷங்கட்கு நிவாரணமானவள்; கலியில் கண்கண்ட தெய்வமானவள். 489

பிறைசூடியோனைச் சேர்ந்தவள் / கலைகளைத் தன்னுள் கொண்டவள்; கலைகட்கு ஆதாரமானவள்; கலியின் கெடுதிகளை அழிப்பவள்; பரம்பொருளானவள்; கலையின் ஒளியானவள்; பிறைசூடியவனின் பேரொளியானவள். 490

காலனிடம் அச்சத்தை அகற்றும் கங்கை; காலனின் முடிவானவனுக்கு (ஶிவனுக்கு) உகந்தவள்; கலையே ஆனவள்; கரிய நிறமுள்ளவள் (மழைகால முகில்களின் ப்ரதிபலிப்பு); பொன் நீரோட்டமானவள்; காலனுக்குக் காலனை (ஶிவனை) அபிஷேகிக்கும் புனித நீர் கொண்டவள். 491

இமயக்கொடுமுடியிலுதித்த கங்கை; இமயமலைச்சரிவுகளில் பாய்ந்தோடுபவள்; இமயப் பள்ளத்தாக்குகளில் பாய்ந்தோடுபவள்; சமவெளியில் வெகு தூரம் செல்பவள். 492

ஹரித்வாரில், ப்ரயாகையில் புனித கங்கை; காஶியில் குற்றங்களைப் போக்குபவள்; கிழக்கே வங்கத்தை அடைந்த கங்கை; கடலை நோக்கிச் செல்பவள். 493

இவ்வுலக வாழ்வுக் கிணற்றில் அமிழ்ந்தவர்களின் உள்ளத்திற்கு எட்டா அறிவுவடிவானவள்; பற்றற்றுத் தன்னில் பற்றுகொண்ட பக்தர்க்கு உள்ளத்தில் விளங்கி அடையத்தக்க அறிவு வடிவானவள். 494

மேலான பேரின்பமானவள்/பேரின்பமளிப்பவள்; தூய பரம்பொருளானவள்; ஸ்ரீராமக்ருஷ்ணரால் ஸேவிக்கப்பட்டவள்; ப்ரம்மனில் நிலைத்த பேரின்பம் அருள்பவள்; நிறைவுணர்வை வளர்த்திடும் அன்னை; ஒப்பற்றவள். 495

ஸ்ரீராமக்ருஷ்ணர் பரம்பொருளை த்யானித்த கரைதனையுடைய கங்கை; மேலானவள்; தன்னிலும் மேம்பட்டதல்லாதவள்; பரம்பொருளின் நீர்வடிவானவள்; கடலை நோக்கிச்செல்பவள். 496

ஸ்ரீராமக்ருஷ்ணரால் த்யானிக்கப்பட்ட காளி; மெல்லினிது ஒலித்திடும் கங்கை; ஸ்ரீராமன், ஸ்ரீக்ருஷ்ணனின் ஸான்னித்யம் பெறும் மேலான நிலைதனை அளிக்கும் மேலானவள்; தன்னைவிட மேம்பட்டதில்லாதவள். 497

அழகிய இளம்பெண்ணனவள்; நிறைந்து ஆழமாயுள்ளவள்; நல்மங்கலம் நிறைந்து வளர்ந்திடச்செய்பவள்; மங்கலம் நிறை மங்கையானவள்; (பக்தர்) எளிதில் அடையக்கூடியவள்; (அல்லோர்) அடைவதற்கரியவள்; தெய்வத்தன்மை வாய்ந்தவள்; சென்று அடைவதற்குக் கடினமானவள்; கடினங்களைத் தடுத்துவிடுபவள். 498

கடலே என அகன்று விரிந்து பரந்தவள்; கடலுடன் கலக்கும் கங்கை; பல கிளைநதிகளாகப் பிரிந்தோடுபவள்; மலையைச் சேர்ந்தவள்; கடலுடன் இணைந்துவிட்டவள். 499

பல நீர்வீழ்ச்சிகளாகப் பாய்ந்தோடும் பால் வெண்மை நீர் படைத்தவள்; அச்சந்தரும் இமயநதியானவள்; தடைகளை நீக்கிடும் அன்னை கங்கை; அச்சத்தைப் போக்குபவள்; இப்பிறவிப்பிணியை நீக்குபவள். 500

மகிழ்வுப் புல்லரிப்புண்டுபண்ணுபவள்; வெண்ணிறமானவள்; ஆழ்நீல வண்ணமுடையவள்; அச்சுறுத்துபவள்; அழகிய வடிவுடையவள்; ஹ்லகலீ, மேகனு, பத்மா எனும் அழகிய பெயர்களுடைய, கடலுடன் கலந்துவிட்டவள். 501

கடலேபோன்ற நீர்வெள்ளமானவள்; கடலென விரிந்து பரந்து ஒளிர்பவள்; கடலலைகள் போன்று களிப்பூட்டும் அலைகள் கொண்டவள்; மிக்க மகிழ்வூட்டுபவள்; கடலில் கலந்திட்டவள். 502

விண்ணுலக நதியான கங்கை; அமுத வெள்ளமானவள்; அழகுக் கடலே ஆனவள்; மலையரசனுன இமையத்துப்பனி உருகி ஓடும் அருவியானவள்; மங்களம் பெருகி ஓடி வளர்த்திடும் நன்னீர் நதியானவள் / பக்தி பெருகி ஓடும் இத்துதியால் அணிசெய்யப்பட்ட இசைபாடும் நன்னீர் கொண்ட நதியானவள். 503

மலையில் ப்ரவஹிப்பவள்; பள்ளத்தில் பாய்பவள்; சமவெளியில் ஓடுபவள்; கடலுட்சென்றிட்டவள்; மிகுந்த சுழல்களும் அச்சுறுத்தும் வேகமும் கொண்டவள் (மலை, பள்ளத்தாக்கு); அமைதியாகச் செல்பவள் (சமவெளி); அலைகள் கொண்டவள் (கடல்). 504

மலையைச்சேர்ந்த மாபெரும் நதிவெள்ளமானவள்; சமவெளியில் ஓடுபவள்; மாபெருங்கடலால் தழுவிக்கொள்ளப்பட்டவள்; கடலுடன் ஒருங்கிணைந்த கங்கை. 505

கடலினின்று வேறுபடாத அன்னை கங்கை; அழகுடன் நடமிடும் அலைகள் கொண்டவள்; கடலால் தழுவப்பட்ட, மகிழ்வானவள்; கடலுடன் நன்கொன்றிய கங்கை. 506

கோமுகத்தில் அவதரித்த கங்கை; கங்காஸாகரத்தில் கடலுடன் கலந்தவள்; கோமுகத்தில் வெளிப்படை வடிவுடையவள்; கடலில் வெளிப்படையாகத் தெரியாத உருவினள். 507

மலையிலுதித்தவள்; கடலில் கலந்தவள்; மலையைச் சேர்ந்த அமுதநீர் வெள்ளமானவள்; உப்புக்கடலில் நன்கு கலந்துவிட்டவள்! 508

கடலுடன் வேறுபாடன்றி நன்கு கலந்துவிட்டவள்; கடலினின்று நன்கு வேறுபட்ட இனிய நீர் கொண்டவள்; கடல்நீரின் இயற்கையைக் கொண்டுவிட்டவள்; உப்புச்சுவையே அற்ற, மிகவும் இனிய நீரானவள். 509

கடலினின்று பிரித்துக் காணமுடியா வடிவானவள்; கடலினின்று தனித்த வேறு வடிவுடையவள்; வெண்ணிறத் தீவில் உள்ளக்களிப்பூட்டுபவள்; ஆண்டுதோறும் விழாவெடுத்துக் கொண்டாடப்படுபவள். 510

கடலுடன் ஒன்றுகக் கலந்துவிட்ட, மிக மேன்மையான நீர் கொண்டவள் / மேலான இன்பமளிப்பவள்; மேலான ஒரே உண்மையைக் காணச்செய்பவள்; ஒரே பரம்பொருளுக்குச் சான்றுனவள்; ஒன்றேயான உண்மையை உணர்த்துபவள். 511

ஆழ்ந்த த்யானத்தில் உள்ளொளிரும் மெய்யுணர்வானவள்; தனித்த ஒரே மெய்யினை விளக்குபவள்; ஆழ்ந்து த்யானிக்கும் உள்ளத்தில் ஒன்றியவள்; ஒரே பரம்பொருளின் வெளிப்படை வடிவானவள். 512

ஒரே பரம்பொருளின் நதிவடிவானவள்; ஒரே பரம்பொருள் கடலானவள்; ஒரே உண்மையின் ஒளிரும் வெளிச்சமானவள்; ஒரே பொருளின் இன்னெரு வடிவில் ஒன்றியவள். 513

வெளிப்படையாகவும் மறைந்தும் உள்ள ஒரே மெய்ப்பொருளின் வெகு நுட்பமான உண்மையைக் காணச்செய்பவள்; இடத்திலும் காலத்திலும் எங்கும் பரந்து விரிந்து நிறைந்திருக்கும் பரப்ரம்மஸ்வரூபமானவள். 514

இரண்டற்ற தன்மையை விளக்கும் வாக்கியத்தின் பொருளானவள்; இரண்டாகவும் இறண்டற்றும் உள்ள தனித்தன்மையானவள்; ஜீவப்ரம்ம ஐக்கியத்தின் உண்மையைக் கற்பிப்பவள்; மெய்யறிவுப்பொறியினை ஒளிரச் செய்பவள். 515

கடலரசனுடன் கலந்த கங்கை; இம்மனக்கடலில் கலந்தவள்; கடல் வடிவில் கண்முன் இருப்பவள்; கடலாம் கோயிலில் தெய்வமானவள். 516

கடலே போன்றவள்; அமுதநீர் முழுமையாய் நிறைந்தவள்; கடலின் விரிவிற்கலந்தவள்; கடலுக்கடியில் சென்றவர்களை (ஸகரபுதல்வர்களை) நற்கதி அடையச் செய்தவள்; குற்றமற்ற கங்கை; பாபங்களை அழிப்பவள். 517

சொற்களுக்கெட்டா இன்பம் முழுமையாய் நிறைந்தவள்; இச்சொற்களால் துதிக்கப்பட்டவள்; மங்களமானவள்; எப்போதும் அலை வீசிக்கொண்டே இருப்பவள்; எல்லாம் அளிப்பவள்; எல்லாத் திசைகளிலும் நீரோட்டம் கொண்டவள். 518

இப்பிறவிப் பெருங்கடலைக் கரைகாணச் செய்பவள்; பேரின்பத்தை விளக்குபவள் / த்யானத்தில் பேரின்ப ஒளியால் விளங்குபவள்; ஶிவனிடம் பக்தி உண்டுபண்ணுபவள்; பிறவாவரமருள்பவள். 519

இவ்வுலகவாழ்வுக் கடலைத் தாண்டச் செய்பவள்; மேம்பட்ட பேரின்பத்துக்கு வழிகோலுபவள்; இவ்வுணர்ச்சிப்பெருங்கடலின் இசையானவள்/வண்ணமானவள்; இப்பண்ணிசையன்புப் பெருங்கடலில் ஒன்றியவள். 520

ஸ்வரக்கடலில் ஸங்கமிப்பவள்; ஸ்வரஶிகரத்தினின்று உருகிய அமுது கொண்டவள்; ஸ்வரக்கடலின் பண்வண்ணமானவள்; இன்னிசை ஒலி மலர்களால் அர்ச்சித்துத் துதிக்கப்பட்டவள். 521

இமயத்தில் துதிக்கப்பட்ட கங்கை; இமயத்தின் இன்னிசையானவள்; கடலின் லயத்தில் கலந்தவள்; பரந்த கடலில் மறைந்துள்ளவள்; கடலின் ஶ்ருதியில் நன்கொன்றியவள். 522

பனிமலையில் வெளிப்படை வடிவுடையவள்; கடலில் மறைந்துள்ள மங்கல வடிவானவள்; கடற்கரையில் உள்ளாழ்ந்து த்யானிக்கப்பட்டவள்; நன்னீராடல், நன்னீர்பருகல் இவற்றிற்கான மெய்ப்பலன் அருள்பவள். 523

கடல்வடிவில் வெகு அருகிலுள்ளவள்; நதிவடிவில் வெகுதூரத்திலுள்ளவள்; நதியின் நாதம் வெகுதூரத்திலொலிப்பவள்; கடலொலியில் முழங்குபவள். 524

பனிமலையிலுதித்த கங்கை; சமவெளியில் கடலில் ஒன்றியவள்/கோயில் கொண்டவள்; இமயத்துதித்த இத்துதிப்பாக்கள் ஆயிரமும் கடற்கரையில் ஸமர்ப்பிக்கப்பட்டவள். 525

வெகுதொலைவிலுள்ள பனிநதியானவள்; வெகு அருகிலுள்ள கடலில் கலந்தவள்; வெகுவாக விரும்பப்பட்ட நன்னீர் கொண்ட கங்கை; வெகு விரைவில் அருள் புரிபவள். 526

ப்ரம்மனில் ஒன்றிய உண்மையை விளக்குபவள்; ப்ரம்மானந்தமே ஆனவள்; அலைவற்ற அமைதியானவள்; ப்ரம்மனில் ஒன்றிடல் அருளும் புண்ய தீர்த்தமானவள்; ப்ரம்மனின் வெளிப்படை வடிவான நன்னீர் கொண்டவள். 527

இரண்டற்றவள், பேரின்பமானவள் / இரண்டற்ற பேரின்பம் அருள்பவள்; நிகரற்ற தனி நீர்ச்சிறப்புடையவள்; பள்ளத்தாக்குகளில் பாய்பவள்; பனிச்சிகரங்களில் உள்ளவள்; சமவெளியிலுள்ளவள்; எங்குமுள்ளவள். 528

உருகி ஓடும் உபநிஷத்ஸாரமானவள்; உருகிய இவ்வுள்ளக் கடலில் கலந்தவள்; கட்புலனுகா பரம்பொருளின் கண்டு மகிழத்தக்க வடிவானவள்; கண்ணுக்குப் புலப்படுபவள்; கட்புலனுகாதவள்; இத்துதியில் ஒளிர்பவள். 529

வேதங்களின் ஸாரமானவள்; பக்தியுடை உள்ளத்திற்கு மேலான ஸார வஸ்துவானவள்; இவ்விதயத்திலுள்ள அன்னை; (இவ்வுள்ளமாம்) சிறந்த கோயில் கொண்டவள்; இன்பத்தின் ஸாரமானவள்; பேரொலி எழுப்பும் நீர் வீழ்ச்சியானவள்; மெய்யுருவானவள்; கடலில் கலந்தவள். 530

அறிவின் ஸாரமானவள்; உண்மையின் ஸாரமானவள்; பண்வடிவானவள்; பண்ணிசை ஒலிகளின் இருப்பிடமானவள்; நாதத்தின் ஸாரமானவள்; அமுதச்சாறுனவள்; மங்கள வடிவானவள்; லயத்தின் இருப்பிடமானவள். 531

யோக ஸாரமானவள்; மாபெரும் நீர்வீழ்ச்சியானவள்; ஸத்துவ வடிவானவள்; என்றுமிருப்பவள்; பண்ணிசைச் சாறுனவள்; நீர்வீழ்ச்சியானவள்; மெய்யுருவானவள்; தூய்மை ஒளிர்பவள். 532

அச்சுறுத்தும் வடிவினள்; மிக்க எழிலுடையவள்; அமைதி வடிவானவள்; அமைதியளிப்பவள்; உண்மைப்பொருளின் மங்கள வடிவானவள்; பலவகைப்பட்ட வண்ண எழில் கொண்டவள்; அறிவு வடிவினள்; நல்வழி காட்டுபவள்/கண்ணுக்கினியவள். 533

மாயையெனும் கடலைத் தாண்டச்செய்பவள்; மாயையில் சுற்றிச் சுழல்பவரை நல்வழிப்படுத்துபவள்; மாயைத்திரையைக் கிழித்தெறிபவள்; மாயைக்கப்பாற்பட்ட வடிவினள். 534

மாயைக்கப்பாற்பட்ட அமைதி அருள்பவள்; மாயையைக் கிழித்தெறிபவனின் அருள் பெறச்செய்பவள்; மாயையின் நடுவே ஒரே உண்மையானவள்; உண்மை வழிபாடாகப் பாடப்பட்டவள். 535

மாயைக்கனவை அழிப்பவள்; மாயாவியான இறைவனின் அருள் பெறச்செய்பவள்; மாயையற்ற புனித நீரானவள்; மாயையின் இயல்பை வெளிச்சமிட்டுக் காட்டுபவள். 536

இவ்வுண்மை வாக்கிலிருக்கும் அன்னை; மெய்யையும் பொய்யையும் வேறுபடுத்திக் காட்டுபவள்; மெய்யே ஆனவள்; மெய்யின் மங்கல வடிவானவள்; மெய்ப்பொருளானவள்; மெய்ப்பொருள் இயல்பை உணரச்செய்பவள். 537

மெய்யறிவு வடிவான தேவி; பொய்மையையும் அறிவின்மையையும் போக்குபவள்; பொய் நடுவே ஒரே மெய்யான அன்னை; உண்மை அன்புடன் இப்பாக்களால் அணிசெய்யப்பட்டவள். 538

இவ்வுண்மைத் துதிகளை ஏற்றுக்கொள்பவள்; இவ்வுண்மை எண்ணங்களில் முழுமையாய் இருப்பவள்; ஸத்யவாக்கான இத்துதிகளின் ஸத்யமானவள்; ஸச்சிதானந்த வடிவானவள். 539

இந்த பக்தி வாக்கின் பொருளும் ஸாரமுமானவள்; கைகூப்பி வணங்கித் துதிக்கப்பட்டவள்; இத்துதிகளின் உயிர்நாடியானவள்; இவற்றின் அன்புணர்விலும் பண்ணிசையிலும் நல்மகிழ்பவள். 540

ஶக்திவடிவானவள்; தூய்மையும் நன்மையுமே ஆனவள்; ஆற்றலளிப்பவள்; ஆற்றலே ஆனவள்; மெய்யறிவை நாடுவோர் உள்ளாழ்ந்து அடையத்தக்கவள்; இவ்விசை அஞ்ஜலியில் மிகவும் மகிழ்பவள். 541

பற்றற்ற செயலில் மகிழ்பவள்; கர்மக்கட்டுக்களைத் தகர்த்தெறிபவள்; இவ்வுலகில் நன்கு வழி நடத்தி வேண்டுவன அளித்து வீட்டுப்பேறும் நல்குபவள்; கர்மவிடுதலைப் பேறளிப்பவள். 542

காமத்தையும் மதிமயக்கத்தையும் போக்கிடும் கங்கை; மெய்யினை விரும்பும் இவ்வுள்ளத்தின் விருப்பினை நிறைவேற்றுபவள்; விருப்பற்ற தன்மையை விரும்பும் இவ்வுள்ளத்தின் நல்விருப்பமானவள்; இக்கவி உள்ளத்தின் விருப்பமான எழிலோள். 543

பாரதப்பண்பாட்டில் நன்கு கலந்தவள்; கலைகட்கடிப்படையாய் உயிரூட்டுபவள்; பாரதத்தின் இன்பப்பெருமிதமானவள்; கலையரசியான பாரதியானவள்; சுமைகளை எளிதாக்குபவள். 544

நர்மதா, ஸிந்து, காவேரி ஆகிய எல்லா புனித தீர்த்தங்களும் தானே ஆனவள்; எல்லாவற்றிலும் உயர்ந்த மேலான தூய்மையானவள்; எல்லாம் தானே ஆனவள்; முழுமை இன்பத்துடன் கூடியவள். 545

கண்ணுக்கினிய நற்காட்சியானவள்; காணும் இன்பமாய்ச் செல்பவள்; செவிக்கின்பமாக இனிதிசைப்பவள்; முழுமையானவள்; முழுமை நிலை அருள்பவள். 546

அசைவன உள்ளிருக்கும் அசையா ஆத்மாவான கங்கை; பால்போன்ற வெண்ணிற அருவியாய் உள்ளங்கவர்பவள்; உப்புக்கடலில் கலந்த, பால்போல் இனியவள்; பால்போல் நுரைத்துப் பொங்கும் கடலில் கண்முன் இருப்பவள். 547

அன்னை கங்கை; விண்ணினின்றிரங்கிய புண்ய தீர்த்தமானவள்; காலத்தின் போக்கிற்குச் சான்றானவள்; காற்றுருவானவள்; நீர் வடிவானவள்; எல்லாமானவள்; என் உள்ளிழுக்கும் மூச்சானவள். 548

ஒன்றேயானவள்; பல வடிவானவள்; நீர்வடிவில் பூமியில் பொழிபவள்; பல வடிவில் எங்குமுள்ளவள்; நீர்வடிவில் இவ்வுள்ளத்தில் நிலைத்துள்ளவள். 549

எல்லையற்ற ஆத்மானுபவமளிப்பவள்; முழுமையாய் நிறைந்த ஆத்ம இன்பமளிப்பவள்; படைப்புச் சுழற்சியின் வெளிப்பாடானவள்; படைப்பின் தத்துவத்தைக் காணச் செய்பவள். 550

ஸம்ஸாரக்கடலின் ஓயா இரைச்சலுக்கு நடுவே ஒரு நொடிப்பொழுதின் ஓசையற்ற அமைதியானவள்; ஓசையற்ற அமைதியின் இன்பம் நல்கும், இன்பமானவள்; அமைதியினின்றெழுந்த இசை ஒலியானவள். 551

கோமுகத்தில் தொடங்கும் நீரோட்டம் கொண்டவள்; பனியிற்பிறந்தவள்; கடலை நோக்கிச்செல்பவள்; கடலில் ஓய்வுறும்/ஓய்வளிக்கும் கங்கை; இவ்வாழ்விலேயே முக்தி அளிக்கும் மேலான வழிநடத்துபவள். 552

கங்கை; என்னால் மிகவும் அவாவுறப்பட்ட அன்னை; ஏங்கி விரும்பும் என் உள்ளத்தில் உள்ளவள்; புன் சிரிப்புடன் ஒளிர்பவள்; இவ்வுள்ளக்கடலில் கோயில் கொண்டவள். 553

என்னைத்தாங்குபவள்; என் அன்னை; என் உள்ளத்தில் முழுமையாய் நிறைந்திருப்பவள்; உள்ளம் ஒய்வுறச் செய்திடும் கங்கை; என் உள்ளக்கோயிலில் தெய்வமானவள். 554

கேட்பதற்கு அற்புதமான பெயருடையவள்; நினைவினால் அழைக்கப்பட்ட அன்னை; சுய அனுபவத்தினால் நன்கு பாடப்பட்டவள்; என்னால் உணர்ந்து அறியப்பட்ட என் அன்னை. 555

வெகுதூரத்திலுள்ள கங்கை; எளிதில் காணும் பேறளிப்பவள்; மென்மையான இனிய குரலில் பாடும் பாட்டிலிருப்பவள்; என் அன்பினால் நன்கு பூஜிக்கப்பட்டவள். 556

இவ்வாக்கும் அதில் அடங்கிய பல பொருள்களும் ஆடைகளாக அமைந்தவள்; இச்சொற்பொருள் அருவியாக ஓடுபவள்; இச்சொற்கோவைகளின் வளத்தில் நடமிடும் இன்னிசையானவள்; சொல்லின்ப வரமருள்பவள். 557

மெய்யறிவும் சொற்செறிவும் அருள்பவள்; இவ்வின்னிசை வாக்குப் பொழிவாய் ஓடுபவள்; உள்ளத்தில் பளிச்சிடும் மெய்யுயிர்ப்பானவள்; இவ்வுள்ளத்திலிருப்பவள்; இவ்வெண்ணங்களால் துதிக்கப்பட்டவள். 558

பண்ணிசை இனிமையே ஒலியானவள் / இவ்வின்னொலிச் சொற்களின் இனிமையானவள்; மிக இனிய ஒலியுடன் பாய்பவள் / இவ்வினிய சொற்களில் பாய்பவள் / இவ்வினிய சொற்களுக்குக் காரணமானவள்; ஶப்தப்ரம்மமயமான தேவி; இவ்வின்னொலித்துதிகளின் தெய்வீக அன்னையானவள் / இவ்வின்னொலித்துதிகளின் எழுத்துக்களானவள். 559

இச்சொற்களிலும் எழுத்துக்களிலும் ஒன்றிய அன்னை; இச்சொற்களின் இன்னிசையோடொன்றியவள்; இவ்வெழுத்துக்கள், சொற்களின் பெருக்கானவள்; இவ்வினிய சொற்களால் இசையுடன் அர்ச்சிக்கப்பட்டவள். 560

இன்னா ஓசைகளின் கொடுமையை அழிப்பவள்; ஓசையினால் மிகவும் துன்புறும் இப்புதல்வியை அமைதிப்படுத்துபவள்; அதிகரித்துக் கொண்டே போகும் ஓசைகளை தொலைவு செய்பவள்; ஓசைகளாம் வலையினின்று விடுவிப்பவள். 561

தீய ஒலிகளின் துன்பத்தைப் பறந்திடச்செய்பவள்; நாள்தோறும் படும் துன்பங்களைப் போக்குபவள்; ஆழ் உறக்கத்திற்கிடையூறான

வன்னொலிகளின் துன்பத்தைத் தணித்து அமைதி அளித்துக் காப்பவள். 562

பற்றின்மையை அருள்பவள்; வழிகாட்டுபவள்; இப்பற்றற்றவளால் அன்புடன் பூஜிக்கப்பட்டவள்; இப்பற்றற்றவளால் அன்புடன் செய்யப்பட்ட இத்துதிகளை உடையவள்; பற்றற்ற, தன்னைப் பற்றிக்கொண்ட, இவ்வுள்ளத்தில் இருப்பவள். 563

கனிந்த அன்புடன் துதிக்கப்பட்டவள்; இவ்வன்பு எண்ணங்களின் இன்னிசை ஒலியானவள்; இப்பற்றற்ற/தனி ஆத்மாவினுல் துதிக்கப்பட்ட நற்றுணையானவள்; அமைதியான ஆத்ம இன்பமளித்துக் காப்பவள். 564

வணங்கப்படவேண்டிய, வணங்கப்பட்ட, கங்கை; வணங்கியவர் மனதை மகிழ்விப்பவள்; அமுதினிய கானத்தில் அமுதினிய வெள்ளமாய்ப் பாய்பவள் / அமுதினிய கானம் படைக்கும் அமுத வெள்ளமானவள்; அன்னை கங்கை; என் உள்ளத்தில் இருப்பவள். 565

எல்லா உள்ளத்துன்பங்களையும் போக்கிடும் தேவி; ஸத்குருவின் ஆசி நல்கிக் காப்பவள்; ஐயமற்றுத் துதிக்கப்பட்ட கங்கை; எல்லா ஐயங்களையும் பிளந்திடுபவள். 566

என்றும் நிலைத்த இன்பம் தருபவள்; மகிழ்வு வெள்ளமானவள்; எனது இன்பம் பெருக்கிடச் செய்பவள்; எப்பொழுதும் நினைந்திருக்கும் இவ்வுள்ள எண்ணங்களில் நிலைத்திருப்பவள்; மெய்யறிவின்ப மங்கலம் நல்குபவள். 567

வாழ்வின் ஒரே நோக்கமாம் மெய்யறிவளிப்பவள்; உயிராற்றலை ஒருமுனைப்படுத்துபவள்; வாழ்வின் உண்மையை உணரச் செய்பவள்; இவ்வுயிர்த்துதிக்கு உயிரூட்டுபவள். 568

இவ்வறண்ட உள்ளத்தின் மகிழ்வானவள்; அலுத்த இத்தனி உள்ளத்திலுள்ளவள்; உள்ளத்தெளிவருள்பவள்; தெளிந்த உள்ளத்தில் கோயில் கொண்டவள். 569

நிலைத்த உண்மை நன்கு காணப்பட்டவள்; வேண்டிய வரம் அருள்பவள்; ஒவ்வொரு நொடியும் நினைத்து உள்ளில் கண்டுகொள்ளப்பட்டவள்; அச்சமற்ற தன்மை அருள்பவள். 570

அறியாமை உறக்கத்துக்கு எதிரியான ஸத்துவ நீர் கொண்டவள்; ஸத்துவத்தின் ஒளியுடன் விளங்குபவள்; கவலையற்ற உளநிலை அருள்பவள்; அசையாத உணர்வுடன் பூஜிக்கப்பட்டவள். 571

இத்தவ உள்ளத்தில் இருக்கும் கங்கை; இத்தவ உள்ளத்தை தலமாக்குபவள் / இத்தவ உள்ளமாம் தலத்தில் ஓடுபவள்; இன்னமுது நீர் நிறைந்தவள்; புனிதமானவள்; இனிய பலன் அருள்பவள். 572

ஸ்வதந்த்ரமானவள்; தெளிவின் வடிவானவள்; ஸ்வதந்த்ரநிலே அருள்பவள்; பிறரைச் சார்ந்திருக்கும் நிலேக்கு மாற்ருனவள்; மேலான நிலேக்கு ஞானவழியில் நடத்திச் செல்பவள். 573

உளச்சோர்வுக்கு மருந்தான நன்னீர் கொண்டவள்; நோய்க்கும் வருத்தத்திற்கும் தடுப்பானவள்; (பிற) நீராடும் பொழுதும் நீர் பருகும் பொழுதும் நினேக்கப்பட்ட கங்கை; குளிர்ச்சியானவள்; வெப்பத்தை/துன்பத்தைப் போக்குபவள். 574

குறையறிவை நிறைவாக்கிடுபவள்; மெய்யறிவை அளித்து வளர்த்து முழுமை ஆக்குபவள்; ஐயந்திரிபற அளித்துக் காத்து நன்மை செய்பவள்; தன்னிலேயே உள்ளத்தைச் செலுத்தி ஆழ்ந்துள்ள இப்புதல்வியை நன்கு காப்பவள். 575

உள்ளன்பு, பற்றின்மை, தூய்மை கொண்ட இவ்வுள்ள மலேச்சரிவில் பாய்பவள்; இறைவன் திருநாமங்களே நன்கு இசைக்கும் இவ்வுள்ளத்தில் களிப்பாய் ஓடுபவள். 576

மிகவும் விரும்பப்பட்ட பனி ஸ்பர்ஶமுடையவள்; மிகவும் ஏங்கி விரும்பப்பட்ட நீருடையவள்; மங்கல நதியானவள்; மனக்கண்ணிற்கு எப்போதும் புலப்படுபவள்; வெளியில் காண உண்மை இன்பமானவள். 577

‘நான், ‘எனது’ என்னும் அஹங்கார மமகாரங்களே அழிப்பவள்; எல்லாவற்றிலும் உயர்ந்த அமைதியை அளிப்பவள்; தூய மெய்யுணர்வில் ஒன்றிநிற்கும் தன்மை அருள்பவள். 578

உளக்குழப்பத்தை அழித்திடும் கங்கை; சுற்றிச்சுழன்று அல்லலுறும் இப்புதல்வியால் அடையப்பட்ட, மிக மங்கலமானவள்; அலுத்த இவ்வுள்ளத்தில் துதிக்கப்பட்ட அன்னே; அலுப்பை அடித்துச்செல்லும் நதியானவள். 579

காமத்தையும் சினத்தையும் அழித்திடும் கங்கை; பேராசையையும் மதிமயக்கத்தையும் இல்லாமல் செய்பவள்; வெறி, பொருமையை நீக்கும் அன்னே; (இந்த) ஆறு பகைவர்களேயும் அழிப்பவள்; மலேயில் வழிகாட்டுபவள். 580

உள்ளமொன்றிய இவ்வாக்கில் ப்ரவஹிப்பவள்; மனமெனும் மௌனமலையில் இருப்பவள்; மௌனமாய் ஆத்ம லயத்துடன் பாடப்பட்டவள்; ஆத்ம நம்பிக்கையுடன் நன்கு துதிக்கப்பட்டவள். 581

அன்னை கங்கை; மிகத்தூயவள்; பெரும் பாபங்களை அழிப்பவள்; மகத்தான ப்ரம்மவித்தையின் பெருக்கானவள்; மிகச் சிறந்த ப்ரணவத்தை ஒலிப்பவள். 582

அறிவமைதியில் ஒன்றிய கங்கை / அறிவமைதியில் ஒன்றிடச் செய்பவள்; அறிவின்பப்பெருக்கானவள்; தன் புகழ் பாடும் நல் மங்கலம் அருள்பவள்; உள் ஆழ் த்யானத்தினுல், தன் நன்னீரில் அமிழ்ந்து நீராடும் இன்பமளித்துக் காப்பவள். 583

அறிவின்மையைப் போக்கிடும் கங்கை; தூய அறிவொளிரும் நீர் கொண்டவள்; நல்லறிவைத் தூண்டி ஒளிவிடச் செய்யும் அன்னை; இரண்டற்ற இன்பநிலை எய்தச்செய்யும் மேலானவள். 584

காலையில் நினைக்கப்பட்டவள்; பகலில் நினைக்கப்பட்டவள்; மாலையில் நினைக்கப்பட்டவள்; எப்போதும் நினைக்கப்பட்டவள்; உள்ளத்தால் நீராடப்பட்டவள்; நன்னீராடல் விரும்பப்பட்டவள்; தன்னில் நீராடலில் நன்கு தூய்மைபெற்ற இவ்வெண்ணங்களை உடையவள். 585

த்யானிக்கப்பட வேண்டியவள்; மிக்க தூய்மையுடையவள்; த்யானித்தலால் தனது நன்னீராடலின் பலன் அருள்பவள்; புகழத்தக்கவள்; சிறப்பளிப்பவள்; எப்பொதும் சென்றுகொண்டே இருப்பவள்; புகழளிப்பவள்; ஞானத்தை வளர்ப்பவள். 586

இவ்வுலகப் பயணத்தின் துன்பத்தையும் வெம்மையையும் அழிப்பவள்; உடன் செல்பவள்; எப்பொழுதும் உடன் செல்லும் அன்னை; இந்த ஆழ்ந்த விருப்பத்தை நிறைவேற்றுபவள். 587

இவ்வுலகவாழ்வில் நன்கு காப்பவள்; மறு உலக அச்சத்தை அகற்றுபவள்; உண்மை இன்பமாம் வீட்டுப்பேறளிப்பவள்; இவ்வுண்மைத்துதிகள் ஸமர்ப்பிக்கப்பட்டவள். 588

வெகுதூரத்தில் பெருக்கெடுத்தோடுபவள்; அதிக தூரத்தில் இல்லாதவள்; இவ்வுள்ளத்தில் ஸஞ்சரிப்பவள்; இவ்வதிகமான உள்ளொன்றிய அன்பில் ஒளிர்பவள்; பலவண்ண லயத்துடன் நடம் புரிபவள்; வெகுதூரத்தினின்று வணங்கப்பட்டவள். 589

ஒன்றிய உள்ளத்துடன் நன்கு துதிக்கப்பட்டவள்; இவ்வுள்ளத்தோடொன்றிய அன்னே; மெய்யறிவடையும் நல்விருப்பத்தை நிறைவேற்றுபவள்; மெய்யறிவே நோக்கமாயுள்ளவர்க்கு நல்வழி காட்டுபவள். 590

நல்வழி காட்டும் கங்கை; உண்மை இன்பம் அடையச் செய்யும் அன்னே; நல்மங்களமருளும் தேவி; திவ்யானுபவம் அருளும், இசைபாடும் நன்னீர் கொண்டவள் / திவ்யானுபவத்திலுதித்த இப்பாட்டுக்கள் கொண்டவள். 591

இவ்வெண்ணங்களில் ப்ரதிபலித்துப் பளிச்சிடுபவள்; ஒளிவீசும் தன் நன்னீரில் புன்னகைப்பவள்; அகன்று பரந்த இயற்கையைத் தன்னுள் கொண்டவள்; பிறவிப்பெருங்கடலேக் கடக்கச் செய்பவள். 592

ராமபக்தரான ஸத்குரு ஶ்ரீத்யாகராஜஸ்வாமிகளின் ஸாக்ஷாத்காரம் பெறும் அருள் புரிபவள்; குருவின் ஸத்கீர்த்தனங்களில் பொழிபவள்; குருவின் ஸத்துவகுணத்தை விரும்புபவள். 593

குருவின் பாட்டில் மிக்க இன்புறுபவள் / குருவின் பாட்டின் இன்பமே ஆனவள்; குருவின் கீர்த்தனங்களோடு ஒருங்கிணேந்தவள்; குருவின் கானத்தில் சொல்லாகவும் பொருளாகவும் இருப்பவள்; குருவைக் காணச் செய்யும் நன்னீருடையவள்/நல்வரமருள்பவள். 594

பஞ்சமி தினங்களில் மிகவும் பாடப்பட்ட திவ்யநாம கீர்தனங்களில் விருப்புடையவள்; குருபூஜை செய்யப்பட்ட நற்கரைகளுடையவள்; குருவை அபிஷேகிக்கும் நன்னீர் கொண்டவள். 595

ஶ்ரீராமநாமத்தின் நல்லினிமையானவள்; இச்சொற்களின் பாணியிலும் ஒலியிலும் இனிதொலிப்பவள்; திருநாமத்தை இடைவிடாது பாடுபவள்; நாதமாகவும் உள்ளொன்றிய லயமாகவும் ப்ரவஹிப்பவள் / நாதத்துள்ளிருக்கும் நல்லமைதியுடன் ப்ரவஹிப்பவள். 596

மகிழ்வளிக்கும் ஶ்ரீராமனின் மகிழ்வானவள்; இன்பூட்டும் பாட்டினேப் போல் களிப்பூட்டும் நன்னீர் கொண்டவள்; ஶ்ரீராமநாம இன்பம் களியாடும் தோட்டமானவள்; வெண்மையானவள்; அடர் நிறத்தினள்; மிகச்சிறந்த நீரோட்டமானவள். 597

இனிய நாத இன்பம் தரும் அழகிய நதியானவள்; ஶ்ரீராமநாமத்தை இனிமையாகப் பாடும் இன்பத்தை உண்டுபண்ணுபவள் / ஶ்ரீராமநாமத்தை இனிது பாடும் நன்னீர் கொண்டவள்; இனிய கானத்தின்

இருப்பிடமான/இன்பமான அழகியவள்; ஸ்ரீராமநாமம் பளிச்சிட்டு நடமிடும் அலைகள் கொண்டவள். 598

ஓய்வமைதியுடன் இன்பூட்டும் இனிய கானம் படைப்பவள்; (ராம)நாமத்தின் ஓய்வமைதியுடன் செல்பவள் / ஓய்வமைதியின் உள்ளுள்ளவள்; அமைதியான கம்பீர இசை படைப்பவள்; திவ்யநாம கீர்த்தனைகளில் பளிச்சிடுபவள். 599

ராமநாமத்தில் நிலைத்திருக்கும் கங்கை; நாமத்யானமாம் மலரால் அர்ச்சிக்கப்பட்டவள்; ஹரி, நாராயண என்றொலிக்கும் நாம புஷ்பார்ச்சனையில் விருப்புள்ளவள். 600

இவ்வாக்கின் மகிழ்வானவள்; இன்பத்தின் இருப்பிடமானவள்; இவ்வுலக வாழ்வின் ஒரே இன்பமானவள்; இவ்வுலகில் செல்பவள்; இவ்வாக்கெனும் செல்வத்தை அளிப்பவள் / இவ்வாக்கின் பொருளானவள்; இனிய நாதமாம் செல்வத்தை அளிப்பவள் / இனிய நாதமாம் செல்வமுடையவள் / இன்னொலியின் உட்பொருளானவள்; கானத்தில் மகிழ்பவள் / கானத்தின் மகிழ்வானவள்; இவ்வுள்ளத்தில் நடமாடிச்செல்பவள். 601

லக்ஷ்மிக்கும், லக்ஷ்மியின் மகிழ்வான விஷ்ணுவுக்கும் இன்பமளிப்பவள்; அழகியவள்; இடைவிடாது மகிழ்வூட்டும் இன்பநீர் கொண்டவள்; மன்மதனின் எதிரியான ஶிவனை மகிழ்விக்கும் இனியவள்; இனிமையான இடையரு இன்பமூட்டும் இனிய நீருள்ளவள். 602

வணங்குபவர்க்கின்பமளிப்பவள்; நல்லொலியினால் இன்பம் நல்குபவள்; இன்பம் நல்கும் பெயருடைய, வண்ண எழில் கொண்டவள்; ராமநாம அமுதச்சாறும் நீரோட்டமானவள்; அமுதத் திருநாமத்தால் மகிழ்விப்பவள். 603

எப்பொழுதும் ஆத்ம இன்பத்தில் அமிழ்ந்தவரால் த்யானிக்கப்பட்டவள்; த்யானத்தில் முனைப்புள்ளவர் அடையத்தக்கவள்; நிலைத்த இன்பத்தின் பெருக்கானவள்; மெய்யினை விரும்பும் இவ்வுள்ளத்து எண்ணத்திலும் உணர்விலும் நிலைத்திருப்பவள். 604

இசையரசரான ஸ்ரீத்யாகராஜஸ்வாமிகளின் துதிகளில் பொழிபவள்; நாதமயமானவள்; லயமானவள்; ஸ்ரீராமனால்/ லக்ஷ்மியின் உள்ளுள்ள ஒளி சூழ் இறைவனால் துதிக்கப்பட்ட கங்கை; குருவின் வாக்குப்பொழிவின் லயமானவள். 605

நாதோபாஸனையில் முனைப்புள்ள இப்புதல்வியின் எண்ணமும் உயிர்மூச்சுமானவள்; உயிராற்றல் ததும்பும் தனிச்சிறப்புள்ள நீர்

படைத்தவள்; வாழ்வின் ஆதாரஸ்ருதியான உயிர்மூச்சானவள்; இசைக்கடிப்படை (ஸ்ருதி)யான இன்னொலி செய்யும் நன்னீர் கொண்டவள். 606

இவ்வுண்மை வாக்கினால் அர்ச்சிக்கப்பட்ட கங்கை; மெய்யன்புடன் வணங்கப்பட்டவள்; நாள்தோறும் ஒரே ஒழுங்குடன் பாடப்பட்டவள்; பாடப்பட்ட திருநாமங்களின் ஸாரமான அமுத நீரோட்டமானவள். 607

தினசரிப் பழக்கமாக நீராடி உள்ளாழ்ந்து பாடிப்பூஜிக்கப்பட்டவள்; இவ்வாடா எண்ணமலர்களே பூஜைத் திருவுருவாகக் கொண்ட கங்கை / இவ்வாடா எண்ணமலர்களால் அர்ச்சிக்கப்பட்ட கங்கை; உள்ளொன்றிய இவ்வர்ச்சனையை ஏற்றுக்கொள்பவள் (தன்னால் ஏற்றுக்கொள்ளப்பட்ட, இவ்வுள்ளொன்றிய அர்ச்சனையை உடையவள்). 608

ப்ரம்ம முஹூர்த்தத்தில் பாடப்படும் இசையில் ஸ்ருதியாகவும் ராகமாகவும் லயமாகவும் ஓடுபவள்; விடிவதற்கு முன் நினைவினால் நீராடப்பட்டவள்; காலை ஒளியில் ஒளிர்பவள். 609

இத்துதிப்பாட்டுக்களின் மொத்தத்தில் இருப்பவள்; மீண்டும் மீண்டும் நன்கு துதித்துப் பாடப்பட்டவள்; இத்துதிகளை விரும்புபவள்; என்றும் புதிய நற்றுதிப்பாட்டுகளைத் தோன்றச்செய்பவள்/உடையவள்; என்றும் புதிய வாக்கருள்பவள். 610

ஸத்யானுபவமான இவ்வாக்கின் ஸத்துவமானவள்; ஸத்துவ அனுபவத்தின் ஸார அமுதானவள்; மங்களமான இத்துதியில் கரைபுரண்டோடுபவள்; தனது பேரொளியான இத்துதிவெள்ளமானவள். 611

இவ்வுலகில் தோன்றிய, பிறப்பற்ற பரம்பொருளாகிய கங்கை; மேலான பேரின்பமருள்பவள்; பிறப்பற்ற இன்பத்தின் பிறப்பிடமானவள்; பிறவாமை வரமருள்பவள். 612

என்னால் இப்படிப்பாடப்பட்ட கங்கையே! பிறவாவரம் எனக்கருள்வாய்! உன்னிடம் பக்தியும் உன்னைப் பாடலும் தவிர வேறொரு தகுதியும் பெற்றிலேன் அம்மா! 613

உந்தன் புதல்வியுடைய கர்மமொத்தத்தினின்று விடுதலையும் சிறந்த மேலான கதியும் உன்னாலேயே செய்யப்படவேண்டும். என் அம்மா! உன்னைத்தவிர எனக்கு வேறுபுகலிடம் இல்லை. 614

என்னுள்ளே ஒளிரும் தேவி! என் வாழ்வில் மங்கல உயிரூட்டுபவளே! என் வாழ்வை வளமிக்கதாகச்செய்யும் அம்மா! என் உள்ளுயிர் தேவதையே! 615

என் உள்ளமாம் கோமுகத்தின் இன்பமே! என் இதயமாம் இமயத்தில் ப்ரவஹிப்பவளே! என் எண்ணக்கடலில் கலந்த உண்மைப்பொருளே! என் அன்புக்கடலில் கலந்தவளே! 616

ஸ்ரீகங்கா அக்ஷரபுஷ்பாவளி

பனிமலையுதித்த கங்கை; கடலில் கலந்தவள்; பாதாளத்தில் பாய்பவள்; இவ்வுள்ளத்தில் மகிழ்பவள்; மிகவும் துதிக்கப்பட வேண்டியவள்; அக்ஷராவளியில் துதிக்கப்பட்டவள். 617

அன்னை கங்கை; மிகவும் விரும்பப்பட்டவள்; எழுத்துக்களுக்கு முன் பூஜிக்கப்பட்டவள்; அழிவற்றவள்; இவ்வெழுத்துக்களில் ஒளிர்பவள்; குறையாதவள்; மலையிலுதித்தவள். 618

இவ்வுள்ளத்துள்ளிருப்பவள்; வெளியுலகில் ஓடுபவள்; இவ்வுள்ளிருக்கும் ஆத்மாவுடன் நன்கு கலந்திட்டவள்; உள்ளுயிர்ப்புச் செய்திடும் கங்கை; உள்ளொளியாய் ஒளிர்பவள். 619

முழுமையான ஒரே இன்ப ரஸம் நிறைந்தவள்; நிகரற்ற சிறப்பு வாய்ந்த நதியானவள்; அறிவதற்கரியவள்; பிறப்பற்றவள்; மூப்பற்றவள்; இவ்வக்ஷரமாலையினால் அணி செய்யப்பட்டவள். 620

தொடர்ந்து த்யானிக்கப்பட்ட மெய்யுருவானவள்; முழுமை இன்பமாய் இனிதொலிப்பவள்; தொடர்ந்து திவ்யத்திருநாமம் இசைக்கப்பட்டவள்; முழுமை இன்பம் அருள்பவள். 621

தொடர்ந்த எழிற்பெருக்கானவள்; தொடர்ந்து இன்னொலி இசைப்பவள்; தொடர்ந்த நாதப் பொழிவானவள்; தொடர்ந்த விசை வேகத்துடன் ஓடுபவள். 622

அகண்ட தீபத்தில் ஒளிர்பவள் / அகண்ட தீபம்போல் எழில் சுடர்விட்டு ஒளிர்பவள்; தொடர் நீர்வீழ்ச்சியெனப் பொழியும் பாட்டில் புன்னகைப்பவள்; என்றும் நிலைத்த மங்கள ஆஶி நல்குபவள்; தொடர்ச்சியாய் உள்ளத்தில் அர்ச்சிக்கப்பட்டவள் / இத்தொடர்ந்த எண்ணங்களால் அர்ச்சிக்கப்பட்டவள். 623

தொடர் அருவியாய் இன்பத்துடன் கூடியவள்; தொடர்ந்த உள்ளுயிர்ப்பாய்ப் பொழிபவள்; தொடர்ந்து மெய்யறிவூட்டும் அன்னை; தொடர் அறிவு விளக்கினை ஒளிரச்செய்பவள். 624

அதிகாலை நீராடலில் மகிழ்விப்பவள்; அதிகாலையின் மென்மையான இசையில் ஒன்றியவள்; அதிகாலையில் ஜபிக்கப்படும் அக்ஷரமானவள்; அதிகாலையில் இன்னிசையால் அர்ச்சிக்கப்பட்டவள். 625

வற்றாத இக்கவிதைப் போக்கினுக்குக் காரணமானவள்; என்றும் வற்றாத இவ்வின்பக்கவி அருவியாய்ப் பொழிபவள்; அழிவில்லாதவள்; விரைந்து செல்லும் கங்கை / விரைவில் பாடல் பொழியச்செய்யும் கங்கை; மிக விரைவில் கவிதை பொழியும் நிறைவை/ கவிஞருக்கு நிறைவை அளிப்பவள். 626

இவ்வுள்ளத்தினுள் ஒன்றியவள்; உள்ளத்தில் நடமிடுபவள்; உள்ளிருக்கும் 'ஹ்ரீம்'கார தேவதையானவள்; உள்ளுள் நுண்மையாய்ப் பெருக்கெடுத்தோடுபவள்; உள்ளுள் 'ஓம்'காரம் ஒலிப்பவள். 627

தொடர்ச்சியாய்க் கவிதையில் துதிக்கப்படவேண்டியவள்; தொடர்ந்து இறைவன் திருநாமத்தை இசைப்பவள் / தொடர்ந்து தனது திருநாமங்களைப் பாடும் இப்பாட்டாய் இருப்பவள் / இப்பாட்டினுக்குரியவள்; நில்லாத தனது நீரோட்டத்தின் போக்கினால் இன்பூட்டுபவள்; முடிவற்றவள் / நில்லாமல் சென்றுகொண்டே இருப்பவள்; இவ்வுள்ளத்தில் இன்புறுபவள் / இவ்வுள்ளத்தை இன்பூட்டுபவள். 628

இவ்வெழுத்துக்களுக்கு உள்ளுள்ள ஸத்துவமானவள்; என்றும் கெடாத அமுதநீர் கொண்டவள்; உள்ளிருக்கும் மெய்ப்பொருளுடன் ஒன்றிய கங்கை; உள்ளக்கோயிலின் தெய்வமானவள். 629

உள்ளிருக்கும் ஆத்மாவில் ரமிப்பவள், திருமகள் இன்பத்தை அளிப்பவள் / உள்ளிருக்கும் ஆத்மாவில் திளைக்கும் இப்புதல்விக்கு அமைதி இன்பம் அருள்பவள்; ஆத்மானந்த வெள்ளமானவள்; ஆத்மானுபவத்தின் ஸாரமானவள்; தன்னம்பிக்கையை முழுமை பெறச்செய்பவள். 630

ஆத்ம அறிவைத் தட்டி எழுப்புபவள்; தமோகுணத்தை நீக்கித் தூய்மைப் படுத்துபவள்; தன் நன்னீர்போல் தூய தெளிந்த உள்ளத்தால் அடையப்படுபவள்; உள்ளிருக்கும் ஆத்மனே 'தான்' எனும் நிலையை உண்டாக்குபவள். 631

இன்பத்தின் ஆணிவேரானவள்; முதலும் முடிவும் இல்லாதவள்; நலஞ்செய்பவள்; ஆஶாபாஶங்களை (விருப்பு, பற்று

இவற்றை)அழிப்பவள்; மிகவும் விரும்பப்பட்டவள்; நன்கு புகழப்பட்டவள். 632

நீண்ட ஆயுளும் நோயற்ற உடல்நலமும் அருள்பவள்; நோய்த்துன்பத்தைத் தடுத்திடுபவள்; நீர்வீழ்ச்சியாய்ப் பொழியும் முழுமுதல் ஆற்றலானவள்; முழுமுதல் ஒலியாம் ப்ரணவத்தை ஒலிப்பவள். 633

இன்பமான நாதவெள்ளமாய் ஓடுபவள்; இவ்வாத்மாவில் ஒன்றிய இன்னிசையானவள்; ஆதாரஶ்ருதியான மெய்ப்பொழிவானவள்; நீரையே தன் உருவாகக் கொண்டவள். 634

இவ்வுள்ளத்து விருப்பானவள்; விருப்பை நிறைவேற்றும் கங்கை; இவ்வுலகில் துய்த்திடத்தக்கவள்; ஒன்றேயான இன்பத்தை அளிப்பவள்; இப்பூமியில் ஓடுபவள்; வானுலக நீரானவள்; இங்கு கண்முன் உள்ள தெய்வமானவள். 635

கரும்புச்சாற்றருவி போல் கவியால் துதிக்கப்பட வேண்டியவள்; கருப்பஞ்சாறென மிக்க இனிமையானவள்; இவ்வுலகில் இன்பமும் மேலான பேரின்பமும் நல்குபவள்; இங்கேயே நிறைவுப்பேறளிப்பவள். 636

காண்பதற்கு மிக்க இன்பமளிக்கும் நீரோட்டமானவள்; இறைவன் சென்னியினின்று ப்ரவஹிப்பவள்; இத்துதியில் மகிழ்பவள்; இத்துதியின் இறைவி; இறைவனுல் துதிக்கப்பட்ட எழிலோள். 637

இத்துதியின் அடிப்படையான அமுத வெள்ளமானவள்; வேண்டப்பட்ட இன்பத்தை அருள்பவள்; இந்த ஶ்லோகத் தொகுப்புகளை விரும்பித் தூண்டியவள்; தன்னுல் விரும்பப்பட்ட இந்த ஶ்லோகங்களை முழு நிறைவு பெறச்செய்பவள். 638

விருப்பத்தை நன்கு நிறைவேற்றுபவள்; விரும்பப்பட்ட நோயற்ற இன்பம் நல்குபவள்; தனது நீர்வீழ்ச்சியின் காட்சி விழையப்பட்டவள்; நீர் வெள்ளத்தில் அமிழ்ந்து நீராடல் விழையப்பட்டவள். 639

நன்கு தூய்மைப் படுத்தும் பனி நீர்வீழ்ச்சியானவள்; களிவெறியூட்டும் பனிநீர் வெள்ளமானவள்; பேரிரைச்சலிடும் நீர்வீழ்ச்சியானவள்; பக்திவெறியுடை இவ்வுள்ளத்துட்சென்றவள் / இவ்வுள்ளத்து இசையானவள். 640

நற்றுதி பாடப்பட்டவள்; மேலான இறையன்பு அருள்பவள்; மிகவும் மேலான புனித நீர் கொண்டவள்; மேம்பட்ட அனுபவத்தால் துதிக்கப்பட்டவள். 641

உயர்ந்த இமயத்தில் துவக்கம் கொண்டவள்; கீழ்நோக்கிப் பாய்பவள்; மேலுலகத்தினின்றிழிந்தவள்; மேலெழும்பும் அலைகளை மாலையாகக் கொண்டவள்; உயர்ந்த நோக்கினை அளிப்பவள். 642

பொழுதுபுலர்கையில் மிக்க அழகுடன் மிளிர்பவள்; புலரிநன்னீராடலில் மகிழ்விப்பவள்; புலரியில் நன்கு த்யானித்துப் பாடப்பட்டவள்; புலரியில் துதித்து வணங்கப்பட்டவள். 643

முனிவர்களால் நன்கு துதிக்கப்பட்ட பெருமையுடையவள்; ஜஹ்னு முனிவரின் புதல்வியானவள்; முனிவர்கள் உறையும் கரைகளுடையவள்; முனிவர்கட்கு நன்மை புரிபவள். 644

காளையை ஊர்தியாகக் கொண்ட ஶிவனின் சென்னியிலிருப்பவள்; கர்மக்கடன்கட்டுகளினின்று விடுவிப்பவள்; வளமளிப்பவள்; வளமுள்ள நீர் வெள்ளமானவள்; தூய இயல்புடையவள்; மென்மை இயல்புடைய இனிய நீர் கொண்டவள். 645

தனித்தவள்; தனித்தன்மையுள்ள நீர்ப் பொழிவானவள்; இத்தனித்துதியில் புன்னகையுடன் கூடியவள்; தனிப்பொருளின் வடிவானவள்; ஒரே உண்மையை விளக்குபவள். 646

தனித்த ஈடுபாடுடன் இப்புதல்வியால் நீராடப்பட்டவள்; தனித்ததோர் அநுபவத்தில் புல்லரிக்கச் செய்பவள்; தனித்த ஈடுபாடுடன் இப்புதல்வியால் த்யானிக்கப்பட்டவள்; தனித்ததோர் அநுபவத்துடன் நன்கு துதிக்கப்பட்டவள். 647

தனிமையில் இன்னிசை இசைக்கும் கங்கை; தனிமையில் அமைதியாக ஓடும் கங்கை; தனிமையின் அமைதியில் பாடப்பட்டவள்; தனித்து உள்ளாழ்ந்து அடையப்படுபவள். 648

தனித்த பக்தியுடன் துதிக்கப்பட்ட கங்கை; இத்தனிப்புதல்வியின் உள்ளத்தில் ஒன்றியவள்; தனிமையில் நற்றுணையானவள்; தனித்த இவ்வுள்ளத்தில்/இவ்வெண்ணங்களில் கோயில் கொண்டவள். 649

இத்தனித்த உள்ளத்தின் ஒரே இன்பமானவள்; தனித்த ஒரே இன்பப் பெருக்கானவள்; தனித்த இன்பத்தில் இவ்வாக்கினை உயிர்க்கச் செய்பவள்; தனித்த இன்பத்தில் உதித்த இவ்வாக்கில் பெருக்கெடுப்பவள். 650

ஒருமுனைப்பாட்டுடன் நன்கு துதிக்கப்பட்ட தேவி; ஒருமுனைப்பட்ட உள்ளத்தின் இத்துதியில் நிலைத்துள்ளவள்; தன்னில் ஒன்றிய இவ்வுள்ளத்தை/இவ்வெண்ணங்களை முழுமையாக்குபவள்; தன்னில் ஒன்றிய இவ்வுள்ளத்தில் நன்கு வாஸம் செய்பவள். 651

'ஓம்'காரத்தை ஓங்கி ஒலிக்கும் கங்கை; 'ஓம்'கார ஶ்ருதியுடன் இசை பாடுபவள்; 'ஓம்'காரமாய் ஓடும் இனிமையானவள்; 'ஓம்'கார ப்ரம்ம உருவானவள். 652

மூலிகைச்சாறு கலந்த நீரோட்டமானவள்; வடக்கில் பெருகி ஓடும் அன்னை; அல்லல்களைச் சமாளிக்கும் பாடம் கற்பிப்பவள்; அருகில் வந்தாலே களிப்பூட்டுபவள். 653

ஸத்துவத்தின் ஸாரமான, புத்துயிரூட்டும் நீர் கொண்டவள்; ஔடவம் முதலான வகைகள்கொண்ட ராகங்கட்கு அதிதேவதையானவள்; வைகறையில் அதிகாலை ராகங்களால் பாடப்பட்டவள்; புலரியில் மென்மையான வண்ணங்களில் ஒளிர்பவள். 654

மங்களமான குணச் சிறப்புடையவள்; மங்களமான வியந்தரு நல்லெழிலுடையவள்; மங்களமான நன்னீருடையவள்; மங்கள நற்கவிதை வரமருள்பவள். 655

காவ்ய மொட்டினை நன்கு மலரச் செய்பவள்; கவியுள்ளத்தில் எழிலுறப் புன்னகைப்பவள்; மென்னொலி செய்யும் அலைகள் கொண்டவள்; மென்னொலியில் பாடி இத்துதியால் வணங்கப்பட்டவள். 656

கலியினால் இன்னலுறுபவர்க்கு நல்லடைக்கலமானவள்; கலியின் கொடுமைக்கு நிவாரணம் செய்பவள்; கலியின் பேரிரைச்சலினின்று அமைதி நல்குபவள்; இம்மணமிக்க பாடல்களைத் தூண்டியவள். 657

செயலில் திறம் பெறச்செய்பவள்; செயலில் முழுநிறைவு பெறச்செய்பவள்; கர்மக்கட்டுக்களைத் தகர்த்தெறிபவள்; கர்மத்தளையினின்று விடுதலை பெறச்செய்பவள். 658

இக்கவிதைப்பாடலில் எதிரொலிப்பவள்; கவிதை அணிகளால் அணிசெய்யப்பட்டவள்; கவிதை நடமிடும் எழிலில் ஒளிர்பவள்; இக்கவிதையைப்பாடி வணங்கப்பட்டவள். 659

கிராதி என்றழைக்கப்படும் கங்கை; ஒளிக்கதிர்களில் பளபளப்பவள்; ஒளிக்கதிர் மாலையில் எழிலுற விளங்குபவள்; குயிலின் இன்னிசை

நிரம்பிய கரைகளுள்ளவள்; ஶிவனின் சென்னியினின்றிழிந்த நன்னீரானவள். 660

எழிலிளமங்கையான கங்கை; சிறப்பித்துப் பாடப்பட்டவள்; இப்பாட்டிற்கு ஆதாரஶ்ருதியானவள்; தூய்மைப் படுத்தும் புண்ய நீருடையவள்; நீரில் நடமிடும் தூய எழில் கொண்டவள். 661

சுருண்ட கூந்தலாம் அலைகள் கொண்டவள்; மல்லிகை மலர்களெனச் சிரிக்கும் அலைகள் கொண்டவள்; மலைப்பள்ளத்தாக்கில் வளைந்து செல்லும் போக்குடையவள்; குங்குமத்தால் வண்ணம் தீட்டப்பட்டவள். 662

வெண்பனிமூட்டத்தால் சூழப்பட்டவள்; புலரியில் இவ்வழகுறுபவள்; கரையோரம் வீடு விரும்பப்படுபவள் (இப்புதல்வியால்); கரைபுரண்டோடும் வெள்ளமானவள்; (உலக வாழ்வெனும்) கிணற்று நீராடும் இப்புதல்வியால் மிகவும் ஏங்கி விரும்பப்பட்டவள். 663

க்ருதிராஜரான குருதேவரின் (ஸத்குரு ஸ்ரீத்யாகராஜஸ்வாமி) க்ருதி வெள்ளமாய்ப் பெருக்கெடுத்தோடுபவள்; க்ருதிகளால் தினம் பாடித் துதிக்கப்பட்டவள்; க்ருதிகளிலுள்ள குருவின் வாக்கில் நிலைத்திருப்பவள். 664

செய்யத்தகுந்த, செய்யத்தகாதவைகளைக் கற்பிக்கும் அன்னை; துன்பத்தை அடித்துச் செல்பவள்; கருணைப் பெருக்கானவள்; இரங்கத்தக்கவரை மேம்படுத்தும் கங்கை; செய்யப்பட்ட தவறுகளைக் கழுவித் தூய்மையாக்குபவள். 665

முத்துப்போல் ஒளிரும் அலைகள் கொண்டவள்; அடர்ந்த மலையில் முத்துப்போல் சிரிப்பவள்; ஸ்ரீக்ருஷ்ணனின் வாக்கமுதிலுள்ள கங்கை[15] ; அடர்நிறமுடையவள்; ஸ்ரீக்ருஷ்ணனின் வடிவானவள். 666

கேதாரநாதரின் (இமயத்திலுறையும் ஶிவனின்) ஶிரத்திலிருப்பவள்; இமயத்தின் உயரத்தில் ப்ரவஹிப்பவள்; கேதாரலிங்கத்திற்கு அபிஷேகமானவள்; மிக உயர்ந்த ஞானத்தை அருள்பவள். 667

நிலவொளியில் மலையில் ஒளிர்பவள்; தனித்த பேரின்பநிலை அருள்பவள்; கைடபனுக்குப் பகைவனால் ( ஸ்ரீஹரியால்) புகழப்பட்ட கங்கை; கைலாஸநாதனை மகிழ்விப்பவள். 668

[15]“நதிகளில் நான் கங்கையாயிருக்கிறேன்” – பகவத்கீதை

கோபதாபங்களுக்கு வெகு தொலைவிலிருப்பவள் / கோபதாபங்களைத் தொலைவுறச் செய்பவள்; குயில்கள் கூவும் கரைகள் கொண்டவள்; ஆரவாரம் செய்யும் நன்னீர் கொண்ட கங்கை; மென்மையே அடையாளமாகக் கொண்ட நீருடையவள். 669

குபேரபட்டணத்தின் மகிழ்வான, வெள்ளி ஒலி மின்னுபவள்; நலமும் இன்பமும் தரும் அருமை கங்கை; நிலவொளியில் பட்டென ஒளிர்பவள்; உருண்டு புரளும் பட்டு அலைகள் கொண்டவள். 670

கௌஸல்யாவின் புதல்வனால் ( ஸ்ரீராமனால்) துதிக்கப்பட்டவள்; பட்டுப்போல் பாட்டிசைக்கும் ஸத்குரு ஸ்ரீத்யாகப்ரம்மத்தின் இசையில் நிலைத்துள்ளவள்; கௌஸ்துபமணியணிந்த விஷ்ணுவின் திருப்பாதத்தீர்த்தமானவள்; உள்ளார்ந்த அன்பே அடையாளமாகக் கொண்ட இந்த நற்றுதியில் இருப்பவள்/இந்த நற்றுதி கொண்டவள். 671

கவிதை உட்கிளர்ச்சியும் மெய்யறிவுமளிப்பவள்; இப்பூஜையை உகப்பவள்; மேம்பட்ட போக்குடையவள்; அன்னை; வலிமையும் ஆற்றலும் உண்டுபண்ணுபவள்; இப்பனுவலே யோகமாக ஈடுபட்ட இவ்வுள்ளத்தால் துதிக்கப்பட்டவள்; இமயமே விளையாட்டுக் கூடமாகக் கொண்டவள். 672

கொடிய ஸம்ஸாரத்தைத் தாண்டச் செய்பவள்; சினம் முதலிய பகைவர்களை அழிப்பவள்; இத்தனித்த புதல்வியை அணைத்துக் கொள்பவள்; அலுப்பை அடித்துச்செல்லும் நீரோட்டம் கொண்டவள். 673

செயற்கரிய செயலையும் எளிதில் நிறைவேற்றச் செய்பவள்; கவலை, அச்சம் இவற்றை அழிப்பவள்; இனிதொலிக்கும் வீணையே குரலானவள்; ஒரு நொடிகூட மறக்கப்படாதவள். 674

இரவில் மின்னலென ஒளிர்பவள்; அசையும் அசையாப்பொருள்கள் எல்லாவற்றிலுமுள்ள பரம்பொருளே தானாகி, இப்பூமியில் ஓடுபவள் / என்றும் கெடாத நீருடையவள், இப்பூமியில் ஓடுபவள்; நொடியில் வெகுவிரைவாக ஓடும் நீர் கொண்ட கங்கை; பொறுமையே ஆனவள், பொறுமையின் மறுவடிவானவள் / பூமியில் பொறுமையின் மறுவடிவானவள். 675

தன்னை அடைந்தவர்களின் பாபங்களைத் துடைப்பவள்; மன்னிக்கப்படவேண்டிய, தன்னை அடைந்த பக்தரைக் காப்பவள்; மேலான பரம்பொருளின் நல்லுருவான நீர் கொண்டவள்; வறட்சியுற்றோரை

உய்விப்பவள்; நீர் நிறைந்துள்ளவள் / காட்டிலுள்ளவள் / மங்கலத்திற்கு வழிநடத்திச் செல்பவள். 676

பூமியின் புதல்வியான ஸீதையால் பூஜிக்கப்பட்டவள்; மிக விரைந்தோடுபவள்; மிகவிரைவான நீரோட்டத்தினுல் மயக்குபவள்; பூமிக்கு வந்த வானுலக நதியானவள்; விரைந்து காக்கும் பெருமை உடையவள். 677

பக்தரின் பாபத்திரள்கள் அழியச் செய்பவள்; துயர்மிகு பிறவி வெள்ளத்தைத் தடுப்பவள்; பாற்கடலின் புதல்வியால் (திருமகளால்) துதிக்கப்பட்டவள்; பாலின் வெண்மையுடன் சிரித்து வரவேற்கும் அலைகள் கொண்டவள். 678

அற்பத்தனத்தைப் போக்கும் கங்கை; கொந்தளிக்கும் உள்ளத்தை அமைதிப்படுத்துபவள்; கொந்தளிக்கும் கடலே போன்ற நீரோட்டம் கொண்டவள்; கொந்தளிக்கும் அலைகளுடன் ஓடுபவள். 679

இதந்தரும் அமைதியளிப்பவள்; நல்மகிழ்வளிக்கும் அன்னை; க்ஷேத்ரத்தின் இறைவியானவள்; க்ஷேத்ரத்திற்குப் புனிதத்தன்மை அளிப்பவள்; மலையிலுதித்த கங்கை; கடலில் கலப்பவள். 680

பட்டுப்போன்ற மிக மென்மையான பேச்சுடைய அன்னை; பட்டுப்போல் மெல் நயமான வாக்செல்வமருள்பவள்; பட்டுப்போல் நயமிக்க – வாக்கில் பெருக்கெடுத்தோடுபவள்/வாக்கைப் பெருக்கெடுத்தோடச் செய்பவள்; பட்டுப்போல் மென்மையாக ஒளிரும் நீர் கொண்டவள். 681

பேரின்பமளிப்பவள்; வானுலக நதியான கங்கை; கற்கண்டு போல் இனிமையான, மிகச் சிறந்த நதியானவள்; துன்புற்ற உள்ளத்தை அமைதிப் படுத்தும் அன்னை; உளச் சோர்வை அழிப்பவள்; புகழ் தருபவள். 682

வானினின்றிறங்கிய கங்கை; கம்பீரமான ஒலியுடன் பாய்ந்தோடுபவள்; தாள நடையுடன் இன்னிசை வெள்ளமானவள்; அற்புதமான இன்னிசை லயத்துடன் செல்பவள். 683

பனிமலை நதியான கங்கை; தெய்வீகமானவள்; பயணத்தை கோமுகத்தில் தொடங்குபவள்; கங்கோத்ரீ – வடக்கே திரும்பும் கங்கை; தவமியற்றும் தலமானவள்; ஆழ்ந்த பள்ளத்தாக்கில் ஓடுபவள். 684

ஹரியின் சிலைவடிவு கொண்ட கங்கை; காட்டின் நடுவே ‘களகள’வென்று ஒலிப்பவள்; உத்தரகாசிக்குச் செல்பவள்; பள்ளத்தாக்கில் மங்கலமான (தேவப்ரயாகை) ஸங்கமத்தை நோக்கிச் செல்பவள். 685

பாகீரதியும் கம்பீரமான ஒளிமிகு அலகநந்தாவும் ஒருங்கிணைந்த கங்கை; தேவப்ரயாகையில் அன்னை கங்கை; ஆழ்ந்த பள்ளத்தக்கினின்று ராகவனை அர்ச்சிப்பவள். 686

இன்னும் கீழே ரிஷீகேஶம் அடைந்தவள்; ஹரியின் திருவடித் தீர்த்தமான கங்கை; ஹரித்வாரத்தை அடைந்த கங்கை; வானவெளியினின்று மலையில் இறங்கி சமவெளியை அடைந்தவள். 687

ப்ரயாகையெனும் புனிதத்தலத்தை நோக்கிச் செல்பவள்; பகலவன் புதல்வியான யமுனையால் இணையப்பட்ட கங்கை; மாந்தரின் பாபங்களைப் போக்குபவள்; காஶீபுரியை வந்தடைந்த கங்கை. 688

காடுபோல் அடர்ந்த பாபங்களை அழிப்பவள்; உத்தமகதியை அடைவித்து இன்பம் பயப்பவள்; காளியின் உறைவிடம் நோக்கிச் செல்பவள்; கடலை வந்தடைந்திட்ட கங்கை. 689

பனிமலையினின்று சமவெளியில் ஓடும் கங்கை; ஆழ்கடலுடன் ஒன்றுகக் கலப்பவள்; கத்யத்தாலும் பத்யத்தாலும் (உரைநடையாலும் செய்யுளாலும்) துதித்துப் பாடப்பட்டாவள்; கத்யத்திலும் பத்யத்திலும் பெருகி ஓடுபவள். 690

பாட்டெனும் பூவால் அர்ச்சிக்கப்பட்ட கங்கை / புஷ்பாவினுல் பாடி அர்ச்சிக்கப்பட்ட கங்கை; ஆழ்ந்து நீராடப்பட்ட ஆழமான நீருடையவள்; ஆழ்ந்த இனிய இசை இசைப்பவள்; இசையின் இனிமை கொண்ட வாக்கெனும் வரமருள்பவள். 691

மலையரசனுன இமயத்தின் சரிவுகளில் ஓடுபவள்; மலையிற்பிறந்தவள்; மலையில் மகிழ்வூட்டுபவள்; மலையரசனின் இயற்கை எழில் பெருக்கானவள்; மலையில் காட்சியளிக்கும் காந்தினீ எனும் கங்கை. 692

கீதாசார்யனின் உருவானவள்; கீதாஸாரமான, நதிகளில் சிறந்தவள்; இன்னிசை, வாத்யங்களால் துதிக்கப்பட்ட கங்கை; இன்னிசைக்கும் வாத்யத்துக்கும் ஶ்ருதியாக ஓடுபவள். 693

ஸத்துவகுணத்தின் ஒளியானவள்; குணங்கட்கப்பாற்பட்ட பரம்பொருளின் வடிவானவள்; ஸத்துவ குணமருள்பவள்; குணங்கட்கப்பாற்பட்ட அமைதியை அளிப்பவள். 694

நீரோட்டத்தின் ப்ரவாஹ மூலம் வெளிப்படாதவள்; மரைந்துள்ள பரமாத்மாவின் தீர்த்த வடிவானவள்; வீட்டில் பூஜிக்கும்

பாட்டில் உள்ளவள்; மலையிற்பிறந்தவள்; தங்கமயமானவள்; கோமுகத்திலுதித்தவள். 695

இமயத்துப் பெரும் நீர்வீழ்ச்சியானவள்; ஶிவனின் ஜடாமுடியினின்று இழிந்தோடுபவள்; மாபெரும் இமயமலை முழைஞ்சில் ஆழ்ந்து த்யானிக்கப்பட்டவள்; தூய வெண்ணிற எழில் கொண்டவள்; நிலவுக்கதிர்களில் பொன்னாய் ஒளிர்பவள். 696

இந்நூலின் வேரானவள்; உள்ளுயிர்ப்பானவள்; கோக்கப்பட்ட இவ்வக்ஷர மாலையணிந்தவள்; இப்பனுவலின் உட்பொருள், உணர்விற்கு முழுமையும் வளமையும் அளிப்பவள்; இப்பனுவலே ஆனவள்; இப்பனுவலின் தேவதையானவள். 697

க்ரஹங்களின் தோஷத்திற்கு நிவாரணமானவள்; க்ரஹணத்தின் முதலிலும் முடிவிலும் ஆழ்ந்து நீராடப்பட்டவள்; கற்களை உருட்டிப் பாறைகள் மேல் உருண்டு புரண்டோடுபவள்; பனிமலையில் பெருக்கெடுத்தோடுபவள். 698

கோடைநீராடலில் மிக்க இன்பமளிப்பவள்; கோடை வெப்பத்தைத் தணிப்பவள்; கோடையில் மிகவும் தண்ணிய நீருடையவள்; களைப்பைக் களைந்து புத்துயிரூட்டும் நீர் கொண்டவள். 699

முயற்சியை முழுநிறைவாக்குபவள்; ஆழம் காண முடியாதவள்; மங்கல நீர் வெள்ளமானவள்; பனிக்கட்டி மழையில் மேலெழும்பித் துள்ளிக் குதிக்கும் அலைகள் கொண்டவள்; பற்பல பாறைகளின் நடுவே முரலொலி செய்பவள். 700

பனிநீர் தெளிக்கும், உருண்டு புரளும் அலைகள் கொண்டவள்; நெய் விளக்குகளின் ஒளியில் மின்னும் நீர் கொண்டவள்; பயங்கரமான ஸம்ஸாரத்தினின்று விடுவிப்பவள்; பயங்கரமான பாபத்திரள்களை அழிப்பவள். 701

கடும் வேகமுடைய நீர் வெள்ளமான கங்கை; கடுங்காற்றில் மேலெழும்பிப் பறக்கும் நீர் கொண்டவள்; பகலவனின் கடும் வெம்மையைத் தணிப்பவள்; நிலவொளியில் அழகு மின்னும் நீர்கொண்டவள். 702

விரைவே அடையாளமாகக் கொண்ட நீரோட்டமுடையவள்; நிலைமாறும் தன்மையை அழிக்கும் நிலைத்த இயல்புடையவள்; பலவகை அழகொளிரும் தெள்ளிய நீர் வெள்ளமானவள்; அழகின் ஸாரமானவள்; மிக இனிய ஒலியுடையவள். 703

இவ்வெண்ணங்களால் அர்ச்சிக்கப்பட்ட முழுமையானவள்; என் அன்னே; இவ்வெண்ணங்களே நிறைப்பவள்/முழுமைபெறச்செய்பவள்; என்றும் நிலேத்துள்ள புனித நன்னீர் கொண்டவள்; நிலேத்த இன்பமருள்பவள். 704

இவ்வெண்ணங்களே நிறைக்கும் முழுமை நிறைவானவள்; இவ்வெண்ணங்களால் அர்ச்சித்துப் பூஜிக்கப்பட்டவள்; எண்ணங்களேயும் கவலேகளேயும் தொலேவு பெறச்செய்யும் தனிச் சிறப்புடையவள்; உள்ளத்தூய்மையும் தெளிவும் பெறச்செய்பவள். 705

எண்ணங்களின் எல்லேயினின்று வெகுதொலேவில் உள்ளவள்; வெகுதூரத்தினின்று இவ்வுள்ளத்தால் விரும்பப்பட்டவள்; இவ்வெண்ணங்களாகப் பொழியும் / ( என்) எண்ணங்களின் ஸாரமான அருமை கங்கை; என் எண்ணத்தை விட்டகலா அன்னே. 706

நிறைவு பெற்ற இந்நாம(மலர்)மாலேயினுல் பூஜிக்கப்பட வேண்டியவள்; தன்னுல் தூண்டப்பட்ட இந்த ஶ்லோகங்களினுல் பூஜிக்கப்பட்டவள்; தூய உள்ளுணர்வான ப்ரம்மனின் பேரின்ப வடிவானவள்; இக்கவிதைகளே இனிது பாடித் துதிக்கப்பட்டவள். 707

தூய நீர் வெள்ளத்தின் அழகால் உளம்கவர்பவள்; இத்துதிக்கும் உள்ளத்தின் விருப்பான, நல்லெழில் கொண்டவள்; செய்யுளணிகள் கொண்ட இக்கவிதையால் துதிக்கப்பட வேண்டியவள்; செய்யுளணிகள் நிறைந்த இக்கவிதையே கோயிலானவள். 708

ஒளிவட்டத்தால் சூழப்பட்டவள்; நிலவில் பளிச்சிடும் ஒளியுடையவள்; நிழலும் ஒளியும் பளிச்சிடும் அலேகளுடையவள்; சாயாதேவியின் புதல்வனுல் உண்டாகும் துன்பத்தைப் போக்குபவள். 709

உடைந்த உள்ளத்திற்கு இதம் செயும் கங்கை; குற்றங்குறைகள் மலிந்த இத்துதிகளால் துதிக்கப்பட்டவள்; எழுத்துக்கள் பதிக்கப்பட்ட இம்மாலேயினுல் அணிசெய்யப்பட்டவள்; இவ்வன்பு எண்ணங்களிற் கலந்தவள். 710

பாற்கடலில் பள்ளிகொண்டோனின் திருவடி வெள்ளமானவள்; கடலில் கலந்த இதந்தரும் நன்னீரானவள்; உலகை உய்விக்கும் கங்கை; உலகிற்கு மகிழ்வூட்டுபவள். 711

தெய்வீகமான புண்ய நீர் கொண்டவள்; பிறப்பு, இறப்பினேத் தடுப்பவள்; மருந்தான, அமுதப் பொழிவாம் நீர் கொண்டவள்; ஜபதபங்களே வளர்ப்பவள். 712

ஜபிக்கப்பட்ட அமுதத்திருநாமம் கொண்டவள் / ஜபிக்கப்பட்ட திருநாமங்களின் ஸாரமானவள்; ஜபயோக ஸாதனமானவள்; இவ்வாக்கின் இறைவியானவள்; வெகுவிரைவாகப் பாயும் கங்கை; ஜஹ்னுமுனிவரின் புதல்வி; ஜாஹ்னவி. 713

நனவிலும் கனவிலும் தெளிவாய் உள்ளொளிர் தூய்மையானவள்; மந்தத்தன்மையைப் போக்குபவள்; காட்டிலிருப்பவள்; ஜபிக்கப்பட்ட மந்த்ரஸாரமாம் நீர்வீழ்ச்சியானவள்; இவ்வுலகியல் துன்பமாம் வலையினின்று விடுவிப்பவள். 714

(தன்னால்) வெல்லப்பட்ட இவ்வுள்ளத்தில் உறைபவள் / உள்ளத்தை வென்றவரின் உறைவிடமானவள்; மெய்யறிவு விழைவோரால் அடையப்படும் கங்கை; நாவில் துலங்கும் திருநாமத்தினள்; நாவினை/இச்சொற்களைத் தூய்மைப்படுத்தும் புனிதத் தீர்த்தத்தினால் இன்பமளிப்பவள். 715

இவ்வுள்ளுயிர்ப்பினால் புகழப்பட்டவள்; உள்ளுயிர்ப்பளிக்கும் நன்னீர் கொண்டவள்; உயிரொளிர் உள்ளுயிர்ப்பாம் இத்துதியில் ஒளிரும், உயிராற்றலொளிர் இன்னீரானவள். 716

உயிரொளிர் இத்துதியின் நல்லுயிரானவள்; உயிருள்ளபோதே விடுதலை நிலை எய்தச்செய்து காப்பவள்; ஜீவன்முக்தர் போற்றும் துதியில் உயிராய் உண்மைப் பொருளாய் உருவினள். 717

பூஜிக்கப்படவேண்டியவள்; வெகு விரைவான கங்கை; வெகுவிரைவான நீரோட்டத்தினால் மயக்குபவள்; தன்னை அழைக்கும் பக்தருக்கு வரமளிப்பவள்; இத்துதிகளில் விரும்பிக் கோயில் கொண்டவள். 718

கடுந்தவம் புரிந்த பகீரதனால் அழைக்கப்பட்ட கங்கை; கடுந்தவம் புரிந்த பகீரதனின் தவத்தை நிறைவேற்றியவள்; ஶிவனின் சடை முடியினின்று பாய்ந்தோடுபவள்; இந்த ஶ்லோக மொட்டுக்களால் பூஜிக்கப்பட்டவள். 719

அறியப்பட வேண்டியவள்; அறிந்து துதிக்கப்பட வேண்டியவள்; மெய்யறிவும் வீட்டுப்பேறும் அளிப்பவள்; ஒளிமயமானவள்; இதந்தரும் மருந்தானவள்; ஜ்வரவேகம் போன்ற உள்ளத்துன்பத்திற்கு தன் புனிதநீரே மருந்தானவள். 720

ஆழ்ந்து ‘ஓம்’காரத்தை ஒலிப்பவள்; ஜங்கார ஒலி செய்திடும் கங்கை; மலை நீர்வீழ்ச்சி; பேரோசையுடன் விழுந்தோடுபவள்; மழைக்காற்றில் வெகு விரைவாய் சுற்றிச் சுழன்றோடுபவள். 721

மலைச்சரிவில் வியனுரு எழில் நீரோட்டமானவள்; சிலை வடிவில் பூஜிக்கப்பட்டவள்; உடுக்கையை ஒலிக்கும் ஶிவனின் சென்னியிலிருப்பவள்; இந்த ஶ்லோகங்களின் அர்ப்பணத்துடன் வணங்கப்பட்டவள். 722

பாறைகளைச் சிற்பங்களாகச் செதுக்கியுள்ளவள்; தன்னால் உள்ளுயிர்ப்பளிக்கப்பட்ட இந்த ஶ்லோகங்களே வடிவானவள்; முழுமுதற்கடவுளின் ஆறுவடிவானவள்; வீணையின் ஒலியில் ஒன்றிய இப்புதல்வியால் துதிக்கப்பட்டவள். 723

புண்யநீர் கொண்டவள்; தவத்தில் ஈடுபடுத்தும் கரைகள் கொண்டவள்; தவத்தை வளர்க்கும் சூழல் கொண்டவள்; தவத்தில் ஒன்றிய உள்ளத்தில் ஒன்றியவள்; தவத்தின் புண்ய பலனருள்பவள். 724

தத்துவ உபதேஶ ஸாரமானவள்; மெய்ப்பொருளின் வெளிப்படை வடிவானவள்; தத்துவப் பொருளினை விளக்கம் செய்பவள்; மெய்யறிவு வடிவானவள். 725

நெருப்பெனச் சுடும் மூவகைத் துன்பங்களைத் (தன்வினை, சூழ்வினை, ஊழ்வினை) தணிப்பவள்; தவமியற்றுவோரால் அடையப்பட்ட தூய நீருடையவள்; துன்புற்ற இவ்வுள்ளத்திற்கு ஒரே அடைக்கலமான கங்கை; தவமியற்றுவோர் துன்பத்தைத் தடுப்பவள். 726

வீட்டுப்பேறு விரும்புவோரால் அடையப்பட்ட புனித நீரானவள்; பிறவிப்பெருங்கடலைக் கடந்திடச்செய்யும் புண்யநீர் கொண்டவள்; உயர்ந்த பனி மலையின் புதல்வியான கங்கை; உயர்ந்து ஆர்ப்பரிக்கும் அலைகள் கொண்டவள். 727

அமைதிப் பனிமலையினின்றுதித்த பனிவெள்ளமானவள் / (உள்ள) அமைதி செய்யும் பனிவெள்ளமானவள்; மௌனப் பனிமலையிலுள்ளவள்; விரைந்தோடும் அமுத நீர் வெள்ளமானவள்; கங்கோத்தரியில் வெகு விறைவாக முழுகி நீராடப்படவேண்டியவள். 728

(இப்புதல்வியால்) புலரிக்கு முன் அமிழ்ந்து நீராடல் விரும்பப்பட்டவள்; இவ்வுள்ளத்தால் விரும்பப்பட்ட வியனுறு ஆறு; தன்னை விரும்பும் இவ்வுள்ளத்தால் அழைக்கப்பட்டவள்; விரும்பும் இவ்வுள்ளத்தை அடைந்தவள். 729

ஒளியும் ஆற்றலும் அருள்பவள்; நல்லொளிபடைத்தவள்; தன் கரையிலுள்ள திருத்தலங்களுக்கு எழில் சேர்ப்பவள்; நீர்வடிவிலுள்ளவள்; பனித்தண்மை பொருந்தியவள்; பனிமலையில் விளையாடுபவள். 730

(காமம் க்ரோதம் முதலிய) ஆறு குற்றங்களும் நீங்கியவர் வாக்கில் ஓடுபவள்; ஸ்ரீத்யாகராஜக்ருதிகளில் நிலைத்திருப்பவள்; காப்பவள்; மூவுலகங்களிலும் பூஜிக்கப்படவேண்டியவள்; முக்குணங்கட்கப்பாற்பட்ட இயல்புடையவள். 731

மூன்று வித்தைகளின்[16] ஸாரமான நீர்ப்பொழிவானவள்; கணமேனும் மெதுவாகச் செல்லாதவள்; மூன்றுவேளை தன்னில் நீராடலில் மிக்க புண்யமளிப்பவள்; மூவுலகிற்கப்பாற்பட்ட சிறப்புடையவள். 732

பத்து இரவுகள் திருவிழா கொண்டாடப்படுபவள்; காலக்கூறு நல்லியலாகச் செய்பவள்; மங்கலப் பெருக்கானவள்; உள்ள வெளியில் த்யானிக்கப்பட்டவள்; உள்ள வெளியினை ஒளிரச் செய்பவள். 733

அச்சுறுத்தும் அழகு நீர் வீழ்ச்சியானவள்; இன்னமுது நீர் கொண்டவள்; அகந்தை, இறுமாப்பு முதலியவற்றை அடக்குபவள்; தன்னடக்கம் மிக்கோர் உள்ளத்தில் உறைபவள். 734

தெய்வீகமானவள்; நல்லின்பம் நல்கும் தெய்வீக நீர் கொண்டவள்; தெய்வீக உணர்வில் புல்லரிக்கச் செய்பவள்; தெய்வீக வாக்குத் திறனளிப்பவள்; தெய்வீக அனுபவத்தினால் நன்கு துதிக்கப்பட்டவள். 735

தெய்வீகமான நீருடன் எழிலுற விளங்குபவள்; தெய்வீகமான தன் திருப்பெயரால் மகிழ்விப்பவள் / இறைவன் திருநாமங்களைப் பாடுதலில் மகிழ்பவள்; இறைவன் திருநாமங்களைப் பாடுதலில் பெருக்கெடுத்தோடுபவள்; திவ்ய நோக்கருள்பவள்; மங்கலம் செய்பவள் / உயிர்மூச்சளிப்பவள். 736

அல்லும் பகலும் நினைக்கப்பட்ட கங்கை; நாளின் முதலிலும் முடிவிலும் அமிழ்ந்து நீராடப்பட்டவள்; பகலவன் கதிர்களில் வைரமென ஒளிர்பவள்; எளியோர் துன்பத்தை அழித்திடும் அன்னை. 737

தீபாவளியன்று மங்கல நீராடப்பட்டவள்; தீப ஒளியில் மின்னும் நீருடையவள்; விளக்குகளின் ஒளியில் எழிலுற ஒளிர்பவள்; தீபாரதியுடன் நன்கு பூஜிக்கப்பட்டவள். 738

துன்பமும் வருத்தமும் வராமல் காப்பவள்; பால்வெள்ளத்தால் நோக்கினை நிறைப்பவள்; பாபத்திரள்களைத் தொலைவுறச் செய்பவள்; அருள்

[16] கீதம், வாத்யம், நடனம்

நோக்கினுல் வீடு பெறச் செய்பவள்/ கண்முன் தோன்றி அருள்பாலித்து விடுவிப்பவள். 739

அமிழ்ந்து நீராடற்கு மிக்க மன உறுதி தேவைப் படும்படியானவள்; உறுதியான பக்தியை அருள்பவள்; உறுதியான வலிமை அருளும் கங்கை; கண்ணில் புலப்பட்டவுடனே இன்பப் புல்லரிப்பூட்டுபவள். 740

தேவலோகத்தினின்றிறங்கியவள்; தேவபூமியான இமயத்திலுள்ளவள்; நோயற்ற உடல் நலமும் உள்ள அமைதியும் பக்தியும் அளிக்கும் தெய்வமான கங்கை. 741

குற்றங்கள் கவலைகள் முதலியவற்றை அடித்துச் செல்பவள்; வலுவின்மையைப் போக்கும் அன்னை; மிகச் சிறந்தவள்; தெய்வ நதியானவள்; ஒளிவடிவானவள்; தன்னிடம் பற்றுடை உள்ளத்தை/பக்திநிறை இவ்வெண்ணங்களை வெளிச்சம் பெறச் செய்பவள். 742

நீர் வடிவிலுள்ள தனிப் பரம்பொருளானவள்; தன்னை அடைந்தோர் குற்றங்களைப் பறந்திடச் செய்பவள்; மிக விரைந்தோடும் நீர்ப்போக்குடையவள்; பள்ளத்தாக்குகளில் அழகாய் வளைந்து செல்பவள். 743

இரட்டைகட்கப்பாற்பட்ட இயல்புடைய நீரோட்டமானவள்; எதிர்மறைகட்கப்பாற்பட்ட இன்பம் நல்குபவள்; இவ்வுலகிற்கும், அப்பாலும் நற்பொருளானவள்/நன்மை செய்பவள்; அடைக்கலமளித்துத் தனித்த இன்பம் பயப்பவள். 744

வெறுப்பினுல் பிறர் செய்யும் துன்பத்தை அழிப்பவள்; இரண்டாயும் இரண்டற்றும் உள்ள தன்மையை உணர்த்துபவள்; ஐயம் நீக்குபவள்; தனித்த தீவின் அமைதி நல்குபவள். 745

மலையருவியானவள்; கடலில் கலந்தவள்; வானுலகைச் சேர்ந்தவள்; தூய வெண்ணிற நீர்வீழ்ச்சியானவள்; காற்றில் குதித்துச் செல்பவள். 746

இத்துதியில் இருக்கும் கங்கை; த்யானிக்கப்பட வேண்டியவள்; இறையன்பை வளர்ப்பவள்; அறிவாற்றல் அருள்பவள்; தாங்கும் ஆற்றலை வளர்ப்பவள்; ஆறு வடிவானவள். 747

ஆழ்ந்த கம்பீரமான இன்னொலியுடையவள்; தூபதீபங்களுடன் பூஜிக்கப்பட்டவள்; துன்புறும் இவ்வுள்ளத்தால் அடையப்பட்ட அன்னை கங்கை; பனிமூட்டத்தால் சூழப்பட்ட வைகறை எழில் கொண்டவள். 748

நிலைபெற்ற உள்ளத்தில் த்யானிக்கப்பட்டவள்; முழுகி நீராடலுக்கு மிக்க மன உறுதி தேவைப்படச் செய்பவள்; இந்த ஶ்லோகப் படைப்பினை வளமூட்டி முழுமை பெறச்செய்பவள்; உள்ளத்துணிவும் செயல் திறமையும் பெறச்செய்பவள். 749

தொடர்ச்சியான இந்த ஶ்லோக வரிசைகளில் பாடப்பட்டவள்; தூய பக்தியுடை உள்ளத்தில் இருப்பவள் / உண்மை பக்தரின் உள்ளத்தைத் தூய்மைபெறச் செய்பவள்; வெள்ளிப்பெருக்காய் ஓடும் ஆறுனவள்; பக்தர் பாபத் திரள்களை அடித்துச் செல்பவள். 750

த்யானிக்கப்பட வேண்டியவள்; த்யானத்தால் அடையப்பட வேண்டியவள்; த்யானிக்கப்பட்டவள்; த்யானத்தை நன்கு வளர்ப்பவள்; த்யானத்திற்குப் பகைகளை அழிக்கும் கங்கை; த்யானிக்கும் உள்ளத்திற்கு எட்டுபவள். 751

த்யானிக்கப்பட்ட நீர் வெள்ளப்போக்கானவள்; த்யானிக்கப்பட்ட அமைதியை அளிக்கும் நீர் கொண்டவள்; த்யானத்தை வளர்க்கும் அமைதி கொண்டவள்; த்யானத்தில் ஒன்றிய இவ்வுள்ளத்தில் ஒன்றியவள். 752

உறுதியாக முழுமை நிலை அளிக்கும் கங்கை; ராஜஸ, தாமஸ குணங்களை நீக்குபவள்; ஒலிக்கப்பட்ட 'ஓம்'காரத்தின் பெருக்கானவள்; இருண்ட உள்ளத்திற்கு ஒளியூட்டுபவள். 753

துதியான இந்த ஶ்லோக வடிவிலிருப்பவள்; மிகச்சிறந்த நதியானவள்; ஒலிக்கும் ப்ரணவமே அமுதெனும் இன்னிசையானவள்; வணங்கியவர் பாபங்களை அழிக்கும் கங்கை; வணங்கித் துதிக்கப்பட்டவள்; துதிக்கும் இவ்வுள்ளத்தால் ஶரணடையப்பட்டவள். 754

வணங்குவோர்க்கு இதம் செய்யும் கங்கை; நரகத்தைத் தடுத்து நல்லின்பம் நல்குபவள்; புத்துணர்ச்சி, அமைதி, இன்பம் நல்கும் கங்கை; நவக்ரஹத் துன்பத்தைத் தணிப்பவள். 755

என்றும் புதிய எழிற்போக்குடையவள்; என்றும் புதிய மங்கல நன்னீர் கொண்டவள்; புத்தம்புதிய க்ருதிகளால் துதிக்கப்பட வேண்டியவள்; என்றும் புதிய நன்னீரினுல் புத்துயிரூட்டுபவள். 756

துயரத்தை நீக்குபவள்; என்றும் புத்திளமையுடன் விளங்குபவள்; அழியக்கூடியவைகட்கு அப்பாற்பட்ட இன்பம் தருபவள்; பேராசை முதலிய குற்றங்களை இல்லாமல் செய்பவள்; அழியக்கூடியவற்றுக்கிடையே அழிவற்றவள். 757

விண்ணுலக நதியானவள்; புண்ய நதியானவள்; பாம்பின்மேல் பள்ளிகொண்டோனின் திருவடித் தீர்த்தமானவள்; இந்நகரவாஸியின் அயற்சியைத் தீர்க்கும் காட்சியானவள்; நகரங்களிலும் ஓடும் திவ்ய வடிவானவள் / 'நாகரீ' எனப்படும் இந்த ஸம்ஸ்க்ருத எழுத்துக்களின் திவ்ய வடிவானவள். 758

பலவண்ண எழிலுடன் நடமிடும் அலைகள் கொண்டவள்; பலவகை ஒலிகளை ஒலித்திடும் நீர் கொண்டவள்; பலபொருள்செறிந்த இவ்வாக்கினில் அமுதாய்ப் பெருக்கிடுபவள்; பல்வேறு உணர்வுகளுடன் வணங்கப்பட்டவள். 759

நாபி, நெஞ்சம், தொண்டை, நாவு இவற்றினின்று எழும்பும் நாத வெள்ளமாய்ப் பாய்பவள்; திவ்யத் திருநாமங்களைப் பாடும்போது எதிரொலிக்கும் நீர்வீழ்ச்சியானவள்; நாதஸாரமான அமுத வெள்ளமானவள். 760

இசையின் இன்னொலியே பெயராகக் கொண்டவள்; ஒலிக்கப்பட்ட 'ஓம்'காரத்தின் வடிவானவள்; நாரதரால் தனித்துப் பாடப்பட்டவள்; நாதோபாஸனையில் வணங்கபட்டவள். 761

என்றும் போற்றப்பட்ட கங்கை; என்றும் புதிய தன்மையே அடையாளமாகக் கொண்டவள்; என்றும் தூய நன்னீர் கொண்டவள்; என்றும் மங்கலம் நல்குபவள். 762

நிலைத்தவை, நிலையாதவை இவற்றை அறியச்செய்பவள்; நிலைபேறுக்கு ராஜபாட்டையில் அழைத்துச் செல்பவள்; வீட்டுப் பேறளிக்கும் சிறப்புடையவள்; வீட்டுப்பேறளிக்கும் மெய்யறிவு வழி நடத்திச் செல்பவள். 763

என்றும் உள்ள நிரோட்டமானவள்; நிலைத்த இன்பம் நல்குபவள்; நிலைப்பேறின் மெய்யுருவானவள்; நிலையான இன்பத்தின் இருப்பிடமானவள். 764

கர்மத்தளையை உடைத்தெறிபவள்; தன்னை வந்தடைந்தவரின் நோயினை அழிப்பவள்; சுழற்காற்றின் ஓசையுடன் பறந்தோடுபவள்; அமைதியான (உள்ளக்)குகையில் கோயில் கொண்டவள். 765

தூயவள்; தூய்மை வடிவானவள்; உடலையும் உள்ளத்தையும் தூய்மை பெறச் செய்பவள்; தூய இன்பமாம் மெய்ச்சாற்றின் பொழிவானவள்; இத்தூய இன்ப எண்ணங்களில் இருப்பவள். 766

தெளிந்த வானின் எழில் கூடியவள்; தெளிந்த வானின் நீல நிறம் கொண்ட நீருடையவள்; நீல நிறமாய், தெள்ளத்தெளிந்து கண்ணாடி போன்று பளபளக்கும் நீர் கொண்டவள்; தூய மெய்யுணர்வு ப்ரதிபலிக்கும் நீர் கொண்டவள். 767

தூய்மையே நீரின் நற்சிறப்பாகக் கொண்டவள்; தனது நன்னீரில் தூய்மையான இப்புதல்வியின் மூச்சிலும் நல்வாக்கிலும் நிலைத்திருப்பவள்; தூய்மையின் உருவேயான நீர் கொண்டவள்; என்றும் தூய்மை என்பதே அடையாளமாகக் கொண்டவள். 768

மாலையில் நீல எழிலுறு நீர் கொண்டவள்; தீபாரதியின் ஒளி மின்னும் நீர் கொண்டவள்; பனி சூழ்ந்து விடியற்காலையில் எழிலொளிர்பவள்; கோமுகத்தில் பனியாகவே உள்ளவள். 769

இத்துதி ஶ்லோகங்களில் இருக்கும் கங்கை; புத்தம்புதிய இந்த ஶ்லோகங்களால் வணங்கப்பட்டவள்; நடமாடி இசைபாடும் அலைகள் கொண்டவள்; வழிகாட்டுபவள்; கண்ணுக்கு விருந்தான, மேலெழும்பிக் குதிக்கும் நீர்வெள்ளமானவள். 770

நிகமாகமங்களின் ஸாரமானவள்; பணிவுடன் இந்தஶ்லோகங்களால் வணங்கப்பட்டவள்; இயல்பாகவே வெகு தூய்மையானவள்; பேரின்பநிலை எய்தச் செய்பவள்; நிலைத்தன்மை அருள்பவள். 771

பேரின்பமாயும் மேலான பரம்பொருளாயும் விளங்குபவள் / பேரின்பமும் மேலான செல்வமும் நல்குபவள்; அவ்வுலக அச்சத்தை அகற்றுபவள்; செய்யுள், உரைநடைத் துதிகளின் உட்பொருளானவள்; செய்யுள், உரைநடைத் துதிகளில் பொழிபவள். 772

செம்பில் பூஜிக்கப்பட்ட தூய்மையானவள்; இவ்விதயத்தில் கோயில் கொண்ட அமுத நீர் வெள்ளமானவள்; மலையின் ஒளிமாலையானவள்; அவ்வுலக இன்பம் நல்குபவள். 773

மலைப்பாலத்தினின்று மகிழ்வூட்டும் காட்சியானவள்; பொங்கும் பெருவெள்ளத்தால் புல்லரிப்புண்டுபண்ணுபவள்; புஷ்பாவினுல்/மலர்களால் அர்ச்சிக்கப்பட்ட மிகத்தூயவள்; தூய உள்ளத்தில்/தூய இவ்வெண்ணங்களால் பூஜிக்கப்பட்டவள். 774

எண்ணங்களையும் வாக்கையும் தூய்மைப் படுத்தும் தூயவள்; தூய இச்சொற்கோவைகளாய்ப் பொழிந்தோடுபவள்; தூய சூழலுடையவள்; மிகவும் புனிதமான நீர்வெள்ளமானவள்; புனித நீர்வெள்ளத்தில் நீராடுபவரைப் புனிதமாக்குபவள். 775

பெருஞ்சிறப்பளிக்கும் கங்கை; அமுத நீர்ப்பெருக்கெடுத்தோடுபவள்; மிகத் தூயவள்; முழுநிலவில் ஒளி மின்னுபவள்; பொங்கும் பெரு வெள்ளமாய்ப் பொலிபவள். 776

நீராடுபவர்க்குப் புத்துயிரூட்டும் கங்கை; இத்துதிவெள்ளத்தைத் தூண்டியவள்; நீர்வெள்ளத்தின் ஸாரம் ப்ரணவமானவள்; தாழ்ந்து பணிந்து புகழ்ந்திடும் இத்துதியில் மகிழ்பவள். 777

தெளிந்த நீரினல் மிகவும் களிப்புறச் செய்பவள்; தன்னருளாம் நீடமைதியில் ஒன்றியவள்/ தெளிவும் அமைதியும் உள்ளொன்றலும் அருள்பவள்; இந்த ஸ்லோகங்களுக்கான உள்ளுயிர்ப்பு அருளியவள்; நல்மங்கலமாம் நற்பலனருள்பவள். 778

தெளிந்த உள்ளத்தில் நற்பொழிவானவள்; தெளிவில் ஸ்புரித்த இவ்வெண்ணங்களில் இருப்பவள்; தெளிந்த, அமைதியான கங்கை; மிகுந்த ஈடுபாட்டுடனும் உள்ளன்புடனும் பூஜிக்கப்பட்டவள். 779

பொழுது புலர்வதற்குமுன் மிக்க அமைதி நிறைந்தவள்; உயிராற்றல் நிரம்பிய நன்னீர் கொண்டவள்; உயிராற்றல் அளிப்பவள்; கவிக்கு உள்ளுயிர்ப்பளிப்பவள்; மிக விரைந்தோடுபவள்; உயர்மலையின் எழிலொளியானவள். 780

உள்ளுயிர்ப்பின் வித்தான பனிநீர்ப்பொழிவானவள்; பொற்சிகரங்கள் கொண்ட இமயமாம் அரண்மனையிலுள்ளவள்; எதுகை, மோனை முதலான செய்யுளணிகளில் ஒளிர்பவள்; இந்த ஸ்லோகங்களின் தொகுப்பே கோயிலானவள். 781

இவ்வுள்ள வழிபாட்டில் மிக்க விருப்புடையவள் / இவ்வன்புள்ளத்தில் வழிபடப்பட்டவள் / இவ்வன்பு எண்ணங்களால் வழிபடப்பட்டவள்; இன்பூட்டும், இனிய புனித நீர் கொண்டவள்; ஊஞ்சலாடும் அலை எழில் நிறைந்தவள்; இத்துதிப்பாட்டுக்களை ஊக்குவித்தவள் / தன்னல் ஊக்குவிக்கப்பட்ட இந்த ஸ்லோகங்களின் இசையானவள். 782

இப்பாமலர்களை மலரச்செய்பவள்; பாபமரத்தை வேரோடு பிடுங்கி எறிபவள்; நோயினின்று மீண்டவரை வலுவுறச்செய்பவள்; பொங்கும் கவிதை வெள்ளமானவள். 783

மலைச்சரிவுகளில் மகிழ்பவள்/மகிழ்வூட்டுபவள்; தன்னில் முழுகித்திளைக்கும் இவ்வுள்ளத்தின் மகிழ்வானவள்; நீராடும் இப்புதல்விக்குக் குளிர்ச்சியான சுகமளிப்பவள்; கண்ணுக்கு இன்ப

விருந்தெனும் நீர் வெள்ளமான கங்கை; துள்ளிக்குதிக்கும் அலைகளுடன் வெகு அழகாக விளங்குபவள். 784

விரும்பிய முழுமை நிறைவு பெறச்செய்பவள்; மலர்ந்த நாம மலர்களால் அர்ச்சிக்கப்பட்டவள்; அமிழ்ந்து நீராடலில் நுரையீரல் விரியச் செய்பவள்; வெண் நுரை ஒளிப் புன்னகையுடன் கூடியவள். 785

நிறைநீர் மகிழ்வானவள்; நிறைந்த அன்புடன் வணங்கப்பட்டவள்; பதரீநாதரின் பாத வெள்ளமானவள்; பதரீ எனும் புனிதத்தலத்தின் மலைச்சரிவிலுள்ளவள்/அணிகலனானவள். 786

தன்னில் நிலைத்த இவ்வுள்ளமே உறைவிடமாகக் கொண்டவள்; பாசக்கட்டுக்களினின்று விடுவிப்பவள்; ஆற்றலின் ஓட்டமான நீர் கொண்டவள்; மிக்க ஆற்றலுள்ளவள்; ஆற்றல் அருள்பவள். 787

பலமுறை நன்னீராடப்பட்டவள்; மிகவும் த்யானிக்கப்பட்டவள்; மிகப்பல துதிகளைத் தூண்டுபவள்; மிகுந்த துன்பங்களை அழித்திடும் கங்கை; மிகவும் வேண்டப்பட்ட என் அன்னை. 788

வெகுதூரம் பரவிய சிறப்புடையவள்; மிக வேகமான, மிகச்சிறந்த நதியானவள்; பல நீர்வீழ்ச்சிகளாகப் பெருக்கெடுத்தோடுபவள்; நிரம்பிய நீருடையவள்; மிகவும் புகழப்பட்டவள். 789

வெகு தொலைவிலிருந்து (இவ்வுள்ளத்தால்) வேண்டப்படும் கங்கை; வெகு தொலைவினின்று நினைத்துத் துதிக்கப்பட்டவள்; வெகு தொலைவினின்று உள்ளத்தால் நீராடப்பட்டவள்; வெகு தொலைவிலுள்ள இப்புதல்வியின் உள்ளத்தில் இருப்பவள். 790

பல பிறவிகளில் செய்யப்பட்ட பாபக் கூட்டங்களைத் தொலைவுபெறச் செய்யும் தூயவள்; பற்பல கர்மங்களினின்று விடுவித்து மெய்யறிவும் வீட்டுப் பேரின்பமும் அருளிக்காப்பவள். 791

தன்னில் திளைக்கும் சிறுர்கட்குக் களிப்பூட்டுபவள்; இக்குழந்தை மழலையில் களிப்புறுபவள்; இளஞ்சூரியனின் ஒளியில் மின்னும் நீருடைய கங்கை; பலவகை எழிலுற்று மகிழ்வூட்டுபவள். 792

அச்சுறுத்தும் நீரோட்டமானவள்; இவ்விதயக்குகையெனும் புனிதத்தலத்தில் இருப்பவள்; ஊடுருவி ஆராயும் உளத்தெளிவருள்பவள்; புனித ப்ரணவத்தில் உறைபவள். 793

அறிவுக்கப்பாற்பட்ட இயல்பினள்; அறிவுடை நல்லோரை மகிழ்விப்பவள்; பெரும் புண்யமளிக்கும் கங்கை; பெருஞ்சிறப்பளிப்பவள். 794

கற்பித்தற்கப்பாற்பட்ட சொற்றிறன் அருள்பவள்; தனது இத்துதிகளைத் தானே கற்பித்தவள் (தன்னால் கற்பிக்கப்பட்ட தனது இத்துதிகளை உடையவள்); அறியப்படவேண்டியவள்; அறிவு வடிவானவள்; அறிவுக்கெட்டா முழுமுதற்பொருளை அறியச்செய்பவள். 795

பேரின்ப வடிவினளான அன்னை; பரம்பொருளை அறியும் விழிப்புணர்வளிப்பவள்; பேரின்பம் அருள்பவள்; பரம்பொருளுடன் ஒன்றிய நிலையை உணர்த்துபவள். 796

ப்ரம்மானுபவ ஸாரமானவள்; ப்ரம்மனில் ஒன்றிடும் தன்மையை வளர்ப்பவள்; பேரின்ப ஸுகமேயான கங்கை; ப்ரம்ம அறிவொளியை வளர்த்திடுபவள். 797

ப்ரம்ம முஹூர்த்தத்தில் த்யானிக்கப் பட்டவள்; வைகறையில் (இப்புதல்வியால்) அமிழ்ந்து நீராடப்பட்ட அமுத நீர் கொண்டவள்; புலரியில் நன்கு பாடப்பட்டவள்; ப்ரம்ம முஹூர்த்தத்தின் அமைதியே ஆனவள். 798

இந்த பக்தையைக் காத்திடுபவள்; மங்கலப்பெருக்கானவள்; இந்த பக்தி ஶ்லோகங்களால் வணங்கப்பட்டவள்; அச்சம் முதலான தடங்கல்களை நீக்கிடும் கங்கை; பஜனை இன்பமாய்ப் பெருக்கெடுப்பவள். 799

மங்கல வாக்செல்வமளிக்கும் கங்கை; அலைகளால் அலங்கரிக்கப்பட்ட மங்கலமானவள்; மங்கல வாக்பொழிவாய் ஓடுபவள்; இம்மங்கல வாக்கின் உட்பொருளாய் உள்ள அமுதச்சாறானவள். 800

வியன்தரு சிறப்புடை நீர் நிரம்பியவள்; பட்டென ஒளிரும் நன்னீர் கொண்டவள்; பிறவிப்பிணியின் துன்பத்தை நீக்கும் மருந்தான நன்னீர் ஏராளமாய் நிறைந்தவள். 801

அறிவுணர்வுக்கப்பாற்பட்ட இயல்பினள்; உள்ளன்பில் உதித்த இப்படைப்பில் போற்றப்பட்டவள்; எண்ணங்கட்கப்பாற்பட்ட இறையாற்றல் கொண்டவள் / எண்ணங்கட்கப்பாற்பட்ட இவ்வுள்ளத்து அன்பினுக்குரித்தானவள்; நீர் வடிவிலுள்ளவள்; இவ்வன்புப் படைப்பின் உட்பொருளானவள். 802

உள்ளன்பினுல் இயற்கையாய்ப் பொழிந்த இந்த ஶ்லோகங்களால் துதிக்கப்பட்டவள்; உள்ளன்பிலுதித்த இத்துதிகளுட்சென்றவள்/இத்துதிகளின் இசையானவள், இத்துதிகளை உதிக்கச் செய்தவள்; ஒளிமயமாய் விளங்கும், நிகரற்றவள்; இவ்வுணர்ச்சிப்படைப்பை ஒளிரச் செய்யும் காலை ஒளியானவள். 803

உடைந்த உள்ளத்திற்கு அருமருந்தான கங்கை; பீஷ்மரின் தாகத்தைத் தணிக்க வந்தவள்; திகிலூட்டும் பெரும் நீர்வீழ்ச்சியாக அச்சுறுத்துபவள்; இவ்வுலகவாழ்வில் சிறையுண்டு அச்சுற்றவரை விடுவிப்பவள். 804

இவ்வுலகில் அற்புதத் தூய்மையானவள் / அற்புதத் தூய்மையான நீர்கொண்டவள் / வானுலகினின்றிழிந்த அற்புதத்தூய்மையானவள்; மூவுலகங்களையும் தூய்மைப் படுத்துபவள் / மூவுலகங்களிலும் ஓடும் தூயவள்; பூவுலகை வந்தடைந்த இறைவியானவள்; மீண்டும் மீண்டும் வணங்கப்பட்டவள். 805

ப்ருகுஶிகரத்திற்கருகில் இமயச்சரிவிலுள்ளவள்; பனிக்கட்டிகள் நிரம்பிய பாகீரதி; பனிநீர் கொண்டவள், வடக்குத் திரும்புபவள்; மிகுந்த உளைச்சலைத் தணிப்பவள். 806

உள்ளத்துன்பங்களின் ஆணிவேரைப் பிளப்பவள்; பயங்கர எழிலருவியாகப் பொழிபவள்; மருந்தான திவ்ய நீர் கொண்டவள்; பைரவனும் ஶிவன் கோயில் கொண்ட இமயப்பள்ளத்தாக்கில் இருப்பவள். 807

பாம்பை உண்ணும் கருடனை வாகனமாகக் கொண்ட விஷ்ணுவின் திருவடிவெள்ளமானவள்; இவ்வுலகிலுள்ளவள், இவ்வுலகிற்கப்பாற்பட்டவள் / இவ்வுலகிலுள்ளோரைக் காப்பவள்; வணங்கித் துதிக்கப்பட்டவள்; சுற்றி அலையும் உள்ளத்தை ஒருமைப் படுத்துபவள்; ஆக்ஞா சக்ரத்தில் (புருவங்கட்கிடையே) ஒன்றிய உள்ளத்தில் பளிச்சிடுபவள். 808

மங்கலமளிக்கும் நன்னீர்ப் பெருக்கானவள்; மங்கலமளிக்கும் வாக்கினைப் பெருகச் செய்பவள்/வாக்காகப் ப்ரவஹிப்பவள்; தன்னில் நீராடல் மங்கலவழியானவள்; மங்கல இன்ப வழி நடத்துபவள். 809

சினம், வெறுப்பு முதலியவற்றைத் தணிப்பவள்; இறுமாப்பு போன்ற பிறகுற்றங்களையும் அழிப்பவள்; தேனினிய கானமிசைக்கும் வரமருளும் கங்கை; எனது உள்ளத்துன்பத்தையும் உடல் நோயையும் அழிப்பவள். 810

உள்ளவேகத்தைத் தணிப்பவள்; இவுள்ளத்தில் வேகத்துடன் பாய்பவள்; உள்ளச் சிறுமையை நீக்கும் கங்கை; உள்ளத்தைப் பண்படுத்திக் காப்பவள். 811

மந்தாகினீ; எனது இன்பமானவள்; நற்பேற்றுக்குறைவினை நீக்குபவள்; உள்ள அமைதி அளிக்கும் கங்கை; இவ்வுள்ளக் கோயிலில் தெய்வமானவள். 812

மிகவும் அதிகாலையில் த்யானிக்கப்பட்டவள்; பேரமைதியில் நன்கொலிப்பவள்; மிகவும் அதிகாலையில் தன்னில் நன்னீராடிக் கரையில் த்யானம் செய்து கானமிசைக்கும் வரமருள்பவள். 813

பெருந்தொலைவில் ஓடுபவள் / பெருந்தொலைவு ஓடுபவள்; இவ்வுள்ளத்தில் வெகு அருகே இருப்பவள்; உள்ளத்திலும் இவ்வாக்கினுலும் அர்ச்சிக்கப்பட்ட அன்னை; உள்ளச் சூழலைத் தூய்மைப் படுத்துபவள். 814

உள்ளச்சுழற்சியைத் தடைசெய்பவள்; உள்ள வானை நிறைப்பவள்; உள்ள அமைதியும் தெளிவும் அருள்பவள்; உள்ளமாம் இமயத்தில் ப்ரவஹிப்பவள். 815

உள்ளத்து மந்த்ர ஒலியான கங்கை; உள்ளத்து மந்த்ர உருவானவள்; உள்ளத்து இசையின் லயமான கங்கை / உள்ளத்து இசையில் இசைந்தவள்; உள்ளத்து இன்னிசை இறைவியானவள். 816

உள்ளத்தில் நேரில் காணப்பட்ட கங்கை; இவ்வுள்ளத்தில் உள்ள இறைவியானவள்; இவ்வுள்ள அனுபவத்தைக் குறிக்கும் இவ்வாக்கின் உட்பொருளானவள்; உள்ள ஒருமைப்பாடளிப்பவள். 817

இவ்வுள்ள வானில் அன்னை கங்கை; இவ்வுளமாம் கோமுகத்தினின்று பாய்ந்தோடுபவள்; இவ்வுள்ள கங்கோத்தரியில் நடம் புரிபவள்; இவ்வுள்ளக் கோயிலில் பூஜிக்கப்பட்டவள். 818

இவ்வுள்ள வெளியில் பொன்னொளியானவள்; இவ்வுள்ளத்து இசை அருவியாய்ப் பொழிபவள்; உள்ளத்தைத் தெளிவிக்கும் கங்கை; தெளிந்த உள்ளத்தில் ஒளிர்பவள். 819

இவ்வுள்ள மலையில் மெய்ப்பொழிவானவள்; இவ்வுள்ளத்திலுதித்த இவ்வாக்கே தன் உருவாகக் கொண்டவள்; எண்ணங்களால் துதிக்கப்பட்ட என் அன்னை; இவ்வுள்ளத்திலும் வாக்கிலும் நிலைத்திட்டவள். 820

உள்ளுயிர்ப்பால் துதிக்கப்பட்ட கங்கை; இவ்வெண்ண மயமான என் அன்னே; உள்ளத்தில் 'ஓம்'காரத்தை ஒலிப்பவள்/'ஓம்'கார ஒலியானவள்; இவ்வுள்ளத்தில் ஒன்றிட்ட அருமை கங்கை. 821

இவ்வுள்ளமலேயில் பெருக்கெடுத்து ஓடுபவள்; உள்ளமாம் புனிதத்தலத்தில் நிலேத்திருப்பவள்; இவ்வெண்ணங்களின் பெருக்கானவள் /
இவ்வெண்ணங்களேப் பெருக்கிடச் செய்பவள்; தான் செல்லுமிடங்களேப் புனிதமாக்கி இவ்வுள்ளத்தில் ஒருங்கிணேபவள். 822

இவ்வுள்ளக்கடலில் கலந்திட்டவள்; உள்ளக்கரையில் துதிக்கப்பட்டவள்; உள்ளத்தின் ஆழத்தில் த்யானிக்கப்பட்டவள்; இவ்வெண்ணங்களில் கலந்த அன்னே; ஒப்பாரும் மிக்காரும் அற்றவள். 823

உள்ளக்குகையினின்றிழிந்தோடும் கங்கை; உள்ள அரங்கில் பளிச்சிட்டுப் புன்னகைப்பவள்; உள்ள ஆழத்தில் அடிக்கடி நீராடப்பட்டவள்; உள்ள அமைதியும் லய ஒருமைப்பாடுமளிப்பவள். 824

உள்ளப்புலரியில் எழிலுற ஒளிர்பவள்; உள்ள மாலேப்பொழுதினே அமைதியாக்குபவள்; இவ்வெண்ணங்களின் ஸாரமான கங்கை; உள்ளத்தில் இன்பம் பெருக்கிடச் செய்பவள்/இன்பப்பெருக்காய் ஓடுபவள். 825

இவ்வுள்ளமெனும் மலரரியணேயில் வீற்றிருப்பவள்; இவ்வெண்ண மலர்களின் தேனமுதானவள்; உள்ள மலரால் அர்ச்சிக்கப்பட்ட கங்கை; உள்ளமெனும் மலர்க்கோயிலில் புன்னகைப்பவள். 826

இவ்வுள்ளமலரின் நறுமணமானவள்; என் உள்ளச்சூழலில் கோயில் கொண்டவள்; மனமலர் அர்ச்சனேயில் உகப்பவள்; இவ்வெண்ண மலர்கள் பொழிந்து வணங்கப்பட்டவள். 827

இவ்வுள்ளத்தில் நன்கு காணப்பட்ட கங்கை; உள்ள அமைதியில் நன்கொலிப்பவள்; உள்ளத்தில் எப்போதும் எண்ணப்பட்ட அன்னே; உள்ளத்தில் ஒன்றி இன்புறச்செய்பவள். 828

இவ்வுள்ளத்தின் பண்ணுனவள்; இவ்வுள்ளத்தின் பாட்டானவள்; என் இன்பத் தோட்டமானவள்; இவ்வெண்ணங்களாக ஓடுபவள் / இவ்வெண்ணங்களின் இசையானவள்; என் முழுமை அன்புடன் துதிக்கப்பட்ட கங்கை; களிப்பும் ஆற்றலும் அளிப்பவள். 829

உள்ளத்தில்/எண்ணங்களால் ஆராதிக்கப்பட்ட கங்கை; இவ்வெண்ணங்களாகப் பெருக்கெடுத்தோடி எதிரொலிப்பவள்; இவ்வுள்ளத்தில் வாக்கெனும் மழையாகப் பொழிபவள்; இவ்வுள்ளத் தோட்டத்தில் களித்திடும் களிப்பானவள். 830

இவ்வுள்ளக்கண்ணாடியில் பிம்பமானவள்; கிழக்கே சூரிய ஒளியில் கண்ணாடியென மின்னுபவள்; இவ்வுள்ளத்தில் களிநடம் புரிந்து ஒளிர்பவள்; உள்ளத்தில் பளிச்சிடும் மெய்யுணர்வின் ஸாரமானவள். 831

ஆதவன் உதயமாகும்போது ஒளிவீசுபவள்; பொய்மை, மெய்மையை விளக்குபவள்; ஸூர்யோதயத்தில் அமிழ்ந்து நீராடப்பட வேண்டியவள்; பனியே ஆன புனித நீர் கொண்டவள். 832

வீட்டுப்பேறு விழைவோரால் அடையப்படும் புனித நீரானவள்; வீட்டுப்பேறெனும் நன்னிலை நல்குபவள்; முனிவர், நல்லோரால் நன்கு துதிக்கப்பட்டவள்; முனிவர் வாக்கிலும் உள்ளத்திலும் உள்ளவள். 833

வாக்குத்திறனற்ற இவளது வாக்கினால் நன்கு துதிக்கப்பட்ட கங்கை; வாக்குத்திறனற்ற இவளுக்கு நல்வாக்கெனும் வரமளிப்பவள்; மூலாதாரத்தில் உறையும் தேவி; மூலாதாரத்தினின்று நன்கொலிப்பவள். 834

மெல்லினிய ஒலியில் பாடப்பட்டவள்; மென்மையான இசையின் இனிய ஒலியானவள்; மென்மையாகத் தொடுகையில் புல்லரிக்கச்செய்பவள்; மெல்லினிய ஒலியினால் மகிழ்விப்பவள். 835

முகிற்கருமை ப்ரதிபலிக்கும் மேற்பரப்புடையவள்; முகில் முழக்கமென கம்பீரமாய் ஒலிப்பவள்; மின்னலென ஒளிர்பவள்; அறிவொளியை வளர்ப்பவள். 836

வால்மீகியால் புகழப்பட்டவள்; வீட்டுப்பேறடையும் நல்வழி காட்டுபவள்; முத்து மாலைகள் போன்ற அலைகள் கொண்டவள்; அமைதியான உள்ளத்தில் உறைபவள். 837

மௌன அமைதியில் உள்ளாழ்ந்து துதிக்கப்பட்ட கங்கை; மௌனப்பனிமலையில் பேரொலி செய்பவள்; மௌன த்யானத்திலாழ்ந்த உள்ளத்து இசையானவள்; மனதை மௌனப்படுத்தி ஓங்கி ஒலிப்பவள். 838

மௌனத்திற்கு ஆதாரஸ்ருதியான கங்கை; மௌனமாய் உள்ளாழ்ந்து ஒன்றிய உள்ளத்தில் ப்ரவஹிப்பவள்; மௌனப் பனிமலையில் முழங்கும் நீர்வீழ்ச்சியானவள்; மௌனத்தில் ஒலிக்கும் முகில் முழக்கமானவள். 839

கட்டுப்பாடுடைய உள்ளத்தில்/உள்ளத்துடன் பூஜிக்கப்படவேண்டியவள் / கட்டுப்பாட்டுடைய உள்ளத்தில் பூஜிக்கப்படுபவள்; சிறந்த துறவிகளால் புகழப்படும் மேலானவள்; நல்லோரின் குறைகளை விலகச்செய்பவள்; யாத்திரையை நிறைவு பெறச்செய்பவள். 840

சென்றுகொண்டே இருக்கும் கங்கை; எழிற்போக்குடையவள்; தன்னில் ஒன்றிய இவ்வுள்ளத்தில் ஒன்றியவள்; விரைவான அமுதவாக்காய்ப் பொழிபவள்/பொழியச்செய்பவள்; யோகினியின் வாக்கின் அமைதியில் ஒன்றியவள். 841

யோகஸாரமான ப்ரணவம் ஒலிக்கும் நீர்வீழ்ச்சியானவள்; யோகமாம் ஸங்கீதத்தில் இசைலயமானவள்/ இசையில் ஒன்றியவள்/ இசையின் அமைதியானவள்; யோகத்தில் வழிநடத்துபவள்; யோக தத்துவத்தின் உட்பொருளானவள்/ உட்பொருளை விளக்குபவள்; யோகினீ; யோகத்தில் ஒன்றும் இவ்வுள்ளத்தில் ஒன்றியவள். 842

இனிய இசையில் வாக்காகப் பொழிபவள் / இவ்வினிய இசையின் வாக்பொழிவானவள்; இனிய ஸங்கதிகளும் வாக்குமே போக்காகக் கொண்டவள்; உணர்ச்சி நிறைந்த இவ்வாக்கின் ஸாரமான நன்னீரோட்டமானவள்; இச்செய்யுளை ரஸிப்பவள்; தனது இந்த ரஸிகையைக் காப்பவள். 843

பண்ணெழிற்பனிமலையினின்றிழிந்தோடும் இவ்வாக்குப் பொழிவு ஆனவள்; இவ்விசைவாக்கின் நல்லுருவானவள்; பண்மலையின் எழிலுணர்வு எனும் உச்சியிலிருப்பவள்; வண்ண எழிலுடை கங்கை; ராகத்தின் எழில் தேவதையானவள். 844

தர்மமாகிய செல்வமும் மோக்ஷமும் அடையச்செய்பவள்; அழுக்குகளையும் பாபங்களையும் அடித்துச்செல்லும் நீரோட்டமானவள்; மிக்க எழிலுடை வண்ண நீரோட்டமானவள்; இவ்வாக்கின் ஓட்டமாய்ப் பெருக்கெடுப்பவள். 845

பொன்னொளிர் எழிலுடை கங்கை; தன் எழிலிலுதித்த இவ்வுள்ளுயிர்ப்பாய் ஓடுபவள்; நோயின் காரணத்தைத் தகர்ப்பவள்; ஶிவனின் சென்னியைக் குளிர்விப்பவள். 846

வடிவெழில், தூய நற்பண்பு எனும் தனிச்சிறப்புடையவள்; வேரூன்றிய அன்புடன்/இவ்வன்பு மலர்களால் பூஜிக்கப்பட்டவள்; வெள்ளிக்கோடாம் அழகிய நீரோட்டம் கொண்டவள்; வளம் செறிந்த இமயமலையின் அருமைப்புதல்வி. 847

எழில் நிறைந்தவள்; இவ்வுள்ள ஒளியானவள்; மலைச்சரிவிலுள்ள நதியானவள்; பிணியை ஒழிப்பவள்; மயிர்க்கூச்சுண்டு பண்ணும் நீர் வெள்ளமானவள்; சினம் முதலிய பகைவர்களை அழிப்பவள். 848

இனிய, உப்புச்சுவையற்ற நீர் வெள்ளமானவள்; உருண்டு புரண்டோடும் அலையழகு கொண்டவள்; இவ்வுள்ளத்தின் நோக்கான அமைதி அளிக்கும் நீர் கொண்டவள்; உள்ளில் ஒன்றிடச்செய்யும் லயத்துடன் ப்ரவஹிப்பவள். 849

ஆழ்ந்து நீராடும் இப்புதல்வியைத் தாலாட்டி மகிழ்வூட்டுபவள்; இவ்வெளிய ஸ்லோகங்களால் அணி செய்யப்பட்டவள்; இவ்வுள்ள ஏக்க விருப்பை நிறைவேற்றுபவள்; நீரோட்டத்தின் விரைவே பெயராகக் கொண்டவள். 850

எழுத்துக்கப்பாற்பட்ட சிறப்புடையவள்; எழுதப்பட்ட இந்த ஸ்லோகங்களின் தேவதையானவள்; தன்னில் ஒன்றிய இவ்வுள்ளத்தில் ஒன்றியவள்; விளையாடும் அலைகள் நிறைந்தவள். 851

(தன்னால்) உருட்டிப்புரட்டித் தள்ளப்பட்ட பாறைகளின்மீதோடுபவள்; உள்ள உலைச்சலின் துன்பத்தைத் தணிப்பவள்; அசைந்தாடும் அலைகளுடன் அழகு கொஞ்சுபவள்; இவ்வன்பு மலர்களால் அர்ச்சிக்கப்பட்டவள். 852

எழுதுவதற்கியலாத இயல்புடையவள்; இவ்வெழுத்துக்களின் உருவாய் இருப்பவள்; எழுதப்பட வேண்டியவள்; இவ்வெழுத்தில் பெருக்கெடுத்தோடுபவள்; ஒளி நடம் பளிச்சிடும் உளங்கவர் எழிலோள். 853

உலகைக்காக்க வந்த கங்கை; வானுலகினள்; அன்னை; இவ்வுலகிலுள்ள தூயவள்; உலகியற்கப்பாற்பட்ட இயல்பினள்; உலகியற்கப்பாற்பட்ட இன்பம் பயப்பவள். 854

காட்டில் மகிழ்பவள் / காட்டின் மகிழ்வானவள்; அழகின் இருப்பிடமானவள்; நன்னீர் நிறைந்தவள்; பூஜிக்கும் இந்த பக்தையிடம் அன்புகொண்டவள் / பூஜிக்கும் இவளுக்கு மிகவும் பிரியமானவள்; பனிமலைகளைச் சுற்றுச் சுவர்களாகக் கொண்ட கங்கை; மிகவும் சிறந்தவள்; வஸுக்களின் தாயானவள். 855

வாக்குச்செல்வமருள்பவள்; தனதருளால் மலர்ந்த இவ்வாக்கில் ஒளிர்பவள்; இவ்வாக்கெனும் மலர்களால் அர்ச்சிக்கப்பட்ட வாக்தேவி; இச்சொல் விளக்குகளின் வரிசையில் ஒளிர்பவள். 856

இவ்வாக்குப் பொழிவால் ஆராதிக்கப்பட்ட கங்கை; இவ்வாக்கு மழையின் வண்ணமாக/எழுத்துக்களாக ஒளிர்பவள்; வாக்குத்திறமை அருளும் தேவி; இவ்வாக்கில் மிகவும் உவக்கும் அன்னை. 857

இவ்வாக்கின் சொற்பொருள் உணர்ச்சிச்செறிவானவள்; இவ்வாக்கில் உள்ளார்ந்த உணர்வுடன் போற்றப்பட்டவள்; இவ்வாக்கு மண்டலத்தால் சூழப்பட்ட கங்கை; வாக்கே ஆனவள்; இவ்வாக்கிற்கு நல்லுயிர் ஊட்டுபவள். 858

வானப்ரஸ்தரால் அடையப்பட்ட கங்கை; கர்மப் பொறிப்புக்களை அழித்திடுபவள்; வாக்கினுல் விவரிக்க இயலா நீரோட்டமானவள்; இவ்வாக்கில் முழுமையாய் நிரம்பி ஓடுபவள். 859

உள்ளக் குழப்பத்தைக் கழுவிடும் கங்கை; இப்பிறவிப் பெருங்காட்டினைக் கடந்திடச்செய்பவள்; பாபத்திறள்களைப் பறந்திடச்செய்பவள்; கடலே எனும்படி பரந்த நீர்ப் பரப்புடையவள். 860

மேலெழும்பிக் குதித்துப் பறக்கும் அலைகளால் களிப்பூட்டுபவள்; தூய்மையூட்டும் நீரின் போக்கினுல் மகிழ்வூட்டுபவள்; பற்றற்ற இவ்வுள்ளத்தின் பற்றுனவள் / பற்றற்ற இவ்வுள்ளத்துப் பண்ணுனவள்; வீணை இசையின் லயத்தில் இருப்பவள். 861

பெரியோர்களால் அடையப்படுபவள்; பெரியோர்களால் வணங்கப்பட்டவள்; பெரியோரை நன்கு காப்பவள்; மிகவும் உயர்ந்தவள்; பனி முற்றத்தில் இருப்பவள். 862

வேதவேதாந்தங்களின் நற்பொருளானவள்; வேதங்களால் புகழப்படுபவனுல் புகழப்பட்டவள்; வேதங்களால் அறியப்படுபவனைப் பற்றிய மெய்யறிவை அளிப்பவள்; வேதாந்தத்தால் அறியப்படுபவனுேடொன்றியவள். 863

உளத்துன்பத்தைப் போக்கிடும் கங்கை; பலவகை எழில்வடிவு கொண்டவள்; மாலையில் அமைதியான மென்னுெளி கொண்டவள்; குற்றங்குறைகள் மலிந்த இத்துதியால் துதிக்கப்பட்டவள். 864

முழுமையின் வெளிப்படை வடிவானவள்; இவ்வாயிரம் ஶ்லோகங்களை ஊடுருவிப்பரவும் ஒளியானவள்; வானுலக கங்கை; இத்துதியாகப்

பொழிபவள்; இவ்வன்புப் புதல்வியின் இத்துதியில்/காட்சியில் ஒளிர்பவள். 865

நூற்றுக்கணக்கான சூரியர்களின் ஒளி கொண்டவள்; நூற்றுக்கணக்கான நிலவுகளின் கதிர்கள்போல் தண்மை செய்பவள்; நூற்றுக்கணக்கான வானவில்களின் வண்ண எழில் கொண்டவள்; நூறு கோடி மின்னல்களின் ஒளி படைத்தவள். 866

பலவகைப்பட்ட தோற்றச்சிறப்புடையவள்; நூற்றுக்கணக்கான துதிகள் கொண்டவள்; நூற்றுக்கணக்கான ராகங்களில் எழில் மாலை அணிந்தவள்; இந்த ஶ்லோகங்களின் போக்கான கங்கை; நூற்றுக்கணக்கான ரத்னங்களின் ஒளியெனப் பளிச்சிடுபவள். 867

பல ராகங்களில் இனிது பாடப்பட்டவள்; இந்த ஶ்லோகங்களின் ராக தேவதையானவள் / இம்மிகப்பல ஶ்லோகங்களில் மிகவும் மகிழ்பவள்; பற்பல திருநாமச் சிறப்புடையவள் / இப்பற்பல திருநாமங்களின் சிறப்பானவள்; பல வண்ணங்களில் ஒளிர்பவள். 868

இந்த ஶ்லோகங்களின் இனிய பண்ணானவள்; பற்பல ராகங்களில் உள்ள க்ருதிகளில் ஒளிர்பவள்; பற்பல முறைகள் வணங்கப்பட்டவள்; நீண்ட ஆயுளும் மங்களமும் அருள்பவள். 869

நூறு கோடித் துதிகளால் துதிக்கப்படவேண்டியவள்; கவிதை ஆற்றல் அருள்பவள்; தனது கவித்திறனாலேயே துதிக்கப்பட்டவள்; ஶிவனின் சென்னியில் மாலையானவள் / ஶிவன் உறையும் இமயக்கொடுமுடியின் மாலையானவள்; ஶக்தியே வடிவான நதி. 870

ஆற்றலுக்கும் ஒளிக்கும் இருப்பிடமான கங்கை; கவி ஆற்றலின் உச்சியிலிருப்பவள்; ஆற்றல், அறிவு, விருப்பு, தவம் இவற்றை வளர்ப்பவள்; மூவகை ஆற்றலாக வெளிப்படுபவள் (விருப்பு, செயல், அறிவு). 871

பொன்னெனச் சுடர்விட்டொளிர்பவள்; அமைதியான உள்ளத்தில் துதிக்கப்பட்டவள்; குரலாற்றல் அருளிடும் கங்கை; நிலைத்த இன்பம் அருள்பவள். 872

நீர் வடிவமானவள்; ஶிவனின் சென்னியினின்று ப்ரவஹிப்பவள்; வேதங்களின் வடிவானவள்; நற்கதி அடையச் செய்பவள்; நலந்தரும் மங்கலவடிவான கங்கை; ஶிவனை அபிஷேகிக்கும் நன்னீரானவள். 873

விரைந்தோடும் பனி நீர் கங்கை; தண்ணிலவு மின்னும் நீர் கொண்டவள்; ஶிவன்/விஷ்ணுவிடமிருந்து பெருக்கெடுத்தோடும் திவ்யமானவள்; அடிக்கடி செல்லப்பட்ட தண்ணிய நதியானவள். 874

முத்தென அலைகள் வெண்மையாய் ஒளிர்பவள்; மங்கலமே அடையாளமாகக்கொண்ட தூய நதியானவள்; தூய வெண்மை ஒளிர்பவள்; ஸ்பர்ஶமே மங்களமானவள்; வெறுமையான உள்ளத்தை நிறைப்பவள். 875

வெறுமையை நீக்கிடும் கங்கை; உயர்ந்த பனிச்சிகரத்து நதியானவள்; உச்சியினின்று தூய பனியாய் ப்ரவஹிப்பவள்; மலையரசனும் இமயத்தினின்று பனியாய் ஓடும் மெய்வெள்ளமானவள். 876

வருத்தம், துன்பம், அச்சம் இவற்றினின்று காப்பவள்; தன்னை அடைந்தவர் உள்ளத்தைத் தூய்மைப் படுத்துபவள்; எழிலொளிர் ஏழிசை ஒலிகளால் பாடப்பட்டவள்; எழிலொளிர்பவள்; ஏழிசை ஒலிவடிவானவள். 877

பெருக்கெடுத்தோடும் அமுத வெள்ளமானவள்; கருநீலக் கண்ணனின் திருவடித் தீர்த்தமானவள்; முகில்வண்ணம் ப்ரதிபலிக்கும் ஆழ்நீலப் பரப்புடையவள்; அடர்வண்ண யமுனையால் இணையப்பட்ட ப்ரயாகையின் ஒளியானவள். 878

நம்பிக்கையுடைய இந்த பக்தைக்குப் புகலிடமான கங்கை; தன்னை அடைந்தவர் கர்மத்தளைகளைத் தளர்த்தி விடுவிப்பவள்; சேர்த்துக் கோக்கப்பட்ட இந்த ஶ்லோக மலர் மாலைகளால் நிறைய அணிசெயப்பட்ட எழில் வடிவானவள். 879

களைப்பைத் தணிப்பதில் இணையற்றவள்; செவிக்கினிய நல்லின்பம் நல்கும் ஒலியினள்; தன்னை அடைந்தோர்க்கின்பம் நல்கும் கங்கை; தன்னை அடைந்தோரை அளித்துக் காப்பவள். 880

ஸ்ரீசக்ரத்தில் உறையும் தேவி; மங்கள அன்னை; மங்களம் அளிப்பவள்; ஸ்ரீசக்ரத்தில் துதிக்கப்பட்ட வாக்குக்கிறைவி; ஸ்ரீமந்த்ரத்தின் ஸார உருவானவள். 881

பதினாறு எழுத்துக்கள் கொண்ட மங்கள வித்தையே ஆனவள்; மங்கள எழில் வடிவினள்; பலவகை உருவினள்; மங்களம் செய்பவள்; மங்களத்தைத் தன்னுள் கொண்ட அன்னை; திருமகள் தலைவனின் இன்புடன் கூடிய வாக்கில் இருப்பவள். 882

‘ஓம்’கார ஶ்ருதியோடிணைந்த இன்னிசை ஒலி இன்பமானவள்; திருநாமத்தைக் கேட்ட மாத்திரத்தில் இன்பப் புல்லரிப்பூட்டுபவள்; ஶ்ருதி தாளப் பெருக்கானவள்; ஶ்ருதியுடனிணைந்த இத்துதியில் மகிழ்பவள். 883

மிகுந்த சிறப்பும் இன்பமும் மங்கலமும் நல்குபவள்; செவிக்கினிய இசையில் ஒன்றியவள்; செவிக்கமுதான மங்கலத் திருப்பெயருடையவள்; அழகிய, பூஜைக்குரிய நீர்ப்பெருக்கானவள். 884

புகழப்படவேண்டியவள்; இந்த ஶ்லோகங்களின் போக்கில் எதிரொலிப்பவள்; இந்த ஶ்லோகங்களில் துதித்துப்பாடப்பட்ட சிறப்புடையவள்; இந்த ஶ்லோகங்களின் ஸாராம்ஶமாய் ஸேவிக்கப்பட வேண்டியவள்; இந்த ஶ்லோகங்களின் ஸத்ஸாரமாய் ஓடுபவள். 885

உள்ளிழுக்கும் மூச்சுக்காற்றைத் தூயதாக்குபவள்; உள்ளத்தை உலைவற்று அமைதியுறச் செய்பவள் / உலைவற்ற அமைதியான உள்ளத்தில் உறைபவள்; வெள்ளிப் பனிமலையில் எழிலொளிர்பவள்; வெண்முத்துக்கள் பளிச்சிட்டுச் சிரிக்கும் எழில் தோற்றம் கொண்டவள். 886

வெண்பனிமூட்டத்தால் சூழப்பட்ட கங்கை; பனியாடையில் பளபளப்பவள்; வெண்முத்துக்கள்போல் பளிச்சிடும் நீரொட்டமானவள்; இத்தூய உள்ளத்தில் உறைபவள். 887

இவ்வுள்ளப்பனிமலையில் ஓடுபவள்; வெள்ளிப் பனிமலையின் எழிற்காட்சியானவள்; வெண்பனிமலர்களால்/வெண் மல்லிகை மலர்களால் அர்ச்சிக்கப்பட்ட கங்கை; இத்தூய எண்ணங்களால் அர்ச்சிக்கப்பட்டவள். 888

ஷட்ஜமாம் ஆதாரஶ்ருதியை ஒலிக்கும் கங்கை; ஷாடவ, ஔடவ முதலானராகங்களின் தேவதையானவள்; பதினாறு எழுத்துக்கள் கொண்ட மந்த்ரத்தின் ஸாரமான மெய்ப்பெருக்கானவள்; பதினாறு எழுத்துக்கள் கொண்ட மந்த்ர வடிவானவள். 889

ஸங்கீதத்தால் உபாஸிக்கப்பட்ட கங்கை; இன்னிசை, வாத்யங்களில் மகிழ்பவள்; நன்கு பாடப்பட்டவள்; பாட்டின் இன்பத்தோடு கூடியவள்; இசை வாக்கே வடிவானவள். 890

நற்றுணையானவள்; மெய்யில் ஒன்றிடச்செய்பவள்; மெய்யின் மெய்வடிவானவள்; மெய்யே ஆன கங்கை; எனது மெய்யன்பிற்குரியவள்; மெய்ப்பற்றினை வளர்ப்பவள். 891

ஸம்ஸாரத்தைக் கடக்கச்செய்திடும் கங்கை; ஸம்ஸாரவலையினைக் கிழித்தெறிபவள்; ஸம்ஸாரமாகிய கொடிய காட்டின் அச்சத்தை அழித்து உடன் செல்பவள். 892

இவ்வுள்ளத்தில்/இவ்வெண்ணங்களில் எப்போதும் உறைபவள்; நிலைபேரின்பமே தன் வடிவானவள்; என்றும் மங்கலமான கங்கை; எப்பொழுதும் உள்ளுள் உணர்ந்த அனுபவத்திஞல் துதிக்கப்பட்டவள். 893

எப்பொழுதும் சென்றுகொண்டே இருக்கும் கங்கை; நிலையானவள்; எப்பொழுதும் அலையும் மனதை நிலைப்படுத்துபவள்; எப்பொழுதும் நிறைந்துள்ளவள்; இவ்வுள்ளத்தில் நிறைந்திருப்பவள்; என்றும் ஆத்ம இன்ப நிறைவை அளிப்பவள் / நிலைத்த ஆத்ம இன்பமாம் அமுதநீர் கொண்டவள். 894

எப்பொழுதும் நாதலயத்துடன் ஓடுபவள்; எப்பொழுதும் உள்ளுள் மங்களமாய் ஒலிப்பவள்; எப்பொழுதும் ஆத்மாவுடன் ஒன்றிடச் செய்யும் நன்னீரோட்டமானவள்; எப்பொழுதும் உள்ளுள் நீடமைதி பெறச்செய்பவள். 895

இயல்பான இந்தத் துதிஶ்லோகங்களை உடையவள்/ஶ்லோகங்களில் இருப்பவள்/ஶ்லோகங்களாக இருப்பவள்; கடலுக்கருகில் துதிக்கப்பட்டவள்; ஸாஹித்யத்திலும் ஸ்வரத்திலும் ஒன்றியவள்; ஸத்துவம் நிறைந்தவள்; இத்தூய எண்ணங்களில் உள்ளவள்/ ஸாதுக்களின் உள்ளத்தில் உள்ளவள். 896

வெண்ணிலவு புன்னகைக்கும் பால் வெள்ளமானவள்; வெள்ளிப் பனிமலையின் வெள்ளி ஒளியானவள்; வெள்ளிப்பனிமலையின் எழிற்புதல்வியானவள்; குங்குமத்தால் பூஜிக்கப்பட்டவள்; வெல்லப்படாதவள். 897

ஸீதையால் பூஜிக்கப்பட்ட முழுமையானவள்; ஸீதாராமனின் திருவடிவெள்ளமானவள் (தேவப்ரயாகை); ஸீதாராமனை இனிது பாடிய ஸ்ரீத்யாகப்ரம்மத்தின் க்ருதிகளில் பெருக்கெடுத்தோடுபவள். 898

மங்களமளிக்கும் எழிலுறு கங்கை; நல் விரதமாகப் பூஜித்துத் துதிக்கப்பட்டவள்; நல்வரவேற்கும் நற்பெயருடையவள்; இனிய இசை ஒலியின் இன்பச்சாறும் அமுதானவள். 899

இன்பத்தின் இருப்பிடமான தேவநதி; ப்ரணவச்சாருன இன்னெலி கொண்டவள்; நல்மங்கலமருளும் கங்கை; தன் இனிய நாதத்தால் அமைதி தருபவள். 900

அமுதப்பொழிவாம் இன்னிசை பொழிபவள்; இனிமையே நீரோட்டமானவள்; மங்களமானவள், வேண்டும் வரமளிப்பவள் / மங்கல வரமளித்துக்காப்பவள்; இமயத்தில் மங்களமாய் உறைபவள். 901

(தன்னுல்) நன்கு சொல்லப்பட்ட இந்த ஶ்லோகங்களால் துதிக்கப்பட்ட கங்கை; நுண்ணிய உருவில் இவ்வுள்ளத்தில் ஸஞ்சரிப்பவள்; இந்நுண்ணிய எண்ணமலர்களே தன் பூஜாவிக்ரஹமானவள் / நுண்ணிய உணர்வுகொண்ட புஷ்பாவினுல் அர்ச்சிக்கப்பட்டவள் / மெல்லிய இவ்வெண்ணமலர்களால் அர்ச்சிக்கப்பட்டவள்; நுண்ணுணர்வுடன் இவ்வுள்ளத்தில் நினேக்கப்பட்டவள். 902

கதிரவன் உதிக்குமுன் உள்ளாழ்ந்து த்யானிக்கப்பட்டவள்; ஆதவன் உதயத்தில் பொன்மயமானவள்; பகலவன் உதயத்தில் மங்கல நீராடப்பட்டவள்; ஸூர்யோதயத்தின் இன்னிசை லயமானவள். 903

தன்னில் நீராடலில் ஆதவன் வெம்மையைத் தணிப்பவள்; அந்தியில் அமைதியின் உறைவிடமானவள்; ஆதவன் கதிர்களில் பளபளக்கும் ஒளியுடையவள்; ஆதவன் மறையுங்கால் பலவண்ண எழில்பரப்புபவள். 904

காலேக்கதிரவனெளியில் பொன் வெள்ளியாய் மின்னுபவள்; பகலவன் ஒளியில் மின்னும் வெள்ளியானவள்; ஆதவன் மறையுமுன் ஒளிநிழல் நடனத்தில் ஒளிர்பவள்; கதிரவன் மறையும்பொழுது நீலப்பொன்னெளி மின்னுபவள். 905

நிலவின் உதயத்தின் பொன்னெளிர்பவள்; ஆறுவடிவிலுள்ள சிறந்த அன்னே; ஸேவிக்கப்படவேண்டிய அன்னே; ஸேவிக்கும் இவ்வுள்ளத்தின் மகிழ்வானவள்; தான் வஸிக்கும் இந்த ஶ்லோகங்களால் ஸேவிக்கப்பட்டவள். 906

மணற்பரப்பில் அமைதியாகச் செல்பவள்; மணற்கரையுடன் அமைதியின் உறைவிடமானவள்; மணற்கரையில் த்யானிக்கப்பட்ட அமைதியே ஆனவள்; மணற்பாங்குடை இடத்தில் கண்ணுடிபோல் மேற்பரப்புடையவள். 907

'அவனே நான்' என்ற உணர்வில் ஆழ்ந்து த்யானிக்கப்பட்டவள்; 'அவனே நான்' என்ற ஆத்மலயம் செய்பவள்; 'அவனே நான்' என்ற உணர்வில்

ஒன்றிப் பாடப்பட்டவள்; ‘அவனே நான்’ எனும் நாதப்பெருக்கானவள். 908

நல்மங்கலம் பெறச் செய்யும் கங்கை; நல்மங்கல தேவதையானவள்; நிகரற்றவள்; ஒளிபடைத்தவள்; மங்கலப் பண்புகள் நிறைந்த கங்கை; பொன்மயமான மேருமலையிலுள்ள மேலான அன்னை. 909

இத்துதித் தொகுப்புகள் கொண்டவள்; இத்துதிகளின் உள்ளுயிர்ப்பானவள்; துதிக்கப்பாற்பட்ட சிறப்புடன் ஒளிர்பவள்; தான் ஓடும் தலங்களின் புண்யச்சிறப்பானவள்; உள்ளுயிர்ப்பாய் வெடித்து மலர்ந்த இந்த ஶ்லோகமலர்களால் அர்ச்சிக்கப்பட்டவள். 910

நிலைத்த பக்தியுடையவருடன் என்றும் இருப்பவள்; நிலைத்த நம்பிக்கையுடன் வணங்கப்பட்டவள்; (தன்னில்) நிலைத்த இவ்வுள்ளத்தில் நிலைத்துள்ள கங்கை; நிலைத்த மெய்யின்ப வழி நடத்துபவள். 911

தன்னில் நீராடலும் நன்னீர் பருகலும் மிகப்புண்யமானவள்; நல்லாசி கூறும் அலைக்கரங்களுடையவள்; உள்ளாழ்ந்து நீராடும் இப்புதல்வியை அணைத்துக் கொள்பவள்; மிக இனிய பனி நீரால் புல்லரிக்கச்செய்பவள். 912

வானுலக கங்கை; இன்னிசை கங்கை; மேலான இனிய நாதத்தின் அமுதச்சாறுன நீரோட்டமானவள்; இனிய ஸங்கீதமாகவும் ஸாஹித்யமாகவும் இருப்பவள்; இன்குரலாம் நற்பலனளிப்பவள். 913

தன் சிறப்பைத் தானே இந்த ஶ்லோகங்களில் பாடிக்கொண்டவள் (தன்னுலேயே பாடப்பட்ட சிறப்புடையவள்) ; இனிய ஏழிசை ஒலிகளின் இருப்பிடமானவள் / இனிய ஏழிசை ஒலிகளில் ஒன்றியவள்; தனதே ஆன இந்த ஶ்லோகங்களை ஏற்றுக்கொள்ளும் அன்னை; குருவானவள்; நல்மொழிகளால் ஆசீர்வதிப்பவள் / இந்த நல்மொழிகளே ஆனவள். 914

மேலான பரம்பொருளானவள்; பரம்பொருளில் ஒன்றிடச்செய்பவள்; பரம்பொருளின் மறை உண்மையை அறியச்செய்பவள்; ஹரிநாம அமுதவெள்ளமானவள்; மங்களமான ஹரியைக் காணச்செய்பவள். 915

சிரிக்கும் அலைகளுடன் புலகமூட்டுபவள்; தங்கப்பனிமலையினின்று ப்ரவஹிப்பவள்; தன்னுல் வெல்லப்பட்ட இவ்வன்பு இதயத்தில் உள்ளவள்; உளங்கவர்பவள்; கவி உள்ளத்தைக் கொள்ளை கொள்பவள். 916

பனித்தொகுதியினின்றுதித்தவள்; பனிமலைச் சரிவுகளில் ப்ரவஹிப்பவள்; பனியோட்டமான தூயவள்; பனிக்கோயிலிலுள்ள தேவநதியானவள். 917

பனிமலை நீர்ப்பொழிவானவள்; பனிப்பாறைகள் நிறைந்தவள்; பனித்தண்மையான நீர்கொண்டவள்; பனி உருகி ஓடுபவள். 918

நலஞ்செய்யும் நீரோட்டமானவள்; பனிமயமானவள்; நல்லறிவு புகட்டும் அன்னை; ஹிமாலயமெனும் புண்யஸ்தலத்திலுள்ள தெய்வீகமானவள்; ஹிமாலயத்தின் செல்வத்திருப் புதல்வி. 919

பனிமலையின் மாலையான கங்கை; எழில்மிகு அலைகள் நிரம்பியவள் (ஹிந்தோளராக எழில் நிரம்பியவள்); இமயத்தின் இசையானவள்; இமயத்தில் பாடப்பட்ட இந்த ஶ்லோகங்கள் கொண்டவள்; இமயத்து அமைதியில் இன்னிசைவெள்ளமானவள். 920

பனிமயமானவள், சென்றுகொண்டே இருப்பவள், நீர்வடிவான கங்கை / ஹிமாலயத்தினின்றுதித்த, என்றும் அழியாத கங்கை / இவ்வெழுத்துக்களாய் உள்ள, இமயத்துதித்த கங்கை; பனியின் தூய்மை மிக்க/பனிமலையுதித்த இவ்வெழுத்துக்களால் அணிசெய்யப்பட்டவள்; இப்பனிமலர் மாலைகளின் மணமானவள்; பனிநிலவுக் கதிரொளிரும் அமுதநீர் கொண்டவள். 921

வைர அலைமாலை பூண்ட கங்கை; வைர அலைகள் பளிச்சிடுபவள்; அன்னை லக்ஷ்மீ; வைரமாய் ஒளிரும் அன்னை; பகலவன், தண்மதிக்கதிர்களில் வைர ஒளி வீசி மின்னுபவள். 922

அழைக்கப்பட்ட அன்னை; இதயத்தில் இருக்கும் அன்னை; இவ்விதயத்தினுட்சென்றவள்; இவ்விதயத்தில் வசிப்பவள்; இவ்விதயத்தின் உள்ளுள் உண்மையின் பொழிவானவள்; இவ்விதயத்து உள்ளுறையும் தெய்வமானவள். 923

உள் முடிச்சுகளாம் வாஸனைகளைத் தகர்த்திடும் கங்கை; உள்ள வலுவின்மையை நீக்குபவள்; இதயத்துள் மலர்ந்த இந்த ஶ்லோகங்களில் உள்ளவள்; இவ்விதயத்திலுள்ள இன்னிசை தேவதையானவள். 924

இதய ஆழத்தினின்று இனிது பாடப்பட்டவள்; இதய ஆழத்தில் இனிய நாதமாய் ஒலிப்பவள்; இதயத்தில் ஒலிக்கும் நாதமான ப்ரணவ வடிவானவள்; இதயத்திலுள்ள ஸத்குரு உருவானவள். 925

இதயத்துள் ஓதவேண்டிய மந்த்ரத்தைக் கற்பிக்கும் கங்கை; இதய மந்த்ரத்து ஸத்துவமே உருவாகக் கொண்டவள்; இதயமந்த்ரமான 'ஓம்'கார நாதமானவள்; இதயத்தில் புலப்படும் மேலான தெய்வமான அன்னை. 926

மெய்சிலிர்க்கச் செய்யும் பனிமலை ஆறுனவள்; தன் பனிநீரில் அமிழ்ந்து நீராடுவோர் மயிர்கூச்செடுக்கும்படி செய்பவள்; உவகையிலுதித்த இத்துதிகள் கொண்டவள்; கழிபேருவகையில் இசைக்கப்பட்ட இத்துதிகளில் கோயில் கொண்டவள். 927

தங்கப்பனிமலையில் மங்களமாய்த் தோன்றியவள் / தங்கப்பனிமலையின் மங்கலச் சிறப்பானவள்; பனிநீரில் நீராடல் மகிழ்விப்பவள்; பனிமலை மின்னலானவள்; பொன்முடி இமயத்தில் ஒளிர்பவள். 928

பனிமலைத் தோன்றிய, பனியே ஆன கங்கை; பொன்னிறமானவள்; ஶிவனின் சென்னிமிசை இருப்பவள்; பொற்சிகர இமயத்தில் துதித்துப் பாடப்பட்டவள்; பொன்மய மேருவில் விளங்குபவள். 929

'ஹ்ரீம்'காரத்தின் இருப்பிடமான/'ஹ்ரீம்'காரத்தில் இருக்கும் அன்னை; தனித்த இப்பக்தையை மகிழ்விப்பவள்; இனிய 'ஓம்'கார நாதமாய் இருப்பவள்; இவ்வக்ஷரமாலையில் மகிழ்வுறுபவள். 930

அழியாத இந்த ஶ்லோக மாலையின் ஒளியானவள்; எழுத்துக்களின் முதலினின்று முடிவு வரை பூஜிக்கப்பட்டவள்; இவ்வண்ண மலர்மாலைகளின் மணமானவள்; இவ்வெழுத்துக்களால் துதிக்கப்பட்ட அன்னை. 931

## ஸ்ரீ கங்கா மானஸ பூஜை

இவ்வுள்ளத்தில்/இவ்வெண்ணங்களால் பூஜிக்கப்பட்ட கங்கை; இவ்வுள்ளத்தில்/இவ்வெண்ணங்களில் ஆழ்ந்து பாடப்பட்டவள்; உள்ள மந்த்ரத்தின் எழுத்துக்களாய்/ஒலியாய் உள்ள அன்னை; இவ்வுள்ளமாம் அழகிய மேருவில் கொயில் கொண்டவள். 932

இவ்விதயப்பீடத்தில் நன்கு நிலைத்துள்ள அன்னை; இவ்விதயமாம் மேருவில் நன்கு வஸிப்பவள்; இவ்விதய உள்ளுயிர்ப்பாம் மந்த்ரத்தின் பீஜமானவள்; இதயத்தில் (அனாஹத)நாதமாக வெளிப்படுபவள். 933

'ஹ்ரீம்'கார மந்த்ர வடிவான அன்னை; 'ஹ்ரீம்'கார மந்த்ரத்தால் பூஜிக்கப்பட்டவள்; 'ஹ்ரீம்'கார மந்த்ரத்தின் உட்பொருளானவள்; மந்த்ரத்தை உபதேஶிப்பவள்; நல்வழி நடத்துபவள். 934

ஸ்ரீவித்தையாம் ஸத்துவ வடிவானவள்; பொற்சிகரத்தில் விளங்குபவள்; மந்த்ர ஶக்தியின் பெருக்கான அன்னே; மாபெரும் ஸுமேருமலேயில் தனி விளங்குபவள். 935

பதினாறு எழுத்துக்கள் கொண்ட ஷோடஶீ மந்த்ரத்தால் பூஜிக்கப்பட்ட வாக்தேவி; ஸ்ரீவித்யா உருவானவள்; பதினாறு எழுத்துக்கள் கொண்ட மந்த்ரமே ஆனவள்; ஷோடஶீ ஜபத்தின் அக்ஷரங்களாக உள்ளவள்; மஹாமேருவில் வஸிப்பவள் / மஹாமேருமலேயில் வஸிப்பவள். 936

ரஸமேருவில் விளங்குபவள்; ரஸமேருவில் பூஜிக்கப்படுபவள்; பேரின்பஸாரவடிவானவள்; நாவுக்கினிமையான, பூமியில் அமிழ்-தானவள். 937

நேர்த்தியான நல்வாக்களிக்கும் அன்னே கங்கை; சுவையற்றதில் ஏற்படும் சுவையை நீக்குபவள்; எழில்வண்ணங்களில்/இனிய ராகங்களில் ஒளிநடம் புரிபவள்; மிகவும் அழகியவள்; பற்றற்றவள். 938

குருவை வணங்கிப் பாடப்பட்டவள்; குருவின் ஆஶீர்வாதத்துடன் நன்கு துதிக்கப்பட்டவள்; குருவின் ஸங்கீதமாம் ஸத்துவப் பொழிவானவள்; குருவின் பாட்டில் ஒன்றியவள். 939

நாதத்தின் உட்கருவாகவும் கலேயாகவும் முழுமையாகவும் இருப்பவள்; நாதோபாஸனேயில் நன்கு துதிக்கப்பட்டவள்; நாத ஸத்குருவின் மெய்வடிவானவள்; நாதமாம் 'ஓம்'கார ரஸத்தின் உறைவிடமானவள். 940

நாதவித்தையை வேண்டும் இப்புதல்வியால் நன்குபாடப்பட்டவள்; நாதத்திளுல் உபாஸிக்கப்பட்ட, இன்னிசை ஒலியே ஆனவள் / இன்னொலி கொண்டவள்; இவ்விதய ஏக்கமான நாதத்தை முழுமையாக அருள்பவள்; நாதத்தை வேண்டும் இவ்வுள்ளத்தில் ஒளிரும் ஒளியானவள். 941

ப்ரம்மமுஹூர்த்தத்தில் தன்னில் மங்கல நீராடப்பட்டவள்; உள்ளாழ்ந்து த்யானிக்கப்பட்டவள்; பண்மலர்களால் அர்ச்சிக்கப்பட்டவள்; நன்கு பூஜிக்கப்பட்ட அன்னே கங்கை; எனது ஆத்மானந்தமான தேவதை. 942

பேரின்ப முழுமையே ஆன தேவி; பேரின்ப முழுமை அமைதியில் இருப்பவள்; முழுமை இன்ப அமைதியின் பெருக்கானவள்; முழுமை இன்ப அமைதி பெறச்செய்பவள். 943

ஸரஸ்வதி; மஹாலக்ஷ்மி; பார்வதி; மங்கள வடிவானவள்; கங்காதேவி; என் அன்னே; மங்கல எழில்கொண்டவள்; பூஜைஅறையில் தெய்வமாயிருப்பவள். 944

அதிகாலையில் த்யானித்தலே மங்கல நீராடலானவள் / அதிகாலையில் த்யானித்து மங்கல நீராடப்பட்டவள்; உள்ளாழ் அமைதியுடன் பாடும் பாட்டின் லயமானவள் / பாட்டில் ஒன்றியவள்; வீணையின் இனிய இசை ஒலியில் மகிழ்பவள்/ ஒலியின் மகிழ்வானவள்; வீணை இசையிலிருக்கும் ராகதேவதையானவள். 945

வீணை இசையில் ஒன்றிய/இசையின் லயமான கங்கை; தம்புரா ஶ்ருதியாக ப்ரவஹிப்பவள்; தங்கு தடையற்ற நாத வெள்ளமானவள்; அன்னை; உள்ளமைதியை வளர்ப்பவள். 946

தம்புரா ஶ்ருதியுடன் பாடப்பட்டவள் / தம்புராவின் இன்னொலி இசையானவள்; தொடர் அருவியாய்ப் பொழிபவள்; தனிப்பட்ட நாதவெள்ளமாய்ப் பெருகிடும் அன்னை; பக்தியில் மலர்ந்த இவ்விசைவாக்கில் ஒளிர்பவள். 947

செவிக்கினிய கானமாய்த் தனித்த ‘ஓம்’காரத்தை ஒலிப்பவள் / ‘ஓம்’காரத்துட்புகுந்த இன்னொலியானவள்; தனிப்பட்ட இன்னிசையில் இனிதோடுபவள்; தனியொலியாம் ப்ரணவத்தின் இனிமையானவள் / மிக்க இனிமையான தனித்த ஒலி கொண்டவள்; தனித்த அமைதியாய் ப்ரவஹிப்பவள். 948

‘ஓம்’காரநாதமாம் ஸத்துவப் பொழிவானவள்; ராகதாளத்துடன் அர்ச்சித்துத் துதிக்கப்பட்டவள்; லயத்தில் ஒன்றிய இன்னிசையின் ஆதார ஶ்ருதியானவள் / லயத்தில் ஒன்றிய இன்னிசைப் பொழிவே ஆனவள்; நாதப் பெருக்கின் வடிவானவள். 949

ஶ்ருதியோடிணைந்த ராகத்துடன் நன்குப் பாடப்பட்டவள்; தம்புரா ஶ்ருதியாகும் ‘ஓம்’கார ஒலி கொண்டவள்; க்ருதிகளில் அமுத வெள்ளமாக / க்ருதிகளின் ஸாரமாக ஓடுபவள்; திருநாமங்களைப் பாடுவதில் அமுதாய்ப் பொழிபவள் / திருநாமங்களை அமுதாய்ப் பாடச்செய்பவள். 950

இத்துதியின் ஸாஹித்யத்தின் வேகமானவள்; இத்துதியின் ஶ்ருதியாக இனிதொலிப்பவள்; இத்துதியின் போக்கே தனது நற்சிறப்பானவள்; இத்துதியில் ஒளியுடன் விளங்குபவள். 951

இத்துதித்தொகுப்பின் சிறப்பானவள்; துதியானவள்; துதிப்பவளானவள்; இத்துதியை இனிதிசைப்பவளானவள்; துதிக்கப்பாற்பட்ட மிகுந்த சிறப்புடையவள்; இத்துதியின் போக்கில் இனிய வாக்காகப் ப்ரவஹிப்பவள். 952

பாடப்பட வேண்டியவள்; பாடப்பட்ட பண்ணுனவள்; கேட்கப்படவேண்டிய 'ஓம்'காரத்தை இசைப்பவள்; அறியப்படவேண்டிய மெய்வாக்கின் உட்பொருளானவள்; இத்துதியின் சொற்பொருள் வடிவானவள். 953

காயத்ரீ மந்த்ரமாக உள்ளவள்; தன்னைப்பாடுபவரை நன்கு காப்பவள்; பாடும் வாக்கில் நிலையாக உட்சென்றவள்; பாடுதற்கடிப்படையான அமைதி நல்குபவள்; இப்பாட்டிற்கடிப்படையான நீரோட்டமானவள். 954

பாட்டிற்கடிப்படையான 'ஓம்'காரத்தை ஒலிப்பவள்; இசைப்பொழிவாம் நீர்வீழ்ச்சியினுல் அமைதியூட்டுபவள்; கீதாசார்யனுன ஸ்ரீக்ருஷ்ணனின் நதிவடிவானவள்; ஸங்கீதானந்தத்தை ப்ரஸாதமாக அளிப்பவள் (இசை இன்பம் தந்து அருள்புரிபவள்). 955

ஸத்குரு ஸ்ரீத்யாகப்ரம்மத்தின் அற்புத ஸங்கீதமானவள்; குருவின் கானலயமாய் ப்ரவஹிப்பவள்; குருவின் சொற்களே ஸத்துவ நன்னீராக உள்ளவள்; தூய இறைவன் திருநாமங்களைப் பாடிடும் பாட்டே தன் இசையாக/நடையாக கொண்டவள். 956

திவ்யத்திருநாமங்கள் நன்கு பாடப்பட்டவள்; திவ்யானுபவம் தந்து மகிழ்விப்பவள்; திவ்ய உள்ளுயிர்ப்புப் பெறச்செய்திடும் அன்னை; உள்ளுயிர்ப்பினுல் ஶ்லோகங்களில் பாடப்பட்ட, ராகதேவதையானவள். 957

பாட்டின் ஸத்துவ ஸாஹித்யமே தனது மென்னீராகக் கொண்டவள்; தனது மிக மென்மையான ஒலியே ஸங்கீதமானவள்; ஸ்ரீராமனை உணரும் இன்பமே தனது நற்போக்கானவள்; குருவின் ஸத்கீர்த்தனங்களில் களிப்புடன் ப்ரவஹிப்பவள். 958

பாட்டின் ஸங்கதிகளில் விளையாடுபவள்; மெய்யின்பமான ஸங்கீதம் அலைமோதுபவள்; நன்கு பாடப்பட்டவள்; பாட்டின் இன்பமானவள்/நறுமணமானவள் / பாட்டில் இன்புறுபவள்; ஸங்கீதமும் நற்கதியும் அருள்பவள். 959

இவ்விசைத்துதியின் ஆழமும் செறிவுமானவள்; ஸாஹித்யத்தின் வாக்கில் விளங்குபவள்; ராக கங்கை; ஆற்றலளிக்கும் அன்னை; இவ்வுள்ளத்தில்/இவ்வெண்ணங்களில் இன்பமாக இசைப்பவள். 960

பாடப்படுபவள்; இனிய பாட்டாய் இருப்பவள் / இனிது பாடுபவள்; ராகம், லயத்தின் இருப்பிடமான நன்னீர் கொண்டவள்; நன்னீரில் பிறந்த

மகிழ்வுப் புல்லரிப்புடன் நன்கு பாடப்பட்டவள்; ஸ்ரீத்யாகராஜரின் நல்வாக்கில் ஒன்றியவள். 961

குருவின் ஸாஹித்யத்தின் புனிதமானவள்; (குருவின்) இன்பமளிக்கும் பாட்டுக்களே நன்னீரானவள்; க்ருதிகளிலும் அவற்றின் ராகங்களிலும் எழில்நடம் புரிபவள்; திவ்யத்திருநாமங்களே மங்கல நீரோட்டமானவள். 962

உண்மையான இன்பமளிக்கும் ஸங்கீதமானவள்; எனக்கு இன்பமளிக்கும் அன்னே; ஸங்கீதமாம் நல்லின்பம் பெறச்செய்பவள் / ஸங்கீதமாம் உண்மையான அமைதியின்ப நீரோட்டமானவள்; இச்சிசு மழலையாம் ஶ்லோகங்களும் பாட்டுக்களும் கொண்டவள். 963

எனது ஆத்மானுபவமான இந்த ஸாஹித்யத்தை உடையவள்; இச்சுய அனுபவத்தைத் தெள்ளத்தெளியதாக்குபவள்; சுய அனுபவத்தால் துதித்துப் பாடப்பட்டவள்; எனக்குள் உணரப்பட்ட என் அன்னே. 964

அமைதியூட்டும் மென்னொலிகொண்ட, சிறந்த கங்கை; அமைதி இன்பமளிப்பவள்; ஸாம கானத்தில் விருப்புள்ள தேவி; திருநாமங்களைப் பாடும் அருள் செய்பவள். 965

கம்பீரமாக இசைபாடும் கங்கை / இந்த கம்பீரமான பாட்டிலிருக்கும் கங்கை; இசைகாம்பீர்ய எழில்நடை கொண்டவள்; உள்ள ஆழத்தில் இசையாய் உள்ள/இசைக்கும் அன்னே; ஆழ்ந்த ஒலியால் அமைதிப்படுத்துபவள். 966

இனிது பாடப்பட்டவள்; பாட்டின் இனிமையனவள்; இனிய சொற்களைக்கொண்ட இவ்வாக்கில் இருப்பவள்; இசைத்தோட்டத்து இன்பத்துடன் கூடியவள்; குரலினிமையில் இருப்பவள். 967

களிப்பூட்டும் ஏழிசை ஒலிகளில் வசிப்பவள்; இன்னொலி படைத்தவள் / இன்னிசையே ஆனவள்; இன்னிசையால் அர்ச்சிக்கப்பட்டவள்; இன்னிசை உள்ளிருக்கும் நீடமைதியானவள்; இன்னிசை ஒலியின்பம் நல்கும் நன்னீர் கொண்டவள். 968

பொன் எழுத்துக்களால் அர்ச்சிக்கப்பட்ட பொன் வண்ணமானவள்; இக்கவிதை ஒளியில் ஒளிர்பவள் / இக்கவிதை எண்ணங்களை ஒளிரச்செய்பவள்; எழில் நடமிடும் நீர் வடிவமான தேவி / தன் எழில் நடமிடும் இக்கவிதையின் களிப்பானவள்; இக்கவிப்படைப்பினால் வணங்கப்பட்டவள். 969

பண் நடமிடும் வண்ண எழிலோள்; தாளத்தின் அமைதியுடன் செல்பவள்; அமைதியுடன் ராமனைப் பாடும் பாட்டில் இருப்பவள்; ஸதாஶிவனின் மகிழ்வானவள் / என்றும் மங்களமும் மகிழ்வும் நிறைந்தவள். 970

இந்த நல்லிசைத்துதியினை உகப்பவள்; பண்ணெனும் மலரின் தேனென நீர் கொண்டவள்; பண்ணினிமை கொண்ட இவ்வாக்கின் ஸாரமானவள் / பண்ணினிமையும் சொல்லமுதுமாய்ப் பொழிபவள்; அன்புகொண்ட புஷ்பாவின் மூச்சினால் பூஜிக்கப்பட்டவள். 971

இவ்விசைத்துதியின் இன் பண்ணானவள்; நற்கீர்த்தனங்களின் ஸ்வரங்களோடு ஒன்றியவள்; தெளிந்த உள்ளத்தில் வண்ணமயமாய் ஒன்றியவள் / தெளிந்த உள்ளத்தின் லயமும் ராகமுமானவள்; கம்பீரமாகப் பாடும் கங்கை / கம்பீரமாய்ப் பாட வழிசெய்திடும் கங்கை. 972

அமுதினிய பாட்டின் இனிமையே ஆனவள்/இனிமையில் உள்ளவள்; அமுதமயமானவள்; இந்த நல்வாக்கே ஆனவள்; இத்துதிகளில் இன்னிசையுடன் பாடப்பட்டவள்; இத்துதிகளின் இன்னிசையின் ராக தேவதையானவள். 973

இத்துதிப்பாடல்களால் புகழப்பட்ட அன்னை; இனிதொலிக்கும் நாதத்தால் பூஜிக்கப்பட்டவள்; இவ்வன்புச் சொற்களின் இன்னிசை ஒலியான கங்கை; நாதத்தின் மெய்ச்சாறாய்ப் பொழிபவள். 974

நாதவடிவான வானுலக நதியானவள்; நாத அமுத வெள்ளமானவள்; ஸ்ரீத்யாகப்ரம்மத்தின் நல்வாக்கில் பொழிபவள்; த்யாககங்கை எனும் இன்னொரு வெள்ளமானவள் / த்யாககங்கையினின்று வேறுபாடற்றவள். 975

வானுலகைச் சேர்ந்தவள்; நல்லுள்ளத்துடன்/இந்நல்லெண்ணங்களால் ஆராதிக்கப்பட வேண்டியவள்; பருக அமுதென இனிக்கும் நீர் கொண்டவள்; தெய்வீக இன்பமானவள் / இன்பம் நல்குபவள்; இன்னிசை இன்பமானவள்; இன்னிசைக் கலைவெள்ளமானவள். 976

மிகச்சிறந்த இன்பமான இன்னிசை ஒலி இன்பத்தைத் தன்னுள் கொண்டவள்; சிறந்த ஏழிசை ஒலிகளின் இருப்பிடமானவள்; வீணையின் இனிய இசையொலியில் ஒன்றியவள்; இவ்விசைமாலையால் அணிசெய்யப்பட்டவள். 977

அழகிய ராகத்தின் ஸாரமாய்ப் பொழிபவள்; சிறந்த நற்கீர்தனங்களாகப் பெருகிடுபவள்; ஸ்வரம், ராகம், லயம் இவற்றின் பெருமகிழ்வை

அளிப்பவள்/பெருமகிழ்வானவள்; ஏழு இன்னிசை ஒலிகளின் எழிலொளிர்பவள். 978

தாளகதியுடன் செல்லும் ராக அமுதவெள்ளமானவள்; உள்ளுள் நீடமைதியில் ஒன்றும் வரமளிப்பவள்; நடமிடும் வண்ணங்களில்/பண்ணெழிலில் பளிச்சிட்டு ஒளிர்பவள்; கான கங்கை; ஆத்மாவுடன் ஒன்றிடல் செய்பவள். 979

பண்ணிசைச்செல்வத்தை/இறையன்பை நிலைபெறச்செயும் கங்கை; பற்றை நிலையற்றதாகச்செய்து காப்பவள்; பண்ணில்/இறையன்பில் நிலைத்த இவ்வுள்ளத்தின் அன்பானவள்/பண்ணானவள்; ராகத்தின் உள்ளிருப்பவள்; தனது எழிலினால் இதமூட்டுபவள். 980

இப்பண், இறையன்பு, இன்பம் இவற்றுக்குக் காரணமானவள்; பகலவன், தண்மதி ஒளியில் எழிலுறச் செல்பவள்; பண்ணுடனும் மிக்க அன்புடனும் பாடப்பட்டவள்; ராகம், தாளம், லயத்திற்கு இருப்பிடமானவள். 981

இவ்வன்பு/இப்பண்ணிசை உபாஸனையில் மகிழ்வுறுபவள்; ராகங்களின் எழில்நடனத்தில் ஒளிர்பவள்; ராகத்தையும் அநுராகத்தையும் (பண்ணையும் இறையன்பையும்) வளர்ப்பவள்; ராகத்திலும் தாளத்திலும் இருப்பவள். 982

பற்றினை ஒழிப்பவள்; ராகதேவதையான கங்கை; பண்ணிசை இன்பப்பெருக்கானவள்; ராகமும் அநுராகமும் (பண்ணும் அன்பும்) ஒருங்கிணையச் செய்பவள் / இப்புதல்வியின் பண்ணும் அன்பும் ஒருங்கிணைந்தவள் / பண்ணும் அன்பும் ஒருங்கிணைந்த இத்துதிக்கு உரித்தானவள்; லயமும் ராகமுமே அலைகளாகக் கொண்டவள் / அமைதி நல்கும் எழில் வண்ண அலைகள் கொண்டவள். 983

பண்ணே ஆனவள்; அழகே அடையாளமாகக் கொண்ட கங்கை; வண்ண எழில் ஒளிர்பவள் / பண்ணின் எழிலானவள்; பண்ணெழிலில் புன்னகை பூப்பவள்; தன்னிடம் அன்பே அடையாளமாகக் கொண்ட இவ்வுள்ளதில் ஓடுபவள்; இறையன்பு அருள்பவள்; இவ்வுள்ள அன்பில் இருப்பவள். 984

பண்ணிசைக்கலையை நாடும் இப்புதல்வியால் பாடப்பட்டவள்; முகிலொலிபோல் இசைக்குரல் கொண்டவள்/இன்பண்ணொலி கொண்டவள்; (இவ்வுள்ளத்தின்) பண், இறையன்பின் வண்ணமானவள்; லயமும் ராகமும் அருள்பவள். 985

பண்ணிசை வண்ண எழிலானவள்; தன் வண்ண எழில் நடனத்தில் ஒன்றிய இவ்வுள்ளத்தில் புன்னகை மலர்பவள்; வண்ண எழில் நடனத்தால் உள்ளம்

ஒருமிக்கச் செய்பவள் / பண்ணின் நடனத்தில் உள்ள லயம் செய்பவள்; ராக தாள அலை எழில் ஒளிர்பவள். 986

இப்புதல்வியின் அன்பும் பண்ணும் நடமிடும் கங்கை; பண்ணும் எழிலும் வண்ணமாய் ஒளிர்பவள்; வண்ண வெள்ளமாய்ப் பெருகும் பண் வெள்ளமானவள் / ஆசை வெள்ளத்தை அடித்துச் செல்லும் அன்புவெள்ளமானவள்; கம்பீரமாய் ஒலிக்கும் ராக தேவதையானவள். 987

பண்ணில் ஒன்றிய இசையே ஆனவள் / பண்ணில் ஒன்றிப் பாடப்பட்டவள் / தன்னில் உள்ளன்புடன் ஒன்றிய இப்புதல்வியால் பாடப்பட்டவள்; பண்ணின் போக்காகப் பெருகிடுபவள் / அழகிய போக்குடைய நீரோட்டமானவள்; பண்ணிசையின் நற்சாறுனவள் / அன்புடனும் பண்ணுடனும் பாடப்பட்ட ஸத்துவ அமுத நீர் கொண்டவள்; ராகத்தின் ஸாரமான ப்ரணவத்தை ஒலிப்பவள். 988

ராகத்தின் ஸாரமான இன்னெலிப்பொழிவானவள்; பேரின்பச்சாறுன மங்கல நீரானவள்; ஸாரமான மெய்த்திருநாமத்தை ஒலிக்கும் பெரு வெள்ளமானவள்; நாதஸாரமாய் ப்ரவஹிப்பவள். 989

தெய்வீகமானவள்; இப்பூமியில் ஓடுபவள்; ராகதேவதை; இப்பண்ணிசைமாலை சூடியவள்; தெய்வீகமான நாதத்தில் நடமிடும் ராகமானவள்; ராகத்தில் கோயில் கொண்டவள்; லயத்தின் இருப்பிடமானவள். 990

இச்சொற்கள் போதாச் சிறப்புடையவள்; எளிதில் பொழியும் வாக்கு வரமருளியவள்; வாக்கின் பண்ணினிமைக்கு அப்பாற்பட்ட இனிமை கொண்டவள்; இவ்வாக்கின் அன்பில் ஒன்றிய/பண்லயமான மெய்ப்பொருள் ஸாரமானவள். 991

அன்புடன்/பண்ணுடன் ஶ்லோகங்களால் துதிக்கப்பட்ட அன்னை; இன்பண்மயமாக/இனிய அழகிய வண்ணமயமாக ஓடுபவள்; பற்றற்ற இவ்வுள்ளத்தில் மகிழ்ந்தோடுபவள்; பற்றற்ற தன்மையை அருள்பவள். 992

என்றும் நிறைந்துள்ள கங்கை; முழுமையான ராக வடிவானவள்; முழுநிறை அறிவளித்திடும் அன்னை; இந்த ஶ்லோகங்களை முழுமை நிறைவு பெறச்செய்பவள். 993

இம்மெய் வாக்கில் உறையும் மெய்ம்மையானவள்; இவ்வுண்மை வாக்கில் முழுமையாய் நிறைந்தோடுபவள்; இவ்வுண்மை வாக்கை

முழுநிறைவு பெறச்செய்பவள்; இவ்வாக்கின் பொன்வண்ணமாய்ப் பரிவஹித்தோடுபவள். 994

இத்துதியிலுள்ள ஆயிரக்கணக்கான திருநாமங்களின் ஒளி ஆனவள்; இந்நாமமலர்க் கோயிலில் துதிக்கப்பட்டவள்; புஷ்பாவின் உயிர்மூச்சான ஸங்கீதமானவள் / புஷ்பாவின் உயிர்மூச்சாகத் துதித்துப் பாடப்பட்டவள் / தேனினிய பாட்டினால் துதிக்கப்பட்டவள் / தேனினிய இசையானவள் / தேனினிய இசை அருள்பவள்; மெல்லினிய ஒலிபடைத்த கங்கை. 995

புஷ்பாவினால் ஆத்மானந்தத்துடன் பாடப்பட்டவள் / புஷ்பாவின் ஆத்மானந்தமான ஸங்கீதமானவள்; மங்கல நீர் முழுமையாய் நிரம்பியவள்; முழுநிறைவான அறிவு வடிவானவள் / அறிவு முழுமை நிறைவு பெறச்செய்பவள்; இன்னிசை நறுமணம் கொண்ட இவ்வாக்புஷ்பங்கள் கொண்டவள்; எளிதில் பேரின்ப முழுமை நிலை அருள்பவள். 996

இவ்வுள்ளத்தில்/இவ்வெண்ணங்களில் இன்பப் பெருக்கானவள்; இவ்வுள்ளத்தில்/இவ்வெண்ணங்களில் இருப்பவள்; இவ்வெண்ணங்களை உகப்பவள்; இசை கங்கை; விரைவுப்போக்குடையவள்; இத்திருநாம வாக்குப்பொழிவாய் ஓடுபவள். 997

ஸ்ரீபஞ்சநதக்ஷேத்ரம் எனப்படும் திருவையாறு நாதஸூர்யனை ஸ்ரீத்யாகப்ரம்மத்தின் க்ருதிகளில் ஒளிர்பவள்; அவர்தம் சிஷ்யையாம் புஷ்பாவினால் இன்பண்ணுடன்/அன்புடன் காலையிலும் மாலையிலும் பூஜிக்கப்பட்டவள். 998

குழந்தையின் மழலையொத்த இத்துதிமலர்மாலைகளால் அணிசெய்யப்பட்டவள்; குழந்தைமழலையாம் இத்துதித் தொகுப்புக்களை உடையவள்; இக்குழந்தை மழலையில் மகிழ்வுற்றவள். 999

(இத்துதியில்) மிகவும் மகிழும் அன்னை கங்கை; இக்குழந்தை மழலையாம் துதிகளில் ஒளிர்பவள்; இம்மிதமான வாக்கினால் துதிக்கப்பட்ட கங்கை; அளவற்ற அற்புதத்திற்கு இருப்பிடமானவள். 1000

இவ்வாயிரம் ஶ்லோகங்களாகிய பாட்டுக்களில் இருப்பவள்; மிகுந்த அன்பெனும் மலரால் அர்ச்சிக்கப்பட்டவள் / இவ்வெழில் வண்ணமலர்களால் அர்ச்சிக்கப்பட்டவள்; தங்குதடையின்றி நல் ஶ்லோகங்களைப் பொழியச்செய்பவள்; வற்றாத இவ்வெள்ளத்தைப் பெருகிடச் செய்தவள். 1001

ஆயிரம் ஶ்லோகங்களால் பாடப்பட்ட கங்கை; ஆயிரமாயிரம் கோடிக்கணக்கான சிறப்புடையவள்; கோடிக்கணக்கான பாபங்களை அழிப்பவள்; கோடிக்கணக்கான திருநாமங்கள் ஒளிர்பவள். 1002

இவ்வாயிரம் ஶ்லோகங்களில் இனிது பாடப்பட்டவள் / இவ்வாயிரம் ஶ்லோகங்களின் இன்னிசையானவள்; இந்த ஶ்லோகங்களின் நறுமணத்தில் மிகவும் மகிழ்பவள்; இவ்வாயிர, லக்ஷக்கணக்கான திருநாமங்களால் அர்ச்சிக்கப்பட்டவள்/திருநாமங்களே பூஜா விக்ரஹமானவள்; இந்த கங்காஸஹஸ்ரத்தில் ப்ரகாஶிப்பவள்; தெய்வீகமானவள். 1003

உள்ள நிர்ணயத்திற்குக் காரணமானவள்; உள்ள நிர்ணயத்தை முழுமை பெற நிறைவேற்றுபவள்; இவ்வாயிரம் ஶ்லோகங்களுக்கான உள்ளுயிர்ப்பானவள்; இவ்வாயிரம் பாக்களின் மாலையினால் அணி செய்யப்பட்டவள். 1004

இவ்வாயிரம் பாயிரங்களில் இருக்கும் கங்கை; உள்ளார்ந்த அன்பில் மலர்ந்த இத்துதிமாலை அணிந்தவள்; எப்பேர்ப்பட்ட துதியும் மிகையாகாத கங்கை; பரம்பொருளான இறைவி. 1005

இத்துதியின் மணமே ஆனவள் / இத்துதியில் மகிழ்பவள் / இத்துதியின் மகிழ்வானவள்; இத்துதியின் இசையில் மகிழ்பவள்/ இசையின் மகிழ்வானவள் / இசையாம் மகிழ்வை நல்குபவள்; (இதிலுள்ள) பக்தியில் மகிழ்பவள்/பக்தியின் நறுமணமானவள்; என் அன்னை; இம்மலரின் நறுமணமானவள் / புஷ்பாவின் மகிழ்வானவள்; அவளை மேன்மை நிலை பெறச்செய்பவள்; நல்மங்கல வீட்டுப்பேறு நல்குபவள். 1006

நாள்தோறும் ஶ்லோகங்களால் துதித்துப் பாடப்பட்டவள்; என்றும் மங்களமருளும் அருமை கங்கை; நாள்தோறும் தன்னில் மங்கல நீராடலில் மிகவும் புண்யம் நல்குபவள் / நாள்தோறும் தனது நன்னீரில் மங்களநீராடல் அருள்பவள்; நாள்தோறும் கொண்டாடப்படும் மங்கலமானவள். 1007

எல்லா மங்களங்களும் ஒருங்கிணைந்தவள்; எல்லா மங்களங்களும் அருள்பவள்; எல்லாமாகவும் இருக்கும் நல்மங்கல தேவி; அன்னை கங்கை; நிறை மங்களமானவள். 1008

கங்கைக்கரையில் மலர்ந்த இந்த ஸ்தோத்ரம் கங்கையின் புகழ்பாடும் ஆயிரத்துக்கு மேம்பட்ட பாயிரங்கள் கொண்டது; இத்துதித்தொகுப்புகள் போதாதவை; (எனினும்) முழுநிறை நல்மங்களம் நல்குபவை.

பராஶக்தியான கங்காதேவியின் உள்ளுயிர்ப்பால் மலர்ந்த இவ்வாயிரம் பாயிரங்கள்; புஷ்பாவினுல் பாடப்பட்டவை; குருவுக்குகந்தவை; கங்கைக்கு அர்ப்பணம் செய்யப்பட்டவை; நல்மங்களம் நல்குபவை.

கங்கையின் புதல்வியும் குருவைத் துதிப்பவளுமான புஷ்பவல்லி எழுதுகோலே ஆவள்; இத்துதி கங்கையினுலேயே செய்யப்பட்டது; நல்லின்பமும் நிலைத்த நல்மங்களமும் நல்குவது.

ஓம்

ஸ்ரீ:

ஓம் ஸத்குரு ஸ்ரீத்யாகராஜஸ்வாமிக்கு மீண்டும் மீண்டும் நமஸ்காரம்.

# ஸ்ரீ கங்காராகபுஷ்பாவளீ.

ராகத்தின் அதிதேவதையான கங்கை; அன்பில் மலர்ந்த இவ்விசை வாக்கின் எழுத்துக்கள் ஆனவள் / இவ்விசை வாக்கில் தோன்றும் அன்னை; இவ்வன்பு உள்ளத்தில் ஸஞ்சரிப்பவள்; ராகத்திலும் தாளத்திலும் ஒன்றிடச் செய்பவள் / ராகமும் தாளமும் நீடமைதிப் பேரின்பமும் அருள்பவள். 1

பண்ணிலும் இசையொலியிலும் ஒன்றிய கங்கை / பண்ணிசை லயமே ஆன கங்கை; ராகக்கோயிலில் தெய்வமானவள்; ராகத்துடனும் தாளத்துடனும் துதிக்கப்பட்ட அன்னை; மிக்க அன்புடனும் பக்தியுடனும் வணங்கப்பட்டவள். 2

பண்ணெனும் வண்ண மலர்களால் அர்ச்சிக்கப்பட வேண்டியவள்; பண்ணுடனும் உள்ளன்புடனும் துதிக்கப்பட்டவள்; அன்புடன் கூடிய பண்ணினை விறைவுடன் பொழியச்செய்பவள் / அன்புடன் கூடிய இப்பண்ணின் விரைவானவள்; இவ்வண்ணப் பண்மலர் மாலையில் புன்னகைப்பவள். 3

இவ்வன்பு வாக்கினால் துதிக்கப்பட்ட அன்னை கங்கை; பண்ணின் வண்ண எழில் நடமிடும் ஒளியுடையவள்; பலவிதப் பண்களில் ஒளிரும் எழிலானவள் / பலவண்ண எழிலொளி படைத்தவள்; ராகங்களின் மொத்த எழிலின் ஸாரமானவள். 4

பண்ணிசைப் பனிமலையை வெள்ளியெனவும் வண்ணமயமாகவும் ஒளிரச் செய்யும் ஆதவன் ஆனவள்; பண்ணிசைப் பனிமலையினின்று பெருக்கெடுத்தோடும் அமுத வெள்ளமானவள் / வெள்ளிப் பனிமலையினின்றிழிந்தோடும் அழகு வெள்ளமானவள்; பண்ணிசைக் கடலினைப் பொங்கிடச் செய்யும் நிலவானவள்; பண்ணிசை அமுதச் சாற்றின் போக்கானவள். 5

பருகக் களிப்பூட்டும் இனிய நீர் கொண்டவள்; யாக, யோக பலன்களை அளிப்பவள்; ஸ்ரீத்யாகப்ரம்மம் துதித்துப் பாடிய ‘ஓம்’காரநாதத்தின் இருப்பிடமானவள். 6

என்றும் மங்களமான கங்கை; ஜீவன்முக்தர்களான பெரியோர்களால் துதிக்கப்பட்டவள்; இமயமலையில் ஊஞ்சலாடும் கங்கை; இமயத்து வண்ண எழிலமுதச் சாறானவள். 7

பச்சை, நீலம், பொன் வண்ணங்களில் (அழகிய மயில் கழுத்து நிறத்தில்) ஒளிர்பவள்; பண்ணிசை அமுதச்சாறே ஒலியானவள்; ஏழிசை ஒலிகள் எழில் நடமிடுபவள்; ஏழு எழிலிசை ஒலிகளின் இன்பம் நல்குபவள். 8

மிகச்சிறந்த இன்பண்ணுடனிணைந்த கங்கை / மிகச்சிறந்த இன்பண் அமைதி நல்கும் கங்கை; வேண்டும் வரமளிப்பவள்; வரமளிக்கும் இறைவனுக்குகந்தவள்; இன்னிசைச்சாறெனும் அமுதப்பெருக்கானவள்; வானோராலும் மானிடராலும் வழிபடப் பட்டவள். 9

ஶங்கரனுக்கு ஆபரணமான கங்கை; இன்னிசைப் பண்ணொலியின் அமுதச் சாறானவள்; விண்ணுலக இன்பமும் முழுமை நிலையும் எய்திடச்செய்பவள்; பேரின்ப முக்தி அருள்பவள். 10

மூலாதாரத்தினின்றெழும்பும் நாதமானவள்; மென்மையான தாளகதியுடன் பெருகிடுபவள்; பேராரவார இசையொலிப் பொழிவானவள்; ஏழிசை ஒலிகளின் இன்பப்பெருக்கானவள். 11

வெள்ளிமலையின் அமைதியும் வண்ண எழிலுமானவள்; மலையில் தோன்றியவள்; நாதயோகினி; ஸ்வரக் கடலின் ஆழமானவள் / ஸ்வரக் கடலின் ஆழத்தை அறியச் செய்பவள்; இயல்பான ஞானமும் பக்தியும் அளிப்பவள். 12

பனிக்கட்டிகள் ஊஞ்சலாடும் கங்கை; அசைந்தாடும் அலைகள் நடமிடுபவள்; பனிமலையில் எழில்நடம் புரிபவள்; பனியே ஆன கங்கை; அழகிய அலைகளுடையவள். 13

விஷ்ணுவின் தாமரைத் திருவடிவெள்ளமானவள்; ஹரியின் பேரின்பமளிக்கும் திருவடித்தாமரைகளின் ஒளியானவள்; இமயமலைகளையே ஜடாஜூடங்களெனக்கொண்டு பயங்கர நடனம் ஆடும் பைரவி. 14

பேரின்பம் பயக்கும் ஆனந்தபைரவியான கங்கை; தோடி ராகம்போல் எழில்கொஞ்சும் அலைகளுடையவள்; வளமிக்கவள், ஆதவன் கதிர்களில் வண்ண எழில் மிளிர்பவள் / கதிரவன், பனிமலை எழில் காணும் நீரோட்டம் கொண்டவள்; தூயவெண்ணிறம் கொண்டவள்; கரனை அழித்த ஸ்ரீராமனுக்குப் பிரியமானவள். 15

பௌளீ ராகத்தில் விடியற்காலையில் பாடப்பட்டவள்; மங்களமானவள்; ஸ்வரங்களால் அணிசெய்யப்பட்டவள்; கம்பீரமான குரலும் இனிய

நாதமும் அருள்பவள் / கம்பீரமான ஒலியுடன் நல்லிசை படைப்பவள்; கணக்கற்ற மலர்களால் அபிஷேகிக்கப்பட்டவள். 16

அமுத அலைகள் கொண்ட கங்கை; இவ்வெழிலொளிர் மலர்கள் மாலையாக அணி செய்யப்பட்டவள்; உள்ளமுழைஞ்சில் ஆழ்ந்து ஹரித்யானம் செய்து இசைக்கடலில் கலந்திடச்செய்பவள். 17

மயக்கும் நடன எழில் கொண்டவள் / மோஹன ராகமே என நடமிடுபவள்; மயக்கும் எழிலுடன் மங்களமாய்த் திகழ்பவள்; மோஹனத்தின் பண்ணினிமையே ஒலியானவள் / மயக்கும் இனிமை கொண்ட ஒலிபடைத்தவள்; அழகினியவள்; இவ்வண்ணப் புகழ்மாலை கொண்டவள். 18

வெண்ணிற ஒளி மிகு நுரையுடன் பொங்கிச் சுழலும் வேகமுடையவள்; பாம்பணைமேல் பள்ளிகொண்டோனின் திருவடிச் சிறப்பானவள்; ஆழ்ந்து ஜங்கார ஒலி செய்பவள்; கம்பீரமான நடன எழிலுடன் ஒளிர்பவள். 19

நாராயணனிடமிருந்து நடம்புரிந்து வரும் கங்கை; களிப்பூட்டுபவள்; ஶிவனுக்கின்பமளிப்பவள்; என் உள்ளத்தை மகிழ்விக்கும் அன்னை; மங்களமளித்து மகிழ்விப்பவள்; மிகவும் தூயவள். 20

விளக்குகளேற்றிச் செய்யப்படும் ஆரதியில் அழகொளிர்பவள்; நல்ல ஓய்வமைதி அளிப்பவள்; ஶ்ருதியால் மகிழ்விப்பவள்; தீப ஒளியில் எழில்மிளிரும் கங்கை; நல்ல அழகுடையவள்; உள்ளத்தை மகிழ்விப்பவள். 21

ஆதவன், தண்மதியின் ஒளியில் புன்னகை சிந்துபவள்; தூய வெள்ளி எழிலில் மகிழ்விப்பவள்; ஒளியும் நிழலும் விளையாடும் அலைகளுடைய கங்கை; மங்கல எழில் கொண்டவள்; மாந்தரை மகிழ்விப்பவள். 22

உமையால் அணிசெயப்பட்ட இமயத்துப் பொன்னொளியானவள்; திருமாலினின்றிழிந்தோடுபவள்; இன்னொலியால் மகிழ்விப்பவள் / இன்னிசையில் மகிழ்பவள்; தன் எழிலில் ஈடுபட்ட இவ்வுள்ளத்தில் மலர்ந்த இக்கவிதையாக இருப்பவள்; காமம் முதலியவற்றை ஒழிக்கும் ஈஶனை மகிழ்விப்பவள். 23

உள்ளமுழைஞ்சில் வணங்கப்படவேண்டிய, மிகச்சிறந்த இன்பமானவள்; மிகச்சிறந்த பாடகரான ஸத்குரு ஶ்ரீத்யாகப்ரம்மம் போல் மகிழ்வூட்டுபவள் / தனக்குப் பிடித்தமான இப்பாடகிக்கு மகிழ்வூட்டுபவள்; தனது நன்னீரில் விருப்புள்ள இந்த பக்தையின் இசை மகிழ்வானவள் / பக்தைக்கு இசை

மகிழ்வூட்டுபவள்; தனது எழிலின் (இந்த)ரஸிகைக்கு மகிழ்வூட்டுபவள் . 24

அமுத நீர் கொண்ட தெய்வீக நதியானவள்; மங்கல நல்லெழில் கொண்டவள்/அருள்பவள்; நினைவிலேயே இன்பூட்டுபவள்; உயிருக்கு உயிரூட்டும் கங்கை; அமுத அலைகளால் உயிரூட்டுபவள். 25

சனீஶ்வரனுக்கு அஞ்சி தஞ்சம் அடையப்பட்ட, மகிழ்வளிக்கும் விண்ணுலக லக்ஷ்மியானவள்/சனீஶ்வரனுக்கு எதிரியானவள்; வேண்டிய வரமளிக்கும் கற்பகத்தருவானவள்; இவ்வுலகில் பசுமையான இமயமலையைச் சேர்ந்தவள்; நல்லறிவாம் மெய்ப்பலனளிப்பவள். 26

எழில் வண்ணக் கொடியான கங்கை / இன்பண்ணிசைக் கொடியான கங்கை; இன்னிசைக்குரல் வளம் பெறச் செய்பவள்; த்யாகமாகிய யாகத்தில் விருப்புடை கங்கை / ஸத்குரு ஶ்ரீத்யாகப்ரம்மத்தின் யாகமாகிய நாதோபாஸனையில் விருப்புடை கங்கை; இன்னிசைப் பண்ணினையும் இறையன்பையும் வளர்ப்பவள் . 27

நாதத்தில் மகிழும் / நாதத்தால் மகிழ்வூட்டும் கங்கை; இசையொலிகொண்டவள், உயிர் வளர்ப்பவள் / இசையொலிக்கும் இந்த பக்தையின் உயிர் வளர்ப்பவள்; (படைத்தல் காத்தல் அழித்தல் எனும்)நாடகத்தில் விருப்புடை இறைவனால் புகழப்பட்டவள்; ஹரியிடமிருந்து தோன்றியவள் / பச்சை வண்ணத்தினள்; தங்க ஆடை கொண்டவள். 28

ஆறுமுகனின் அருமை அன்னை; ரிஷபப்ரியனான ஶிவனை மகிழ்விப்பவள்; ருத்ரனுக்குகந்தவள்; (விண்ணுலகினின்று) ஶிவனுடைய சடைமுடி மூலம் பாயும் நதியானவள்; மனிதர்களையும் தேவர்களையும் மகிழ்வித்து உளம் கவர்பவள். 29

நிலவொளியில் எழில் மின்னுபவள்; பொன்னணி பூண்ட கங்கை; விரைவொலியுடன் வெள்ளமாக ப்ரவஹிக்கும் கங்கை; நிலவொளியில் உளம் கவர்பவள். 30

வண்ண எழில் முழுமையாய் நிறைந்தவள்; கட்டுப்படுத்தமுடியாதவள், வெகு வேகமாகப் பாய்பவள் / அடாணா ராகத்தில் வெகு வேகமாகப் பொழிபவள்; அஞ்ஞானக் கட்டினைப் பிளந்திடுபவள்; பேரின்பச் சாற்றில் ஒன்றியவள்/ஒன்றச் செய்பவள்; தன்னில் மகிழும் இப்புதல்வியை விரும்புபவள். 31

முழுமை ஒலியாம் 'ஓம்'காரமே இன்னொலியாகக் கொண்டவள்; முழுமை ஒலியாம் 'ஓம்'கார நாதத்தினால் இதமளிப்பவள்; நாத சிந்தாமணியான கங்கை; பேரின்ப அமுதைப் பொழிபவள். 32

மெய்ப்பொருள் ஸாரமான, அமுதுநிரம்பிய கங்கை; நாட்டில் செல்லும் வழியெல்லாம் அழகும் மங்களமுமாகச் செய்பவள்; இன்குயிற்குரலில் பாடப்பட்டவள்/ ஸாரங்கா எனும் பண்ணொலியில் பாடப்பட்டவள்; குயிலிசை பாடும் மணற்கரை கொண்டவள். 33

வெற்றித்திருவும் மிகச்சிறந்த இன்பமும் அளிப்பவள்; மிக்க ஆற்றலுடை தூயவள்; தூய உள்ளத்தில் ஓடுபவள்; வெற்றித்திருமாலிடமிருந்து பாயும் கங்கை; உள்ள மாசுகளை நீக்கிடும் இறைவி. 34

விரைந்தோடும் நீரழகு கொண்டவள்; வஸந்த காலத்தில் (கரையில் பாடப்பட்ட) பைரவி ராகத்தின் எழிலே ஆனவள்; தன்னில் லயித்த இப்புதல்வியால் ஆராதிக்கப்படவேண்டிய சிறந்தவள் / இச்சிறந்த துதி வரிசைகள் கொண்ட, ஆராதிக்கப்படவேண்டிய தேவி; வாக்குக்கதிபதியான ப்ரம்மனால் துதிக்கப்பட்டவள்; நிகரற்றவள். 35

இந்நாட்டின் தேவதையான கங்கை; நாராயணனைச் சேர்ந்தவள்; குருவிடம் ( ஸ்ரீத்யாகப்ரம்மம்) அன்பு கொண்டவள்; ஒளிமிகுந்த சுருண்ட குழற்கற்றைகளாம் அலைகள் கொண்டு மகிழ்விப்பவள் / ஒளிமிகு வெண்ணிற அலைகள் கொண்ட அலகாநந்தாவானவள்; உள்ளுள்ள ஆத்மாவில் இன்புறும் யதிகளால் துதிக்கப்பட்டவள். 36

மங்கல மகிழ்வூட்டும் அலகாநந்தா; நரஸிம்மராய் அவதரித்த விஷ்ணுவினின்றுதித்த, நடுநிலைமை கொண்டவள் / நடுநிலைமை கொண்ட, நரஸிம்மராய் அவதரித்த விஷ்ணுவினின்றுதித்தவள்; மல்லிகை மலர்களென எழிலுறச் சிரிக்கும் அலைகள் கொண்டவள்; பதரீ எனும் சிறந்த உயர் மலையின் இசையானவள் . 37

'ஓம்'காரத்தை ஒலிப்பவள்; நற்சரிதை கொண்டவள்; பாகீரதி; அழகிய கோமுகத்தினின்றிழிபவள்; நாதத்தையே தன்னுருவாகக் கொண்ட கங்கை; இனிதொலிக்கும் அலைகள் கொண்டவள். 38

சிம்மத்தின் ஒலிகொண்ட தேவி கங்கை; ஸஹோதரியுடன் இணைந்த அலகபைரவி [1]; இக்கலியில் தன்னில் நீராடலில் உண்மையான மகிழ்வளிப்பவள் / கலியில் நீராடப்பட்ட, மெய்ப்பொருளின்

[1] தேவப்ரயாகை

இருப்பிடமானவள்; இவ்வுலகில் அழகு நடமிடும் வண்ணமயமானவள். 39

இப்பூமிக்கு ஓடும் நீர் மாலையானவள்; மிகப்பழமையானவள்; தேவர்களாலும் பூஜிக்கப்பட்டவள் / தெய்வபூஜையாய்ப் பூஜிக்கப்படுபவள்; ரகுநாதனுக்குகந்தவள் (தேவப்ரயாகை); திவ்யமான இசையைத் தன்னுள் கொண்டவளான கங்கை; துதி அரசரான ஸத்குரு ஸ்ரீத்யாகராஜஸ்வாமிகளின் க்ருதிகளில் நிலைத்திருப்பவள். 40

கரையிலுள்ள காடுகளில் ரீங்காரம் செய்யும் வண்டுகளின் ஒலி நிறைந்தவள்; வெள்ளிப் பகலவனின் ஒளிநிழல் நடனத்தில் ஒளித்துளிகளின் மாலையணிந்து விளங்குபவள். 41

நவரத்னங்கள் பளிச்சிடும் ஒளியுடையவள்; கதிரவன் வெளிச்சத்தில் பளபளப்பவள்; மணிகளின் ஒளியென வண்ண அணி பூண்டவள்; ஒளிக்கதிர் மாலைகளால் அணி செய்யப்பட்டவள். 42

நிலா வெளிச்சத்தில் பளிச்சிட்டு மின்னுபவள்; மங்களமான விஷ்ணுவின் உளங்கவர்ந்தவள்; ஊஞ்சலாடும் அலைகள் நிறைந்த போக்குடையவள்; மங்கல மணியானவள்; எழில் ஒளி நடமிடும் நீர் நிறைந்தவள். 43

ஞான ஒளியைத்தூண்டி ஒளிரச்செய்பவள்; ஆத்ம ஞானத்தை வளர்ப்பவள்; ஒளியே உருக்கொண்ட அன்னை; உள்ளொளியைக் காணச்செய்பவள். 44

மலை நாட்டைச் சேர்ந்தவள்; என்றும் கெடாத நீருடைய கங்கை; மலைக்காற்று வீசும் சூழலிலுள்ள தேவி; இவ்வுலகில் மிக அழகான போக்குடையவள் ; கௌள ராகத்தில் அமைந்த கலைப்படைப்பினுல் துதிக்கப்பட்டவள். 45

நாதத்தின் அழகிய உருவான கங்கை; அலைகளாம் அழகிய கூந்தலுள்ளவள்; இசைத்திருநாமங்கள் கொண்ட, யோகமே ஆன இப்படைப்பிற்குரியவள்; விஷ்ணுவின் திருப்பாதங்களினின்றுதித்த நன்னீரானவள். 46

காணிக்கையான இந்த ஶ்லோகங்களால் பூஜிக்கப்பட வேண்டியவள்; வழிகாட்டுபவள்; வேண்டுவன அளிப்பவள்; தர்மத்தின் இருப்பிடமானவள்; (இவ்வுலக, இவ்வுலகிற்கப்பாற்பட்ட) இருவகை இன்பங்களுக்கும் இருப்பிடமானவள்; வெண்ணெயைப்போல் மென்மையாக இழையும் இன்னிசை ஒலிகளின் மாலை அணிவிக்கப்பட்டவள். 47

பனிநீர் நிறைந்த கங்கை; அன்னை லக்ஷ்மி; பாம்பணி பூண்ட ஶிவனின் சென்னியினின்றிழிந்த பனிநீரானவள்; இப்பிறவிச்சுழலினின்று மீள வழிகாட்டுபவள்; செல்லும் போக்கே நடனமானவள்; ஆதவன் வெளிச்சத்தில் உளம் கவரும் கங்கை. 48

இவ்வுலகின் அழகனைத்தும் நடமிடும் கண்ணுடிபோல் தெளிந்த நீர்கொண்டவள்; கிளிகள் கொஞ்சும் ஒலிகளுடன் கூடிய ஓய்வமைதி தரும் ஒலி கொண்டவள்; இமயத்து மங்கள ஒளி விளக்கானவள்; கரைகளில் இசைக்கும் குயிலோசை கூடியவள். 49

உலகை மயங்கச்செய்யும் மங்கல எழில் கொண்டவள்; முழுமையாக நீர் நிறைந்து உளங்கவர்பவள்; தூய எல்லைகள்கொண்ட கங்கை; வளைந்து செல்லும் பொன்மேனியாள். 50

சென்றுகொண்டே இருப்பவள்; அலுப்பை அடித்துச் செல்பவள்; வெள்ளியாய்ப் பளீரென முழுநிலவின் ஒளி நிறைந்தவள்; இச்சொற்கோவைகளே அழகிய மாலைகளாகக் கொண்டவள்; இனிய அமுதாய் ஓடும் கங்கை. 51

மாந்தரை உயர்த்திட அருவியாய்ப் பெருகி ஒடிடும் கங்கை; தீச்செயல்கள் பலவற்றையும் பிளந்தெறிபவள்; மெய்ப்பொருள்மீது விருப்பை வளர்த்திடும் கங்கை; மெய்யறிவைப் பெருகச்செய்பவள். 52

நற்கீர்த்தியுடை சிறப்புமிக்க ஸ்ரீராமனுடன் ஒன்றியவள்; அலைமோதிய ஸித்தர்கள் கூட்டம் இருந்த சூழல் கொண்டவள்; மலையில் சுற்றிவரும் நீரின் போக்குடையவள் / அன்னங்களும் வண்டுகளும் நிறை நீரோட்டமுடையவள் / தூய ஆத்மாக்களாம் வண்டுகள் முரலும் நீரோட்டமுடையவள்; தூயோரைக் காப்பவள்; கலைக்கிருப்பிடமானவள். 53

அன்னங்களின் வரிசைகள் கொண்ட கங்கை; அழகிய நிலவொளியில் வெள்ளியாக ஓடுபவள் / அழகிய மங்களமான ராகங்களாக ஓடுபவள்; இறைவனின் இன்னிசைக் குரலானவள்; அறிவுமய ஆனந்தமாக ஓடுபவள். 54

ஹரிநாராயணனிடமிருந்து வந்திட்ட, காத்திடும் அன்னை; இந்நாட்டில் ஓடும் தூய வானுலக நதியானவள்; காஶியில் ராமநாமத்துடன் பூஜிக்கப்படும் கங்கை; இந்நாடுமுழுவதும் பரவியுள்ள பெயருடையவள்; ஆதவன் வணங்கித் துதிக்கப்படும் புனித நீர் கொண்டவள். 55

(தன்னோடு) நன்கிணைந்த யமுனையை உடைய மங்களமான கங்கை; சிறப்புகட்கு இருப்பிடமானவள்; கடலை நோக்கிப் புறப்படும் கங்கை; கடலைச் சேர்ந்தவள்; கடலில் கலந்த தேவதையானவள். 56

மெய்ப்பொருளை த்யானிப்பதில் முனைப்புள்ள இவ்வுள்ளத்தின் உயிர்ப்பான கங்கை; ஆறுவிதங்களில் நல்வழிப்படுத்துபவள் (கங்காதர்ஶனம், ஸ்னானம், பானம், த்யானம், கானம், ஶரணகதி); ஸ்ரீராமனிடம் பக்தி செலுத்தும் யோகத்தைக் கற்பிக்கும் மாபெரும் நதியானவள்; வங்காளதேஶத்தில் கடலில் கலப்பவள். 57

மங்கல நன்மை புரிபவள் / மங்கல எழில் கொண்டவள்; விண்ணுலக நதியானவள்; கடலலைகளுடன் கலந்திட்ட நதியானவள்; நகரங்களில் கொடியென வளைந்து செல்லும் கங்கை; இவ்வுலகைக் காத்திடும் நதியானவள். 58

வேதகோஷத்தில் விருப்புடை கங்கை; வேதவல்லி; வளைந்து வளைந்து செல்பவள்; 'ஓம்'காரத்தை ஓங்கி ஒலிப்பவள்; இசைப்ரியனான ஶிவனின் மங்களமே நீராகிக் கடலில் கலந்தவள். 59

மதிக்கப்பட வேண்டியவள்; தெய்வீகமான இன்னிசைக் குரலருள்பவள்; காப்பவள்; எழிலுறு மங்கலமாய் ஓடுபவள்; விண்ணினின்று கடலுக்கு ஓடும் மங்கலமானவள்; எழிலுறு தெய்வீகமான நதியானவள். 60

விண்ணுலகைச்சேர்ந்த, மந்தாகினீ எனும் கங்கை; பாதாள உலகில் போகவதி எனும் பெயருடன் ஓடுபவள்; நல்லெழில்/மங்கள ராகங்களாம் விண்ணில் பாயும் கங்கை; மங்களமானவள்; மூவுலகங்களையும் மயக்குபவள். 61

மாலை தீபாரதியில் மகிழ்பவள்; நன்கு பாடப்பட்டவள்; பாட்டை விரும்புபவள்; நல்மங்கலம் வளர்த்தருள்பவள்; அலைகள் நடமிட ஆனந்தம் பொழிபவள்; ஆர்ப்பரிக்கும் நீர்வெள்ளம் கடலே ஆனவள். 62

யதுகுலத்தின் மகிழ்வான தாமரைத்திருமுகத்தோனின் ( ஸ்ரீக்ருஷ்ணனின்) திருவாயினின்று வெளிப்பட்ட கீதையில் இருப்பவள்; மங்கள இன்பமும் உயிர்மூச்சும் அளிப்பவள் / இப்பூமியில் புகழப்பட்டவள்; திருமாலின் மங்கள அருட்செல்வம் பெறச்செய்பவள்; என் அன்னை; சென்றுகொண்டே இருப்பவள்; திருமாலின் மங்களச்சிறப்பே இப்பூமியில் நீராக ப்ரவஹிப்பவள். 63

விஷ்ணுவின் திருவடியினின்று கடலை நோக்கிப் பாய்பவள்; மெய்யறிவின் தூய ஆற்றலுடை போக்கானவள்; விஷ்ணு, லக்ஷ்மியின் மங்களமே

நீரோட்டமாகப் பாய்பவள்; கொடிமேனி கொண்டவள்; நாராயணீ எனும் நாமம் கொண்ட தெய்வீகமானவள்; நீண்டகாலமாக உள்ளவள்; நல்வழி நடத்துபவள்; மங்கள வடிவானவள். 64

சிறந்த ஸ்வரமாலைகளால் அணி செய்யப்பட்டவள்; ராகத்தையே உருவாகக் கொண்டவள்/ வண்ண எழிலுடையவள்; லயமே ஆனவள்; ராகக்கூண்டில் மறைந்திருப்பவள்; பெண்மணிகளால் நன்கு பூஜிக்கப்பட்டவள். 65

மிகச்சிறந்த இசையைத் தன்னுள் கொண்ட கங்கை; தன் திருநாமத்தைப் பாடுதலில் சிறந்தவரை மகிழ்விப்பவள் / தன் திருநாமத்தை பாடும் இப்புதல்வியை மலையில் மகிழ்விப்பவள் / இந்நாமகானத்தில் இருப்பவள், மலையில் மகிழ்வூட்டுபவள் / தன் திருநாமங்களைத் தானே பாடிடும், மலை மகிழ்வானவள்; மாகளிரன்ன மாவீரன்( ஸ்ரீராமன்)தனில் ஒன்றிய ஸத்குரு த்யாகப்ரம்மத்தால் பாடப்பட்டவள் / இனிய புன்னுகவராளி ராகத்தில் பாடப்பட்டவள்; பைரவி; ஸிம்மவாஹனம் கொண்டவள். 66

தன் சிறப்பினுல் உளம் கவர்பவள்; இனியவள்/களிப்பூட்டுபவள்; மங்கள நீர் கொண்டவள்; எழிலினுல் உளங்கவர்பவள்; மங்கள ஒலியுடன் செல்பவள்; சிறப்புடன் ஒன்றியவள்; ஈஶன் உளங்கவர்ந்த கங்கை. 67

ஶிவனின் சென்னிமிசை சிறந்த ஆபரணமாய் உள்ளவள்; முகுந்தனுக்கு இனிய, ராகதேவதையானவள்; வாக்குத்திறனற்ற இப்புதல்வியின் இவ்வன்புவாக்கிற்கு வண்ணமூட்டுபவள்; திறனற்ற இப்புதவியின் இவ்வாக்கின் பண்ணெழிலை வளர்ப்பவள். 68

விரைந்தோடும் நீர்கொண்டவள்; மெல்லினிய குரல் படைத்தவள்; இனிதொலித்தோடும் நீர்கொண்ட முகில்வண்ணத்தினள்; நீரில் நிலவின் கதிர்க்கற்றைகளுடன் ஒளிர்பவள்; பொன்வடிவுடைத்து அழகு, வேகம், தூய்மை, குளிர்ச்சி இந்நான்கு தன்மைகள் கொண்ட பொன் மேனியாள். 69

இச்சொற்களின் இன்னெலியானவள்; இனிய சொல் திறனருள்பவள்; இக்கவிதையில் வேகமாக ப்ரவஹிப்பவள் / கவிதை வேகமாகப் பொழியச் செய்பவள்; குயிலிசை இனிய பாட்டினை மாலையாகக் கொண்டவள்; இத்துதி பாடுபவள் ஒன்றிய இன்னெலிப்போக்கானவள்; மிக மேம்பட்ட குரல்வளம் பெருகிடச் செய்பவள். 70

பண்ணிசைச் சூடாமணியாய் விளங்கும் கங்கை; விண்ணுலக அமுதாம் நீரைப் பொழிபவள்; ராமனுக்குகந்தவள்; அன்புக்குறியவள்; இன்பப்பூங்காவானவள்; நினைத்ததை அருளும் சிந்தாமணியானவள்; சூலம் தரித்த துர்கையானவள். 71

புலரிப்பொழுதின் இளஞ்சிவப்பும் பொன் வண்ணமும் மின்னும் பனி உச்சியைச் சேர்ந்தவள்; பூபால ராகத்தில் பாடப்பட்டவள்; ஷட்ஜமே ஆதாரமான ராகங்களனைத்தின் முழுமையானவள்; இன்னிசை ஒலிகளால் அர்ச்சிக்கப்பட்டவள். 72

ரத்னங்கள் பதித்ததுபோல் மின்னும் எழில் நீர்ப்பரப்புடையவள்; அமுதநீரில் மலை நிலவொளி பளபளப்பவள்/கதிரவனும் தண்மதியும் பளபளப்பவள்; நல்வாக்கின் ஈஶ்வரியான கங்கை; இவ்வாக்கிலும் சொற்களிலும் மகிழ்வடைபவள்/போற்றப்படுபவள். 73

இளவேனிற் பகலவனின் கதிர்கள் அழகாக ஊஞ்சலாடும் நீருடையவள்; நடமிடும் ஒளித்துளிகளால் அணிசெய்யப்பட்டவள்; ஹுஸேனி, பேகடா ராகங்களில் (பாடப்பட்ட) குருஸ்வாமியின் க்ருதிகளில் புன்னகைப்பவள். 74

நல்வீரனை ரகுவீரனல் மிகவும் புகழப்பட்ட, மகிமைகளுக்கிருப்பிடமானவள்; ஸ்ரீக்ருஷ்ணன் கோபிகைகளுடன் வஸந்தகாலத்தில் ஆடிக்களித்திட்டதேபோல் நடமிடும் பலவகை வண்ணங்களின் அழகு கொண்டவள். 75

வஸந்தத்தில் மங்கல எழில் கொண்டவள்; ‘வஸந்தோத்ஸவம்’ எனும் திருவிழாவில் கொண்டாடப்படுபவள்; பேரி, துந்துபி முதலான இசைக்கருவிகளுடனும் மணியோசையுடனும் பூஜிக்கப்பட்டவள். 76

வஸந்தகாலத்தில் ஆற்றலும் இன்பமும் அருவியாய்க் கொட்டுபவள்; திருமாலைச் சேர்ந்த ஒளியுடை கங்கை; முன்காலத்தில் குயில்கள் இன்னிசை கூவிய கரைகளும் நாணல் அடர்ந்த நீர்க்கரையும் கொண்ட நதியானவள். 77

குயில்களின் இன்னிசையில் மகிழ்ந்து பாடும் இப்புதல்விக்கு ப்ரியமானவள்; (இங்கு) பாடப்பட்ட, நல்வழிப்படுத்திடும் அன்னை; இன்னிசைத் தானத்தின் நடை கொண்டவள். 78

வஸந்த காலத்தில் பலவண்ண ஆடைகளில் ஒளிர்பவள்; கோடையில் வெண்ணிறமாய் உளங்கவர்பவள்; ஶரத்காலத்தில் ஒளிமயமாய் உள்ள கங்கை; மழைக்காலத்தில் முகில் வண்ண எழிலுடன் மகிழ்வூட்டுபவள். 79

குளிர்காலத்தில் நீல உடையில் பொன்னாய் மின்னுபவள்; மாலை ஒளியில் பொன்னுடை தரித்தவள்; உலகை மயங்கச்செய்யும் வண்ண எழிலுடையோள்; ஒளிநிழல் எழிலுறு தூயவள்; பார்கவீ. 80

சாயா எனப்படும், எழிலுறு கங்கை; வளைந்து நிழலும் ஒளியும் நடமிடும் நீரோட்டமானவள்; அழகிய பூங்கொடியென வண்ண எழில் கொண்டவள்; இவ்வண்ண உலகில் உள்ள, வலுமிக்கவள். 81

தூய அலைகள் கொண்ட கங்கை; முத்துக்களென ஆடை அணிந்தவள்; பனியே வடிவானவள்; வெள்ளி நிலவொளியில் எழில் மின்னுபவள்; பொன்வெள்ளி எழிலில் உளம் கவர்பவள். 82

அழகிய அலைகள் நிரம்பியவள்; வெண்மை நிறத்தினள்; தூய பளபளக்கும் வெண்மை ஆடை அணிந்தவள்; நீலமணி எழில் கொண்ட கங்கை; பலவண்ணங்களில் மகிழ்வூட்டுபவள் / இந்நூற்றுக்கணக்கான ராகங்களில் மகிழ்பவள். 83

ஶிவனின் அழகிய ஆட்டம் கொண்ட நன்னீருடையவள்; என்றும் புதிய எழில் ஒளிர்பவள்; ஶிவனின் ஆட்டத்துக்கு இன்னிசையானவள்; நிலவின் பொன்வண்ண எழிற்கூத்துடை நீர் கொண்டவள். 84

மிகச்சிறந்த இசைஞராம் ஸத்குரு ஶ்ரீத்யாகப்ரம்மத்தின் இன்னிசைப் பொழிவானவள் / எழில் மலையருவியென இன்னிசை பொழிந்திடச் செய்பவள் / இன்னிசை பாடும் எழிலுறு மலையருவியானவள்; இவ்விசையை விரும்புபவள்; இனிது மொழிபவள்; நல்லெழில் கொண்ட கங்கை; மலையில் விளக்கென ஒளிர்பவள். 85

ஞானமே தன் வடிவான கங்கை; நாராயணனிடமிருந்து பாயும் எழில் நதியானவள்; கரைபுரண்டோடுபவள்; சிறந்த தர்மத்தைத் தெளிவுபடுத்துபவள். 86

கோஸல அரசனான ஶ்ரீராமனால் நன்கு துதிக்கப்பட்டவள்; இத்துதிக் கூட்டங்கள் கொண்டவள்; இத்துதிகளை விரும்புபவள்; தெய்வீகமான இமயத்தினின்று பாய்ந்தோடுபவள்; வண்ண எழில் விளையாடும் அலைகள் கொண்டவள். 87

பற்றுடன் பற்றிக்கொள்ளப் படவேண்டியவள்; சிறந்தவள்; தவசியின் விருப்பானவள்; இந்நற்றுதிகளில் ஒன்றியவள்; இனிப்புகளுடனும் மல்லிகை மலர்களுடனும் ஆரதியுடனும் ஸேவிப்பதான இத்துதிகள் கொண்டவள். 88

உலகைப் பேணிக்காப்பவள்; தனது விரைவான உட்தூண்டலால் உதித்த, தன்னை அழைத்திடும் இத்துதியில் ஒன்றியவள்; இத்துதியை மகிழ்வுடன் ஏற்றுக்கொள்பவள்; ஶிவனை அணிசெய்பவள்; அறிவின்மை இருளிலுதித்த தமோகுணப் பொறிப்புக்களை அழித்திடுபவள்; இன்னிசையுடன் ஶிவனது உடுக்கை ஒலிக்கப் பாயும் இனிய நீர்வீழ்ச்சியானவள். 89

தனித்தன்மை வாய்ந்த நன்னீரினால் / தனித்த இன்பம் நல்கி தன்வயம் செய்திடும் கங்கை; இவ்வுலகு மகிழ்ந்திடும் மகிழ்வானவள்; புதிது புதிதாய் வண்ணங்கள் ஒளிரும் நீரழகு படைத்தவள் / ஶரத்காலத்தில் புத்தொளிர் எழிலுடையவள்; தூய வெண்மையே அடையாளமாகக் கொண்டவள்; ஶிவனுக்குகந்தவள் / இவ்வியனுலகில் விரும்பி ஓடுபவள். 90

தர்பைப்புல்லினால் பகைவரை ஒடுக்குபவனின் [2] திருவடித் தீர்த்தமானவள்; தேவர்களாலும் மகிழப்பட்ட, 'களகள'வென்றொலிக்கும் நீர்வீழ்ச்சியானவள்; மிகச்சிறந்த இசைஞரான ஸத்குரு ஶ்ரீத்யாகப்ரம்மத்தின் குரலான கங்கை / மிகச்சிறந்த தனதொலியே இசையான கங்கை; மங்களத்தைத் தன்னுள்ளடக்கி ப்ரவஹிப்பவள். 91

இறையொளிவட்டம் சூழ் எழிலுறுபவள்; இறைவனும் நாராயணனின்றிழிந்த மங்கலமானவள்; பொன் நீல ஆடை அணிந்த கங்கை; பண்ணெனும் பொன் மலையின் ஈஶ்வரியானவள். 92

மாந்தர்க்குப் புனித தீர்த்தமான நன்னீர் கங்கை; இசை உருவானவள்; லயத்தின் ஆலயமானவள்; இசையின் இதந்தரு அமைதியை நாடும் இவ்வுள்ளத்தில் ஒன்றிட்டவள் / மிகச் சிறந்த ஸாம கானத்தில் ஒன்றியவள்; வீணை இசையில் கமகங்களுடன் பாடப்பட்ட இச்செய்யுட்கள் கொண்டவள். 93

இந்த ஶ்லோகங்களாம் ஆபரணங்கள் பூண்ட கங்கை; இக்கவிதை நல்லெழில்மலர்கள் பூத்துக்குலுங்கும் கொடியானவள்; ஶ்ருதியுடன் இணைந்த பாட்டில் லயமாக இருக்கும் அன்னை; தொடர்ச்சியாய் இவ்விசைமலர்கள் கொத்துக் கொத்தாய்ப் பூத்துக்குலுங்கும் கொடியானவள். 94

இந்த ராக புஷ்பாவளியால் அணிசெய்யப்பட்ட அர்ச்சா மூர்த்தியானவள் / இந்த ராக புஷ்பாவளியால் அர்ச்சிக்கப்பட்டவள் / இன்பமானவள்

[2] ஶ்ரீராமனுகிய திருமால்

/ நறுமணமானவள்; இந்நூற்றுக்கணக்கான இனிய ராகங்களே மாலையாகக் கொண்டவள் / நூற்றுக்கணக்கான இன்பண்மாலைகளால் அணிசெய்யப்பட்டவள்; பாடப்பட்ட இப்பண்களால் இன்புறுபவள் / பாடப்பட்ட இப்பண்களின் - இன்பமானவள்/ நறுமணமானவள்; இந்த ஶ்லோகங்களில் ஒன்றிய ஸ்வர தேவதையானவள். 95

மேலான நிலையைத் தன்னுள் கொண்ட கங்கை; இப்பாத்தொகுப்புக்களே இருப்பிடமாகக் கொண்டவள்; ஸ்ரீமந்நாராயணனைச் சேர்ந்த, இப்புவியில் ஓடும் நன்னீரானவள்; மிக்க மணமுள்ள ஸௌகந்தினி புஷ்பத்தால் அர்ச்சிக்கப்பட்டவள். 96

மெய்யறிவே தன் வடிவாகக் கொண்ட கங்கை; ஸத்துவத்தையும் மெய்யறிவையும் பயிற்றுபவள்; முடிவற்ற இன்பப் பொழிவானவள்; மெய்யறிவும் வீட்டுப் பேறும் அளிப்பவள். 97

(கங்கையைவிட) அதிகம் தூயவர் எவரும் இல்லை; கங்கை மிகவும் புனிதமானவள்; நாராயணனிடமிருந்து வந்த கங்கையைக் காட்டிலும் அதிகமான சிறப்புள்ளவரும் எவரும் இல்லை. 98

நாதவடிவான குருஸ்வாமியின் தெள்ளிய இனிய குரலே கோயிலாகக் கொண்டவள் /குரலில் ஒன்றியவள்; பண்ணும் இறையன்பும் மணம் கூட்டும் இந்த புஷ்பாவளியே புத்தம்புதிய மலர்மாலையாகக் கொண்டவள். 99

மூவுலகங்களையும் மயக்கிடும் கங்கை; பூஜை அறையில் கும்பத்தில் பூஜிக்கப்படுபவள்; மங்களமான மத்யமாவதி எனும் ராகதேவதையானவள்; மங்களதேவியான கங்கை. 100

த்யாகராஜகுருஸ்வாமியின் பாட்டின் பண்ணானவளுக்கு நல்மங்களம்; ஶிஷ்யை புஷ்பாவினால் நல்லன்புடன் பாடப்பட்டவளுக்கு நல்மங்களம். 101

இந்த ஸங்கீதத்துக்கு ஶ்ருதிப்பொழிவானவளுக்கு, இசைப்பண் உள்ளுயிப்பளிப்பவளுக்கு நல்மங்களம்; ஆதாரஶ்ருதியாம் ஷட்ஜத்தை ஒலிப்பவளுக்கு, ‘ஓம்’காரத்தை ஒலிப்பவளுக்கு நல்மங்களம். 102

ரிஷபாரூடனான ஶிவனின் சென்னியிலிருந்திழிபவளுக்கு; இன்னிசையருவியானவளுக்கு நல்மங்களம்; இப்பண்ணிசை வரிசையே தன் நீரின் போக்காகக் கொண்டவளுக்கு, இன்னிசை கங்கைக்கு நல்மங்களம். 103

பண்ணிசை பொழியும் நீர் வெள்ள அருவியானவளுக்கு, இசைமாலை பூண்டவளுக்கு நல்மங்களம்; இன்னிசை வீணையில் பொழிபவளுக்கு, நடுநிலைமை கொண்டவளுக்கு நல்மங்களம். 104

எழிலுறு இன்னிசையால் இன்குரலில் பாடப்பட்டவளுக்கு, வளமிக்கவளுக்கு நல்மங்களம்; இந்த ஶ்லோக அருவியே உறைவிடமாகக் கொண்டவளுக்கு, பேரின்பத்துடன் கூடியவளுக்கு நல்மங்களம். 105

இவ்வன்புப் பண்ணின் வண்ண எழிலானவளுக்கு; இப்பண்ணினை தன்னுள் கொண்டவளுக்கு / இப்பண்ணினை ஊட்டி வளர்ப்பவளுக்கு நல்மங்களம்; ராகத்திலும் தாளத்திலும் ஒன்றியவளுக்கு / ராகதாளத்தின் ஒய்வமைதி அளிப்பவளுக்கு; ராகதேவிக்கு நல்மங்களம். 106

பண்ணிசை/வண்ண எழில் இமயத்துதித்தவளுக்கு மங்களம்; எழில்நடை கொண்டவளுக்கு / இசைநடை கொண்டவளுக்கு / இப்பண்ணின் பாட்டானவளுக்கு நல்மங்களம். பண்ணிசை இன்பக் கடலானவளுக்கு மங்களம்; கங்கா தேவிக்கு நல்மங்களம். 107

இப்பண்ணிசை மாலையினால் அணிசெய்யப்பட்டவளுக்கு மங்களம்; ராகதேவதைக்கு நல்மங்களம். வீட்டுப்பேறடையச்செய்பவளுக்கு மங்களம்; கங்கா தேவிக்கு நல்மங்களம். 108

மங்களம்

ஸ்ரீ:

ஓம் ஸத்குரு ஸ்ரீ த்யாகராஜஸ்வாமிக்கு மீண்டும் மீண்டும் நமஸ்காரம்.

# ஸ்ரீ கங்காப்ரமாணிகாஸ்துதி.

இமயத்தின் செல்வப்புதல்வியானவள்; தண்ணியவள்; பனிப்பொழிவு வெள்ளமானவள்; வெண்பனித்தூய அமுதநீர் கொண்டவள்; பனிநதியானவள்; அழகினிய கங்கை. 1

பனிக்கோயிலில் உள்ள தெய்வமானவள்; நன்கறியப்பட்ட மிகத்தூய நீர் கொண்டவள்; பனிமலைப்பொழிவாம் கவிதை அருவியானவள்; இவ்வினிய கவிப்பொழிவை அருளியவள். 2

திருமகள்மணாளனின் திருவடியினின்று நடமிடும் நீர் கொண்டவள்; உமையின் கேள்வனின் சென்னிநீரானவள்; திருமகள்மகிழ்வாம் மாதவன் மகிழும் நீர்வெள்ளமானவள்; உமையை மகிழ்விக்கும் ஶிவனுக்கு மகிழ்வூட்டும் நீர்கொண்டவள். 3

இனிய நாதத்தின் ஸாரமாம் அமுதகானம் இசைப்பவள்; இன்னொலி முழங்கி விரைந்தோடுபவள்; இனிய நாதத்துடன் அர்ச்சிக்கப்பட்ட மங்களமானவள்; துதிக்கப்பட்ட, இசைநடைகொண்ட விண்ணுலகநதியானவள். 4

ஏழிசை ஒலிகளால் செய்யப்படும் இந்த அர்ச்சனையில் மகிழ்பவள்; இசைநடைகொண்டவள்; விஷ்ணுவின் திருவடித்தீர்த்தமான, வளமிக்க நீர்ப்பொழிவானவள்; இசையொலிப்பொழிவானவள்; தெய்வீகநதியானவள். 5

இன்பண்ணிசை வண்ண எழில் நடைகொண்டவள்; என்றும் மங்களமானவள்; வைரமென மின்னும் நீர் கொண்டவள்; அமுதவெள்ளமானவள்; மிக்க மகிழ்வளிக்கும் நீர் கொண்டவள்; விண்ணுலக வெள்ளமானவள்; மங்கல நீரானவள். 6

இந்த இசையொலியாகவும் எழுத்தாகவும் இருப்பவள்; அசைவனவாகவும் அசையாதனவாகவும் இருப்பவள்; என்றும் கெடாத நீர் கொண்டவள்; இந்த நல்வாக்கில் ப்ரவஹிப்பவள்; மங்கலமான ப்ரணவமாக இருப்பவள்; நல்லொளிகொண்ட நீர் படைத்தவள்; ஓய்வமைதி அளிக்கும் நீர் கொண்டவள்; பேரின்பநிலை நல்கும் நன்னீர் கொண்டவள். 7

பிறவி இன்றிச்செய்பவள்; ஶிவனுக்குகந்தவள்; வரமளிக்கும் மங்கல நதியானவள்; என்றும் மகிழ்வளிக்கும் அன்னை; எப்போதும் அர்ச்சிக்கப்பட்டவள்; மேலான இறைவி. 8

அன்புடன் பாடப்பட்ட அன்னை; அழகிய இவ்வண்ண மலர்மாலை கொண்டவள்; மங்கல எழிலினிமை கூத்தாடும் நீர் கொண்டவள் / மிகச்சிறந்த இமய- மலையினின்று இனிமை கூத்திடும் நீர் கொண்டவள்; பற்றின்மையும் வீட்டுப்பேறும் அளிப்பவள். 9

தீவினையை அழித்திடும் இறைவி; விடுதலைப்பேறளிக்கும் அன்னை; மங்களமானவள்; நன்கு துதிக்கப்பட்டவள்; நற்பேறளிப்பவள்; நல் மங்களம் நல்குபவள். 10

குருவருளால் துதிக்கப்பட்டவள்; குருமகிழும் இப்பாட்டுக்க்கள் உடையவள்; குருவின் உட்தூண்டலால் அர்ச்சிக்கப்பட்டவள்; குருவினால் தானே செய்யப்பட்ட இவ்வர்ச்சனை கொண்டவள். 11

மங்களம்

List of Rāgas occurring in *Śrī Gaṅgā Rāgapushpāvalī*

| S.No. | Rāga | | | Śloka No. |
|---|---|---|---|---|
| 1. | राग | *Rāga* | ராக | 1 |
| 2. | आन्दोलिका | *Āndolikā* | ஆந்தோளிகா | 7 |
| 3. | वरम् | *Varam* | வரம் | 9 |
| 4. | शङ्कराभरणम् | *Śaṅkarābharaṇam* | ஶங்கராபரணம் | 10 |
| 5. | हिन्दोलम् | *Hindolam* | ஹிந்தோளம் | 13 |
| 6. | मोहन नाट | *Mohana Nāṭa* | மோஹன நாட | |
| 7. | गङ्गातरङ्गिणी | *Gaṅgātaraṅgiṇī* | கங்காதரங்கிணி | |
| 8. | काम्भोजि | *Kāmbhoji* | காம்போஜி | 14 |
| 9. | हरिकाम्भोजि | *Harikāmbhoji* | ஹரிகாம்போஜி | |
| 10. | भैरवम् | *Bhairavam* | பைரவம் | |
| 11. | नटभैरवी | *Naṭabhairavī* | நடபைரவி | |
| 12. | आनन्दभैरवी | *Ānandabhairavī* | ஆனந்தபைரவி | 15 |
| 13. | तोडी | *Toḍī* | தோடி | |
| 14. | धन्यासी | *Dhanyāsī* | தன்யாஸி | |
| 15. | गौरी | *Gaurī* | கௌரி | |
| 16. | खरहरप्रिया | *Kharaharapriyā* | கரஹரப்ரியா | |
| 17. | भौली | *Bhaulī* | பௌளி | 16 |
| 18. | कल्याणी | *Kalyāṇī* | கல்யாணி | |
| 19. | स्वरभूषणी | *Svarabhūṣaṇī* | ஸ்வரபூஷணி | |
| 20. | गम्भीरवाणि | *Gambhīravāṇi* | கம்பீரவாணி | |
| 21. | कुसुमाकरम् | *Kusumākaram* | குஸுமாகரம் | |

| 22. | सुधातरङ्गिणी | *Sudhātaraṅgiṇī* | ஸுதாதரங்கிணி | 17 |
|---|---|---|---|---|
| 23. | भूषावली | *Bhūṣāvalī* | பூஷாவளி | |
| 24. | सुमद्युति | *Sumadyuti* | ஸுமத்யுதி | |
| 25. | बिलहरि | *Bilahari* | பிலஹரி | |
| 26. | गानवारिधि | *Gānavāridhi* | கானவாரிதி | |
| 27. | मोहनम् | *Mohanam* | மோஹனம் | 18 |
| 28. | फेनद्युति | *Phenadyuti* | பேனத்யுதி | |
| 29. | झङ्कारध्वनि | *Jhaṅkāradhvani* | ஜங்காரத்வனி | |
| 30. | गम्भीरनाट | *Gambhīranāṭa* | கம்பீரநாட | |
| 31. | नटनारायणी | *Naṭanārāyaṇī* | நடநாராயணி | 20 |
| 32. | रञ्जनी | *Rañjanī* | ரஞ்ஜனி | |
| 33. | शिवरञ्जनी | *Śivarañjanī* | ஶிவரஞ்ஜனி | |
| 34. | मनोरञ्जनी | *Manorañjanī* | மனோரஞ்ஜனி | |
| 35. | श्रीरञ्जनी | *Śrīrañjanī* | ஸ்ரீரஞ்ஜனி | |
| 36. | निरञ्जनी | *Nirañjanī* | நிரஞ்ஜனி | |
| 37. | दीपकम् | *Dīpakam* | தீபகம் | 21 |
| 38. | सुरटि | *Suraṭi* | ஸுரடி | |
| 39. | श्रुतिरञ्जनी | *Śrutirañjanī* | ஶ்ருதிரஞ்ஜனி | |
| 40. | कान्तिमती | *Kāntimatī* | காந்திமதி | |
| 41. | चित्तरञ्जनी | *Cittarañjanī* | சித்தரஞ்ஜனி | |
| 42. | सूर्यकान्तम् | *Sūryakāntam* | ஸூர்யகாந்தம் | 22 |
| 43. | धौतपञ्चमम् | *Dhautapañcamam* | தௌதபஞ்சமம் | |
| 44. | छायातरङ्गिणी | *Chāyātaraṅgiṇī* | சாயாதரங்கிணி | |
| 45. | श्रीमती | *Śrīmatī* | ஸ்ரீமதி | |

| | | | | |
|---|---|---|---|---|
| 46. | जनरञ्जनी | *Janarañjanī* | ஜனரஞ்ஜனி | 22 |
| 47. | उमाभरणम् | *Umābharaṇam* | உமாபரணம் | 23 |
| 48. | मालवी | *Mālavī* | மாளவி | |
| 49. | स्वररञ्जनी | *Svararañjanī* | ஸ்வரரஞ்ஜனி | |
| 50. | कमास् | *Kamās* | கமாஸ் | |
| 51. | माररञ्जनी | *Mārarañjanī* | மாரரஞ்ஜனி | |
| 52. | वलजु | *Valaju* | வலஜு | 24 |
| 53. | गायकरञ्जनी | *Gāyakarañjanī* | காயகரஞ்ஜனி | |
| 54. | वरुणप्रिया | *Varuṇapriyā* | வருணப்ரியா | |
| 55. | रसिकरञ्जनी | *Rasikarañjanī* | ரஸிகரஞ்ஜனி | |
| 56. | सुधाम्बोधि | *Sudhāmbodhi* | ஸுதாம்பொதி | 25 |
| 57. | भाग्यश्री | *Bhāgyaśrī* | பாக்யஸ்ரீ | |
| 58. | स्मररञ्जनी | *Smararañjanī* | ஸ்மரரஞ்ஜனி | |
| 59. | सञ्जीवनी | *Sañjīvanī* | ஸஞ்ஜீவனி | |
| 60. | सुधालहरि | *Sudhālahari* | ஸுதாலஹரி | |
| 61. | आरभी | *Ārabhī* | ஆரபி | 26 |
| 62. | मन्दारी | *Mandārī* | மந்தாரி | |
| 63. | मञ्जरी | *Mañjarī* | மஞ்ஜரி | |
| 64. | हरिकेदारगौल | *Harikedāragaula* | ஹரிகேதாரகௌள | |
| 65. | फलमञ्जरी | *Phalamañjarī* | பலமஞ்ஜரி | |
| 66. | रागमञ्जरी | *Rāgamañjarī* | ராகமஞ்ஜரி | 27 |
| 67. | स्वरवर्धनी | *Svaravardhanī* | ஸ்வரவர்தனி | |
| 68. | यागप्रिया | *Yāgapriyā* | யாகப்ரியா | |
| 69. | नादविनोदिनी | *Nādavinodinī* | நாதவினோதினி | 28 |

| | | | | |
|---|---|---|---|---|
| 70. | धातुवर्धनी | *Dhātuvardhanī* | தாதுவர்தனி | 28 |
| 71. | नाटकप्रिया | *Nāṭakapriyā* | நாடகப்ரியா | |
| 72. | हाटकामबरी | *Hāṭakāmabarī* | ஹாடகாமபரி | |
| 73. | षण्मुखप्रिया | *Ṣaṇmukhapriyā* | ஷண்முகப்ரியா | 29 |
| 74. | ऋषभप्रिया | *Ṛṣabhapriyā* | ரிஷபப்ரியா | |
| 75. | रुद्रप्रिया | *Rudrapriyā* | ருத்ரப்ரியா | |
| 76. | मुखारी | *Mukhārī* | முகாரி | |
| 77. | देवमनोहरी | *Devamanoharī* | தேவமனோஹரி | |
| 78. | जयन्तश्री | *Jayantaśrī* | ஜயந்தஶ்ரீ | 30 |
| 79. | गाङ्गेयभूषणी | *Gāṅgeyabhūṣaṇī* | காங்கேயபூஷணி | |
| 80. | झञ्जूटि | *Jhañjūṭi* | ஜஞ்ஜூடி | |
| 81. | चन्द्रज्योति | *Candrajyoti* | சந்த்ரஜ்யோதி | |
| 82. | मनोहरी | *Manoharī* | மனோஹரி | |
| 83. | पूर्णललिता | *Pūrṇalalitā* | பூர்ணலலிதா | 31 |
| 84. | अठाणा | *Aṭhāṇā* | அடாணா | |
| 85. | तीव्रवाहिनी | *Tīvravāhinī* | தீவ்ரவாஹினி | |
| 86. | पाटि | *Pāṭi* | பாடி | |
| 87. | रसाली | *Rasālī* | ரஸாளி | |
| 88. | रसिकप्रिया | *Rasikapriyā* | ரஸிகப்ரியா | |
| 89. | हंसध्वनि | *Haṃsadhvani* | ஹம்ஸத்வனி | 32 |
| 90. | हंसनादम् | *Haṃsanādam* | ஹம்ஸநாதம் | |
| 91. | नादचिन्तामणि | *Nādacintāmaṇi* | நாதசிந்தாமணி | |
| 92. | अमृतवर्षिणी | *Amṛtavarṣiṇī* | அமிர்தவர்ஷிணி | |
| 93. | सारमती | *Sāramatī* | ஸாரமதி | 33 |

| | | | | |
|---|---|---|---|---|
| 94. | मार्गदेशी | *Mārgadeśī* | மார்கதேஶி | 34 |
| 95. | सारङ्ग | *Sāraṅga* | ஸாரங்கா | |
| 96. | कोकिलारवम् | *Kokilāravam* | கோகிலாரவம் | |
| 97. | विजयश्री | *Vijayaśrī* | விஜயஶ்ரீ | 34 |
| 98. | बलहंस | *Balahaṃsa* | பலஹம்ஸ | |
| 99. | केसरी | *Kesarī* | கேஸரி | |
| 100. | जयनारायणी | *Jayanārāyaṇī* | ஜயநாராயணி | |
| 101. | मलहरि | *Malahari* | மலஹரி | |
| 102. | नलिनकान्ति | *Nalinakānti* | நளினகாந்தி | 35 |
| 103. | वसन्तभैरवी | *Vasantabhairavī* | வஸந்தபைரவி | |
| 104. | वराली | *Varālī* | வராளி | |
| 105. | ललिता | *Lalitā* | லலிதா | |
| 106. | वाचस्पति | *Vācaspati* | வாசஸ்பதி | |
| 107. | सौराष्ट्रम् | *Saurāṣṭram* | ஸௌராஷ்ட்ரம் | 36 |
| 108. | नारायणी | *Nārāyaṇī* | நாராயணி | |
| 109. | गुरुप्रिया | *Gurupriyā* | குருப்ரியா | |
| 110. | शुद्धभङ्गाल | *Śuddhabhaṅgāla* | ஶுத்தபங்காள | |
| 111. | हंसानन्दी | *Haṃsānandī* | ஹம்ஸானந்தி | |
| 112. | नन्दालका | *Nandālakā* | நந்தாலகா | 37 |
| 113. | सिंहेन्द्रमध्यमम् | *Siṃhendramadhyamam* | ஸிம்மேந்த்ரமத்யமம் | |
| 114. | मल्लार | *Mallāra* | மல்லார | |
| 115. | बदरी | *Badarī* | பதரி | |
| 116. | तुङ्गनाग | *Tuṅganāga* | துங்கநாக | |
| 117. | ओंकारी | *Oṃkārī* | ஓம்காரி | 38 |

| | | | | |
|---|---|---|---|---|
| 118. | सुचरित्र | *Sucaritra* | ஸுசரித்ர | 38 |
| 119. | भागीरथी | *Bhāgīrathī* | பாகீரதி | |
| 120. | गोमुखी | *Gomukhī* | கோமுகி | |
| 121. | नादस्वरूपिणी | *Nādasvarūpiṇī* | நாதஸ்வரூபிணி | |
| 122. | नादतरङ्गिणी | *Nādataraṅgiṇī* | நாததரங்கிணி | |
| 123. | देवीसिंहारवम् | *Devīsiṃhāravam* | தேவிஸிம்ஹாரவம் | 39 |
| 124. | सालकभैरवी | *Sālakabhairavī* | ஸாளகபைரவி | |
| 125. | रामकलि | *Rāmakali* | ராமகலி | |
| 126. | नाटकुरञ्जि | *Nāṭakurañji* | நாடகுரஞ்ஜி | |
| 127. | गौरीवेलावली | *Gaurīvelāvalī* | கௌரீவேளாவளி | 40 |
| 128. | पूर्वी | *Pūrvī* | பூர்வி | |
| 129. | देवक्रिया | *Devakriyā* | தேவக்ரியா | |
| 130. | रघुप्रिया | *Raghupriyā* | ரகுப்ரியா | |
| 131. | देवगान्धारी | *Devagāndhārī* | தேவகாந்தாரி | |
| 132. | स्तवराज | *Stavarāja* | ஸ்தவராஜ | |
| 133. | जङ्गल | *Jaṅgala* | ஜங்கள | 41 |
| 134. | झङ्कारभ्रमरी | *Jhaṅkārabhramarī* | ஜங்காரப்ரமரி | |
| 135. | दिव्यमणि | *Divyamaṇi* | திவ்யமணி | |
| 136. | छायानाट | *Chāyānāṭa* | சாயாநாட | |
| 137. | बिन्दुमालिनी | *Bindumālinī* | பிந்துமாலினி | |
| 138. | नवरत्नविलासम् | *Navaratnavilāsam* | நவரத்னவிலாஸம் | 42 |
| 139. | नभोमणि | *Nabhomaṇi* | நபோமணி | |
| 140. | मणिरङ्ग | *Maṇiraṅga* | மணிரங்கு | |
| 141. | किरणावली | *Kiraṇāvalī* | கிரணாவளி | |

| | | | | |
|---|---|---|---|---|
| 142. | कलानिधि | *Kalānidhi* | கலாநிதி | 43 |
| 143. | श्री | *Śrī* | ஸ்ரீ | |
| 144. | माधवमनोहरी | *Mādhavamanoharī* | மாதவமனோஹரி | |
| 145. | मार्गहिन्दोलम् | *Mārgahindolam* | மார்கஹிந்தோளம் | |
| 146. | श्रीमणि | *Śrīmaṇi* | ஸ்ரீமணி | |
| 147. | कन्नट | *Kannaṭa* | கன்னட | |
| 148. | ज्योतिः | *Jyotiḥ* | ஜ்யோதி | 44 |
| 149. | वर्धनी | *Vardhanī* | வர்தனி | |
| 150. | ज्योतिस्स्वरूपिणी | *Jyotissvarūpiṇī* | ஜ்யோதிஸ்வரூபிணி | |
| 151. | शैलदेशाक्षी | *Śailadeśākṣī* | ஶைலதேஶாக்ஷி | 45 |
| 152. | मलयमारुतम् | *Malayamārutam* | மலயமாருதம் | |
| 153. | रीतिगौल | *Rītigaula* | ரீதிகௌள | |
| 154. | गौल | *Gaula* | கௌள | |
| 155. | नादवराङ्गिणी | *Nādavarāṅgiṇī* | நாதவராங்கிணி | 46 |
| 156. | ऊर्मिका | *Ūrmikā* | ஊர்மிகா | |
| 157. | चारुकेशी | *Cārukeśī* | சாருகேஶி | |
| 158. | नादनामक्रिया | *Nādanāmakriyā* | நாதநாமக்ரியா | |
| 159. | वनस्पति | *Vanaspati* | வனஸ்பதி | |
| 160. | धेनुका | *Dhenukā* | தேனுகா | 47 |
| 161. | नायकी | *Nāyakī* | நாயகி | |
| 162. | धर्मवती | *Dharmavatī* | தர்மவதி | |
| 163. | द्विजावन्ती | *Dvijāvantī* | த்விஜாவந்தி | |
| 164. | नवनीतम् | *Navanītam* | நவனீதம் | |
| 165. | स्वरावली | *Svarāvalī* | ஸ்வராவளி | |

| | | | | |
|---|---|---|---|---|
| 166. | हेमवती | *Hemavatī* | ஹேமவதி | 48 |
| 167. | साम | *Sāma* | ஸாம | |
| 168. | नागाभरणम् | *Nāgābharaṇam* | நாகாபரணம் | |
| 169. | भवानी | *Bhavānī* | பவானி | |
| 170. | चलनाट | *Calanāṭa* | சலநாட | |
| 171. | जयमनोहरी | *Jayamanoharī* | ஜயமனோஹரி | |
| 172. | कन्नटगौल | *Kannaṭagaula* | கன்னடகௌள | 49 |
| 173. | कीरवाणि | *Kīravāṇi* | கீரவாணி | |
| 174. | केदारम् | *Kedāram* | கேதாரம் | |
| 175. | सुप्रदीपम् | *Supradīpam* | ஸுப்ரதீபம் | |
| 176. | कोकिलध्वनि | *Kokiladhvani* | கோகிலத்வனி | |
| 177. | मोहनकल्याणी | *Mohanakalyāṇī* | மோஹனகல்யாணி | 50 |
| 178. | सरस्वतीमनोहरी | *Sarasvatīmanoharī* | ஸரஸ்வதிமனோஹரி | |
| 179. | शुद्धसीमन्तिनी | *Śuddhasīmantinī* | ஶுத்தஸீமந்தினி | |
| 180. | आभोगी | *Ābhogī* | ஆபோகி | |
| 181. | कनकाङ्गि | *Kanakāṅgi* | கனகாங்கி | |
| 182. | गमनाश्रम | *Gamanāśrama* | கமனாஶ்ரம | 51 |
| 183. | पूर्णचन्द्रिका | *Pūrṇacandrikā* | பூர்ணசந்த்ரிகா | |
| 184. | चक्रवाकम् | *Cakravākam* | சக்ரவாகம் | |
| 185. | अमृतवाहिनी | *Amṛtavāhinī* | அமிர்தவாஹினி | |
| 186. | गुर्झरी | *Gurjharī* | குர்ஜரி | 52 |
| 187. | बहुदारी | *Bahudārī* | பஹுதாரி | |
| 188. | कामवर्धनी | *Kāmavardhanī* | காமவர்தனி | |
| 189. | विवर्धनी | *Vivardhanī* | விவர்தனி | |

| | | | | |
|---|---|---|---|---|
| 190. | प्रतापवराली | *Pratāpavarālī* | ப்ரதாபவராளி | 53 |
| 191. | सिद्धसेना | *Siddhasenā* | ஸித்தஸேனா | |
| 192. | तरङ्गिणी | *Taraṅgiṇī* | தநங்கிணி | |
| 193. | हंसभ्रमरी | *Haṃsabhramarī* | ஹம்ஸப்ரமரி | |
| 194. | बृन्दावनी | *Bṛndāvanī* | ப்ருந்தாவனி | |
| 195. | कलावती | *Kalāvatī* | கலாவதி | |
| 196. | सेनावती | *Senāvatī* | ஸேனாவதி | 54 |
| 197. | चन्द्रश्री | *Candraśrī* | சந்த்ரஸ்ரீ | |
| 198. | रागवाहिनी | *Rāgavāhinī* | ராகவாஹினி | |
| 199. | हंसगीर्वाणि | *Haṃsagīrvāṇi* | ஹம்ஸகீர்வாணி | |
| 200. | माधुर्य | *Mādhurya* | மாதுர்ய | |
| 201. | चिन्मय | *Cinmaya* | சிந்மய | |
| 202. | हरिनारायणी | *Harinārāyaṇī* | ஹரிநாராயணீ | 55 |
| 203. | धात्री | *Dhātrī* | தாத்ரி | |
| 204. | शुद्धदेशी | *Śuddhadeśī* | ஶுத்ததேஶி | |
| 205. | काशीरामक्रिया | *Kāśīrāmakriyā* | காஶீராமக்ரியா | |
| 206. | नामदेशी | *Nāmadeśī* | நாமதேஶி | |
| 207. | रविक्रिया | *Ravikriyā* | ரவிக்ரியா | |
| 208. | यमुनाकल्याणी | *Yamunākalyāṇī* | யமுனாகல்யாணி | 56 |
| 209. | सैन्धवी | *Saindhavī* | ஸைந்தவி | |
| 210. | सिन्धुभैरवी | *Sindhubhairavī* | ஸிந்துபைரவி | |
| 211 | परस् | *Paras* | பரஸ் | 57 |
| 212. | षड्विधमार्गिणी | *Ṣaḍvidhamārgiṇī* | ஷட்விதமார்கிணி | |
| 213. | सिन्धुरामक्रिया | *Sindhurāmakriyā* | ஸிந்துராமக்ரியா | |

| | | | | |
|---|---|---|---|---|
| 214. | बङ्गाल | *Baṅgāla* | பங்காள | 57 |
| 215. | देश् | *Deś* | தேஶ் | |
| 216. | भद्रश्री | *Bhadraśrī* | பத்ரஶ்ரீ | 58 |
| 217. | सुरसिन्धु | *Surasindhu* | ஸுரஸிந்து | |
| 218. | सिन्धुतरङ्गिणी | *Sindhutaraṅgiṇī* | ஸிந்துதரங்கிணி | |
| 219. | नागरी | *Nāgarī* | நாகரி | |
| 220. | नागवल्ली | *Nāgavallī* | நாகவல்லி | |
| 221. | भूपालतरङ्गिणी | *Bhūpālataraṅgiṇī* | பூபாலதரங்கிணி | |
| 222. | वेदघोषप्रिया | *Vedaghoṣapriyā* | வேதகோஷப்ரியா | 59 |
| 223. | वेदवल्ली | *Vedavallī* | வேதவல்லி | |
| 224. | भुजङ्गिणी | *Bhujaṅgiṇī* | புஜங்கிணி | |
| 225. | नादप्रिया | *Nādapriyā* | நாதப்ரியா | |
| 226. | गवाम्भोधि | *Gavāmbhodhi* | கவாம்போதி | |
| 227. | ओंकारघोषिणी | *Oṃkāraghoṣiṇī* | ஓம்காரகோஷிணி | |
| 228. | मानिनी | *māninī* | மானினீ | 60 |
| 229. | देवगीर्वाणी | *Devagīrvāṇī* | தேவகீர்வாணி | |
| 230. | पालिनी | *Pālinī* | பாலினி | |
| 231. | सुप्रवाहिणी | *Supravāhiṇī* | ஸுப்ரவாஹிணி | |
| 232. | हमीरकल्याणी | *Hamīrakalyāṇī* | ஹமீரகல்யாணி | |
| 233. | दिव्यतरङ्गिणी | *Divyataraṅgiṇī* | திவ்யதரங்கிணி | |
| 234. | मन्दाकिनी | *Mandākinī* | மந்தாகினி | 61 |
| 235. | भोगवती | *Bhogavatī* | போகவதி | |
| 236. | रागकेसरी | *Rāgakesarī* | ராககேஸரி | |
| 237. | भद्रा | *Bhadrā* | பத்ரா | |

| | | | | |
|---|---|---|---|---|
| 238. | भुवनमोहिनी | *Bhuvanamohinī* | புவனமோஹினி | 62 |
| 239. | रतिप्रिया | *Ratipriyā* | ரதிப்ரியா | |
| 240. | गीतप्रिया | *Gītapriyā* | கீதப்ரியா | |
| 241. | सुपोषिणी | *Supoṣiṇī* | ஸுபோஷிணி | |
| 242. | कोलाहलम् | *Kolāhalam* | கோலாஹலம் | |
| 243. | जलार्णवम् | *Jalārṇavam* | ஜலார்ணவம் | |
| 244. | यदुकुलकाम्भोजि | *Yadukulakāmbhoji* | யதுகுலகாம்போஜி | 63 |
| 245. | सहाना | *Sahānā* | ஸஹாநா | |
| 246. | मालवश्री | *Mālavaśrī* | மாளவஶ்ரீ | |
| 247. | मायामालवगौल | *Māyāmālavagaula* | மாயாமாளவகௌள | |
| 248. | सावेरी | *Sāverī* | ஸாவேரி | 64 |
| 249. | शुद्धसावेरी | *Śuddhasāverī* | ஶுத்தஸாவேரி | |
| 250. | असावेरी | *Asāverī* | அஸாவேரி | |
| 251. | लताङ्गि | *Latāṅgi* | லதாங்கி | |
| 252. | नामनारायणी | *Nāmanārāyaṇī* | நாமநாராயணி | |
| 253. | जीवन्तिनी | *Jīvantinī* | ஜீவந்தினி | |
| 254. | शुभाङ्गि | *Śubhāṅgi* | ஶுபாங்கி | |
| 255. | नागस्वरावली | *Nāgasvarāvalī* | நாகஸ்வராவளி | 65 |
| 256. | रूपवती | *Rūpavatī* | ரூபவதி | |
| 257. | रागपञ्जरम् | *Rāgapañjaram* | ராகபஞ்ஜரம் | |
| 258. | कान्तामणि | *Kāntāmaṇi* | காந்தாமணி | |
| 259. | नागगान्धारी | *Nāgagāndhārī* | நாககாந்தாரி | 66 |
| 260. | नागनन्दिनी | *Nāganandinī* | நாகநந்தினி | |
| 261. | पुन्नागवराली | *Punnāgavarālī* | புன்னாகவராளி | |

| | | | | |
|---|---|---|---|---|
| 262. | भैरवी | *Bhairavī* | பைரவி | 67 |
| 263. | सिंहवाहिनी | *Siṃhavāhinī* | ஸிம்ஹவாஹினி | |
| 264. | रमामनोहरी | *Ramāmanoharī* | ரமாமனோஹரி | |
| 265. | कमलामनोहरी | *Kamalāmanoharī* | கமலாமனோஹரி | |
| 266. | शुभपन्थुवराली | *Śubhapanthuvarālī* | ஶுபபந்துவராளி | |
| 267. | ईशमनोहरी | *Īśamanoharī* | ஈஶமனோஹரி | |
| 268. | कुन्तलवराली | *Kuntalavarālī* | குந்தலவராளி | 68 |
| 269. | रागिणी | *Rāgiṇī* | ராகிணி | |
| 270. | रागवर्धनी | *Rāgavardhanī* | ராகவர்தனி | |
| 271. | आहिरी | *Āhirī* | ஆஹிரி | 69 |
| 272. | कलकण्ठी | *Kalakaṇṭhī* | கலகண்டி | |
| 273. | कल्गड | *Kalgaḍa* | கல்கட | |
| 274. | श्यामलाङ्गि | *Śyāmalāṅgi* | ஶ்யாமளாங்கி | |
| 275. | जयन्तसेना | *Jayantasenā* | ஜயந்தஸேனா | |
| 276. | स्वर्णाङ्गि | *Svarṇāṅgi* | ஸ்வர்ணாங்கி | |
| 277. | चतुरङ्गिणी | *Caturaṅgiṇī* | சதுரங்கிணி | |
| 278. | सरस्वती | *Sarasvatī* | ஸரஸ்வதி | 70 |
| 279. | वेगवाहिनी | *Vegavāhinī* | வேகவாஹினி | |
| 280. | कोकिलवराली | *Kokilavarālī* | கோகிலவராளி | |
| 281. | गौलीपन्थु | *Gaulīpanthu* | கௌளிபந்து | |
| 282. | जिङ्गल | *Jiṅgala* | ஜிங்கள | |
| 283. | रागचूडामणि | *Rāgacūḍāmaṇi* | ராகசூடாமணி | 71 |
| 284. | देवामृतवर्षिणी | *Devāmṛtavarṣiṇī* | தேவாமிர்தவர்ஷிணி | |
| 285. | रामप्रिया | *Rāmapriyā* | ராமப்ரியா | |

| | | | | |
|---|---|---|---|---|
| 286. | चिन्तामणि | *Cintāmaṇi* | சிந்தாமணி | 72 |
| 287. | शूलिनी | *Śūlinī* | சூலினி | |
| 288. | माञ्जि | *Māñji* | மாஞ்ஜி | |
| 289. | भूपालम् | *Bhūpālam* | பூபாளம் | |
| 290. | पूर्णषड्जम् | *Pūrṇaṣaḍjam* | பூர்ணஷட்ஜம் | |
| 291. | सङ्गीतम् | *Saṅgītam* | ஸங்கீதம் | |
| 292. | रत्नाङ्गि | *Ratnāṅgi* | ரத்னாங்கி | 73 |
| 293. | रविचन्द्रिका | *Ravicandrikā* | ரவிசந்த்ரிகா | |
| 294. | वागधीश्वरी | *Vāgadhīśvarī* | வாகதீஶ்வரி | |
| 295. | गदनकुतूहलम् | *Gadanakutūhalam* | கதனகுதூஹலம் | |
| 296. | हिन्दोलवसन्तम् | *Hindolavasantam* | ஹிந்தோளவஸந்தம் | 74 |
| 297. | नटाभरणम् | *Naṭābharaṇam* | நடாபரணம் | |
| 298. | हुसेनी | *Husenī* | ஹுஸேனி | |
| 299. | बेगड | *Begaḍa* | பேகட | |
| 300. | सौवीरम् | *Sauvīram* | ஸௌவீரம் | 75 |
| 301. | गोपिकावसन्तम् | *Gopikāvasantam* | கொபிகாவஸந்தம் | |
| 302. | कल्याणवसन्तम् | *Kalyāṇavasantam* | கல்யாணவஸந்தம் | 76 |
| 303. | आभेरी | *Ābherī* | ஆபேரி | |
| 304. | ढक्का | *Ḍhakkā* | டக்கா | |
| 305. | घण्टारवम् | *Ghaṇṭāravam* | கண்டாரவம் | |
| 306. | वीरवसन्तम् | *Vīravasantam* | வீரவஸந்தம் | 77 |
| 307. | मालवपञ्चमम् | *Mālavapañcamam* | மாளவபஞ்சமம் | |
| 308. | पूर्वपञ्चमम् | *Pūrvapañcamam* | பூர்வபஞ்சமம் | |
| 309. | शरावती | *Śarāvatī* | ஶராவதி | |

| | | | | |
|---|---|---|---|---|
| 310. | कोकिलप्रिया | *Kokilapriyā* | கோகிலப்ரியா | 78 |
| 311. | गायकप्रिया | *Gāyakapriyā* | காயகப்ரியா | |
| 312. | नीतिमती | *Nītimatī* | நீதிமதி | |
| 313. | तानरूपी | *Tānarūpī* | தானரூபி | |
| 314. | चित्राम्बरी | *Citrāmbarī* | சித்ராம்பரி | 79 |
| 315. | वसन्ता | *Vasantā* | வஸந்தா | |
| 316. | गौरीमनोहरी | *Gaurīmanoharī* | கௌரீமனோஹரி | |
| 317. | भानुमती | *Bhānumatī* | பானுமதி | |
| 318. | मेघरञ्जनी | *Megharañjanī* | மேகரஞ்ஜனி | |
| 319. | नीलाम्बरी | *Nīlāmbarī* | நீலாம்பரி | 80 |
| 320. | कनकाम्बरी | *Kanakāmbarī* | கனகாம்பரி | |
| 321. | जगन्मोहनम् | *Jaganmohanam* | ஜகன்மோஹனம் | |
| 322. | छायागौरी | *Chāyāgaurī* | சாயாகௌரி | 81 |
| 323. | भार्गवी | *Bhārgavī* | பார்கவி | |
| 324. | छायावती | *Chāyāvatī* | சாயாவதி | |
| 325. | भोगच्छायानाट | *Bhogacchāyānāṭa* | போகச்சாயாநாட | |
| 326. | पुष्पलतिका | *puṣpalatikā* | புஷ்பலதிகா | |
| 327. | छायागौल | *Chāyāgaula* | சாயாகௌள | |
| 328. | पल्लवम् | *Pallavam* | பல்லவம் | |
| 329. | शुद्धवेलावली | *śuddhavelāvalī* | ஶுத்தவேளாவளி | 82 |
| 330. | मुक्ताम्बरी | *Muktāmbarī* | முக்தாம்பரி | |
| 331. | हिमाङ्गि | *Himāṅgi* | ஹிமாங்கி | |
| 332. | रागचन्द्रिका | *Rāgacandrikā* | ராகசந்த்ரிகா | |
| 333. | कान्ति | *Kānti* | காந்தி | |

| | | | | |
|---|---|---|---|---|
| 334. | रागमनोहरी | *Rāgamanoharī* | ராகமனோஹரி | 83 |
| 335. | पूर्णपञ्चमम् | *Pūrṇapañcamam* | பூர்ணபஞ்சமம் | |
| 336. | कल्लोलम् | *Kallolam* | கல்லோலம் | |
| 337. | धवलाम्बरी | *Dhavalāmbarī* | தவலாம்பரீ | |
| 338. | श्यामचिन्तामणि | *Śyāmacintāmaṇi* | ஶ்யாமசிந்தாமணி | |
| 339. | रागविनोदिनी | *Rāgavinodinī* | ராகவினோதினி | |
| 340. | कानड | *Kānaḍa* | கானடா | 84 |
| 341. | पञ्चमम् | *Pañcamam* | பஞ்சமம் | |
| 342. | नवभासुरा | *Navabhāsurā* | நவபாஸுரா | |
| 343. | सारङ्गनाट | *Sāraṅganāṭa* | ஸாரங்கநாட | |
| 344. | इन्दुसारङ्गनाट | *Indusāraṅganāṭa* | இந்துஸாரங்கநாட | |
| 345. | नागपञ्चमम् | *Nāgapañcamam* | நாகபஞ்சமம் | 85 |
| 346. | गानप्रिया | *Gānapriyā* | கானப்ரியா | |
| 347. | सुभाषिणी | *Subāṣiṇī* | ஸுபாஷிணி | |
| 348. | लावण्यवती | *Lāvaṇyavatī* | லாவண்யவதி | |
| 349. | हंसदीपकम् | *Haṃsadīpakam* | ஹம்ஸதீபகம் | |
| 350. | ज्ञानस्वरूपिणी | *Jñānasvarūpiṇī* | ஞானஸ்வரூபிணி | 86 |
| 351. | छायानारायणी | *Chāyānārāyaṇī* | சாயாநாராயணி | |
| 352. | कूलङ्कष | *Kūlaṅkaṣa* | கூலங்கஷ | |
| 353. | स्रवन्ती | *Sravantī* | ஸ்ரவந்தீ | |
| 354. | धर्मप्रकाशिनी | *Dharmaprakāśinī* | தர்மப்ரகாஶினீ | |
| 355. | कोसलम् | *Kosalam* | கோஸலம் | 87 |
| 356. | मेघ | *Megha* | மேக | |
| 357. | स्तुतिप्रिया | *Stutipriyā* | ஸ்துதிப்ரியா | |

| | | | | |
|---|---|---|---|---|
| 358. | देवमुखारी | *Devamukhārī* | தேவமுகாரி | 87 |
| 359. | रङ्गलीला | *Raṅgalīlā* | ரங்கலீலா | |
| 360. | सालगम् | *Sālagam* | ஸாலகம் | 88 |
| 361. | महती | *Mahatī* | மஹதி | |
| 362. | तापसप्रिया | *Tāpasapriyā* | தாபஸப்ரியா | |
| 363. | जालवराली | *Jālavarālī* | ஜாலவராளி | |
| 364. | गौडमल्लार | *Gauḍamallāra* | கௌடமல்லார | |
| 365. | विश्वम्भरी | *Viśvambharī* | விஶ்வம்பரி | 89 |
| 366. | जुजाहूली | *Jujāhūlī* | ஜுஜாஹூளி | |
| 367. | सरसाङ्गी | *Sarasāṅgī* | ஸரஸாங்கி | |
| 368. | वकुलाभरणम् | *Vakulābharaṇam* | வகுளாபரணம் | |
| 369. | आन्धाली | *Āndhālī* | ஆந்தாளி | |
| 370. | गरुडध्वनि | *Garuḍadhvani* | கருடத்வனி | |
| 371. | कैकवशी | *Kaikavaśī* | கைகவஶி | 90 |
| 372. | कुरञ्जि | *Kurañji* | குரஞ்ஜி | |
| 373. | कुतूहलम् | *Kutūhalam* | குதூஹலம் | |
| 374. | नवरोज् | *Navaroj* | நவரோஜ் | |
| 375. | धवलाङ्कम् | *Dhavalāṅkam* | தவளாங்கம் | |
| 376. | भवप्रिया | *Bhavapriya* | பவப்ரிய | |
| 377. | दर्बार् | *Darbār* | தர்பார் | 91 |
| 378. | देवरञ्जि | *Devarañji* | தேவரஞ்ஜி | |
| 379. | गुञ्जरी | *Guñjarī* | குஞ்ஜரி | |
| 380. | नागध्वनि | *Nāgadhvani* | நாகத்வனி | |
| 381. | रेवगुप्ति | *Revagupti* | ரேவகுப்தி | |

| | | | | |
|---|---|---|---|---|
| 382. | हंसप्रभावली | *Haṃsaprabhāvalī* | ஹம்ஸப்ரபாவளி | 92 |
| 383. | हंसनारायणी | *Haṃsanārāyaṇī* | ஹம்ஸநாராயணி | |
| 384. | हंसनीलाम्बरी | *Haṃsanīlāmbarī* | ஹம்ஸநீலாம்பரி | |
| 385. | हंसगिरि | *Haṃsagiri* | ஹம்ஸகிரி | |
| 386. | मानवती | *Mānavatī* | மானவதி | 93 |
| 387. | गानमूर्ति | *Gānamūrti* | கானமூர்த்தி | |
| 388. | गानसामवराली | *Gānasāmavarālī* | கானஸாமவராளி | |
| 389. | गमकक्रिया | *Gamakakriyā* | கமகக்ரியா | |
| 390. | भूषावती | *Bhūṣāvatī* | பூஷாவதி | 94 |
| 391. | रसमञ्जरी | *Rasamañjarī* | ரஸமஞ்ஜரி | |
| 392. | श्रुति | *Śruti* | ஶ்ருதி | |
| 393. | सन्तानमञ्जरी | *Santānamañjarī* | ஸந்தானமஞ்ஜரி | |
| 394. | धामवती | *Dhāmavatī* | தாமவதி | 96 |
| 395. | निषदम् | *Niṣadam* | நிஷதம் | |
| 396. | नारायणगौल | *Nārāyaṇagaula* | நாராயணகௌள | |
| 397. | सौगन्धिनी | *Saugandhinī* | ஸௌகந்தினி | |
| 398. | चित्स्वरूपिणी | *Citsvarūpiṇī* | சித்ஸ்வரூபிணி | 97 |
| 399. | ज्ञानबोधिनी | *Jñānabodhinī* | ஞானபோதினி | |
| 400. | अनन्त | *Ananta* | அனந்தம் | |
| 401. | मुक्तिदायिनी | *Muktidāyinī* | முக்திதாயினி | |
| 402. | कापि | *Kāpi* | காபி | 98 |
| 403. | पावनी | *Pāvanī* | பாவனி | |
| 404. | कापिनारायणी | *Kāpinārāyaṇī* | காபிநாராயணி | |
| 405. | नादरूपी | *Nādarūpī* | நாதரூபி | 99 |

| | | | | |
|---|---|---|---|---|
| 406. | तारवम् | *Tāravam* | தாரவம் | 99 |
| 407. | नवमालिका | *Navamālikā* | நவமாலிகா | |
| 408. | जगन्मोहिनी | *Jaganmohinī* | ஜகன்மோஹினி | |
| 409. | कुम्भिनी | *Kumbhinī* | கும்பினி | |
| 410. | मध्यमावती | *Madhyamāvatī* | மத்யமாவதி | |
| 411. | मङ्गलकैशिकी | *Maṅgalakaiśikī* | மங்களகைஶிகி | |